தமிழ் வேதாந்தம்

# அஞ்ஞவதைப் பரணி மூலமும், உரையும்.






உ
சிவமயம்
ஓம் தத் சத்
பரப் பிரஹ்மணே நம.

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்
அருளிய

# அஞ்ஞவதைப் பரணி மூலமும்,

கோவிலூர் மடம் திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் சீடராகிய ஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகளின் சீடரும், சாத்தூர் வேதாந்த மடத்தின் தலைவருமாகிய

**ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமி**
அவர்கள் இயற்றிய

# அத்துவைதானந்த விளக்கம்

என்னும் உரையும்.

இஃது குமாரபாளையம் ஆனந்தாஸ்ரமத்தின்
2-வது தலைவர் உயர்திருவாளர்

**V. R. S. இராமசாமி செட்டியார்**

அவர்களால் ஷை ஆனந்தாஸ்ரமத்தின் 309-வது மாதம் அந்தர்யோகத்தில் வெளியிடப்பெற்றது.

உரிமை ஆனந்தாஸ்ரமம் தலைவருக்கே } 16-7-1989

அடக்க விலை ரூ. 20-00

முதல் பதிப்பு: 1980



# அஞ்ஞவதைப் பரணி மூலமும் அத்துவைதானந்த விளக்கம் என்னும் உரையும்.

அடக்க விலை ரூ. 20-00

கிடைக்கும் இடம்:

ஸ்ரீலஸ்ரீ-பிரம்மானந்த சுவாமிகள்,
198, சத்தார வீதி, ஸ்ரீரங்கம். (P. O.)

தவத்திரு. சோம. கோபால சுவாமி,
ஆனந்தாஸ்ரமம், எடப்பாடி ரோடு,
குமாரபாளையம்-638 183.
சேலம்-மா-வட்டம்.

அச்சிட்டோர்:

ஸ்ரீ ஷண்முகா பிரஸ், குமாரபாளையம்.

# அஞ்ஞவதைப் பரணி உரைக்கு

## முன்னுரை

இந்நில வுலகம் செய்த புண்ணியத்தால் தமிழ் நாட்டில் மாமனும், மருமகனுமாக இரண்டு சிவப்பிராமணர்கள் அவதரித்தனர். அவ்விருவருள் சொரூபானந்தர் மாமனும், தத்துவராயர் மருமகனுமாவர். இவர்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவராய் முத்தி விருப்புற்று விகிதகுருவைத் தேடியலுத்த பின்னர், அவ் விருவரும் ஓர் ஒப்பந்தம் செய்தனர். அஃது யாதெனின், நாமிருவரும் தனித்தனியாகக் குருவைத் தேடுவோம்; யாருக்கு முதலில் குருவருள் கிட்டுமோ அவர்களே குருவாயிருந்து உபதேசிக்க வேண்டியது என்பதாம். தத்துவராய சுவாமிகள் வடக்கும், சொரூபானந்த சுவாமிகள் தெற்கும் நோக்கிப் புறப்பட்டனர். அப்படி வரும்போது சொரூபானந்த சுவாமிகள் பூர்வ நிஷ்காம புண்ணிய மிகுதியால், திருவெள்ளாரை திருப்பஞ்சலி எனும் க்ஷேத்திரங்களுக் கிடையில் சமீபமாகவுள்ள கோபத்தருடியென்னும் சிற்றூறில் ஆற்றங்கரையில் நாணற்புதரில் சிவப்பிரகாச சுவாமிகள் ஞான நிஷ்டையில் இருக்கக்கண்டு சரணடைந்தவுடன், கடலிலுள்ள சிப்பி சுவாதி நட்சத்திர மழைத்துளியை உட்கொண்டு முத்து விளைந்தது போல்; சொரூபானந்த சுவாமிகள் உபதேசம் பெற்று சுவாநுபவப் பேறடைந்தார்கள் அதைக் கண்ட தத்துவராய சுவாமிகள், காயா பழமா என்று வினவ, ''பழந்தான்'' என்று கூறித் தத்துவராய சுவாமிகளுக்குத் தத்துவ ஞானத்தை உபதேசித்தனர். உடனே தத்துவராய சுவாமிகள், கூடம் அக்கினியைப் பற்றியது போல, பிரம்மாநுபவத்தைப் பற்றிய மனம் பிரம்மானந்தத்தில் அமர்திருக்கத்தான் தத்துவராய சுவாமிகளுக்கு விருப்பம் என்பதை அறிந்த சொரூபானந்த சுவாமிகள் ''கல்வியாலும், கேள்வியாலும், சுவானுபவத்தாலும் சிறந்த இவனால் உலகத்திற்கு உபகாரமுண்டாகவில்லையே'' என்ற கிருபையால்; ஒரு நாள், தத்துவராயா! நாம ஒரு தைலம் தேய்த்துக்கொள்ள வேண்டும், என்று உரைத்த போது,

இன்று அமாவாசை என்று வார்த்தையை நிறுத்திக் கொண்டார். அதைக் கேட்ட சொரூபானந்த சுவாமிகள், அமாவாசை யென்று காலங் கடந்த எனக்குக் காலங்கற்பித்த நீ குருத்துரோகி ஆயினை! எனக்கு முன் நில்லாதே போ! போ!? வென்று வெறுத்துக் கூறினர். அது கேட்ட தத்துவராய சுவாமிகள், சிரத்தில் கரங்குவித்து கண்களில் நீர்பெறுக தோத்திரம் பண்ண ஆரம்பித்தார். உடனே சொரூபானந்த சுவாமிகள் மற்ற சீடரை நோக்கி ''அவன் பாடுவதை பின் சென்று எழுதுங்கள்'' என்று உத்தரவிட்டனர். தத்துவராய சுவாமிகள் சற்குரு சந்நிதியை நோக்கிய வண்ணமாக கால் பின்பு எடுத்து வைத்து நடக்க ஆரம்பித்தார். அப்படி நடப்பதைக் கண்ட மரம், மடுக்கள், மாநகரங்கள் விலகி வழி விட ஆரம்பித்தன. திருவருள் பெற்றவர்க்கு ஆகாததொன்றுண்டா? இதை அறிந்த அடியார்கள், சொரூபானந்த சுவாமிகளுக்கு விண்ணப்பஞ் செய்ய சுவாமிகள் திருவுள்ளமிரங்கி, ''அந்த குருவுக்கு வீங்கியை அழையுங்கள்'' என அவ்வழைப்பிற்கிணங்கித் திரும்பி வரும் போதும் பாடிக் கொண்டு வந்தார். மேலும், பாடுதுரை, ''அடங்கல் முறை'' பாடும் போது; ''மோகவதைப் பரணி'' ''அஞ்ஞவதைப் பரணி'' யையும் பாடினர்.

இன்னும், வானில் இயங்கும் நட்சத்திரக் கூட்டங்களில், அசுவினி முதல் ரேவதி வரை 27 நட்சத்திரக் கூட்டங்கள் பிரதானமாயுள்ளன. இவற்றுள் இரண்டாம் கூட்டம் பரணி. இக்கூட்டம் ஆயுதஎழுத்துப் போலிருக்கும் அது, மூன்று நட்சத்திரமாகும். ''பரணியில் பிறந்தான் தரணியாள்வான்'' எனப் பழமொழியும் உண்டு. சமையலுக்கு பரணியன்று அடுப்பு போடுவதும் உண்டு. பரணி நாள் கொடும் செயல்களுக்கு உரியதென்று மக்களுக்கு நம்பிக்கையும் உண்டு.

பெரும் போர் முடிந்ததும் பரணி நாளில் பேய்கள் போர்க்களத்திலேயே கூழ் சமைத்து தேவிக்குப் படைத்துத் தாமும் உண்டு ஆடிப்பாடி வாழ்த்துவதை சிறப்பு நிகழ்ச்சியாகக் கொண்டது பரணி காவியம். இதில், 1) கடவுள் வாழ்த்து எல்லோரும் நலமாயிக்க வேண்டுமென்று

கடவுளைப் பிரார்திப்பது. 2) கடைதிறப்பு. போரில் வென்ற வீரன் வெற்றி மாலையை அணிந்து வரும்போது; கதவைத் திறந்து அவரை வரவேற்பு செய்யவும், அவருடைய வெற்றி விழாவில் பங்கு கொண்டு மகிழ்வதற்கும் புலவர்கள் பெண்களுக்குக் கூறுவதாகும். அதில் பலவிதமான பெண்களின் அழகும், காதலனின் வீரமும், அன்பின் பெருக்கமும், ஆக இரு விதமாகப் பிரித்துக் கூறுவதாம். "எந்தப் போர்" என்ற வினா எழுவதியற்கை! அவ்வினாவிற்கு விடை காண சில பகுதிகளைக் கடந்து செல்லவேண்டும்.

கூழ் உண்டவை, பசியால் வருந்திய பேய்கள், மற்றும் உள்ள அப்பேய்களுடன் காளியிருக்கும் காட்டையும், அவளுடைய கோயிலையும், அங்குள்ள பரிவாரத்தையும், பல வகைப் பேய்களையும் பாடி, தேவியின் திருவுருவத்தையும், திருவோலக்கத்தையும், பாடும் பகுதிகள் தொடர்ந்து வரும். திரு ஓலக்கத்தில் சில பேய்கள் சால வித்தைகள் செய்யும்; பல பேய்கள் தம் பசிப் பிணியை விண்ணப்பிக்கும். எங்கு போர் நிகழுமோ, எங்கு அழிவுண்டாகுமோ என, ஏங்கிக் கிடப்பன அப்பேய்கள். அவ்விதம் ஏங்கும் சமயத்தில் ஒரு கிழக்கூனிப்பேய் வந்து எங்கோ ஓர் போர் நிகழ்ந்தது எனக் கூறக்கேட்ட பேய்க் கணங்கள் மகிழ்ந்து கூத்தாடும். தேவி கையமர்த்தி அந்த முது பேயினைப் பார்த்து, "போர் நிகழ்ச்சியைக் கூறுவாயாக" என, அப்பேய், அப் போருக்குக் காரணமான அப் போர்த் தலைவன் பிறந்து வளர்ந்ததையும், நடந்த போர் இந்தத் தகைமையதெனக் கூறும். அவைகளைக் கேட்ட காளியும் பேய்களும் போர்க் களம் காணச் செல்லுவார்கள். சென்று அங்குள்ள இரத்த வெள்ளத்தில் சில் அமிழ்ந்தாடும், சில பிணமலை மேலேறி விளையாடும், சில மாமிசத்தை ஆடையாக அணியும். மாமிசத்தையும், மூளையையும் மற்றுள்ளதையும் கொண்டு கூழ் சமைத்து ஒருவருக்கொருவர் பரிமாறியுண்டு, காளிதேவியின் புகழையும், போர் தந்தவன் புகழையும் பாடி வாழ்த்துவதோடு காவியம் முடியும்.

காவியத்தின் முக்கிய நிகழ்ச்சிகளாகிய போரையும், பரணிக் கூழையும் கூறுவதற்கு ஆசிரியர்; தம்

நூலை நான்கு பகுதிகளாகக் கொள்வர். முதல் பகுதி கடவுள் வாழ்த்து, கடைத் திறப்பு, இரண்டாம் பகுதி, காளியும், பேய்களும், மூன்றாம் பகுதி, போர்த் தலைவனும், போரும், நான்காம் பகுதி, மீண்டும் காளியும், பேய்களும் களம் கண்டு கூழ் சமைத்தல், இடுதல். இவ்வமைப்பு எல்லா பரணிகளுக்கும் பொதுவாகும். மேலும், கலிங்கத்துப் பரணி, தக்கயாகப் பரணி, இரணியவதைப் பரணி, பாசவதைப் பரணி இவைகள் யாவும்; புறப் பொருளைக் கற்பித்துப் படிப்பவர்க்குச் சொல் நயம், பொருள் நயம் காட்டி சந்தோஷப் படுத்துவனவாம்.

இவ் வஞ்ஞவதைப் பரணியின் சிறப்பு இயாதெனின், தத்துவராய சுவாமிகள் அகக் கற்பனையாகத் தனது குருநாதன், விவேகாதி சற் குணங்களைப் படைகளாகவும், கிருபையால் உபதேசித்த ஞானத்தை ஞான வேந்தனாகவும், தனது காமாதி துர்க்குணங்களை ஞான வேந்தன் படைகள் அழித்ததென்றும், ஞானமாகிய வேந்தனால் தனது அஞ்ஞானம் அழிந்ததென்றும், அதனால் இந்த வுலகத்தில், இந்தக் காலத்திலேயே, இந்தச் சரீரத்தில் சீவன் முத்தனாக இருக்கிறோம். இதையறிந்த மற்றவர்களும் அடையலாம். மற்றவர்களுக்கும் சொல்லலாம் என்ற இந் நூல்; சொல்லாலும், பொருளாலும், நயம்பட இருப்பதைக் கண்ட புறநோக்குள்ள புலவோர்கள் வந்து, சுவாமிகளைக் கண்டு, "ஆயிரம் யானைகளை வென்ற வீரனுக்குப் பாடும் பரணியை ஒரு சாதுவிற்குப் பாடலாமா?" என்று கேட்க அதற்கு எனது குருநாதன் ஆயிரக் கணக்கான அகங்கார மத யானைகளை அழித்ததால் பாடலாமெனக் கூற, அந்தப் புலவர்கள், ஒருவர் அகங்காரத்தை யழிக்கப் பல காலமாகுமே ஆயிரக் கணக்கான அகங்காரங்களை எப்படியழிக்க முடியும்? என, சொரூபானந்த சுவாமிகள் திருஷ்டி படும் படி புலவர்களுடன் சுவாமிகள் சமாதியில் அமர்ந்திருக்க, 3 நாள் வரையும் எழவில்லை. சுவாமிகளின் கிருபையால் எழுந்த பின் எல்லோரும் வாழ்த்தி வணங்கிச் சென்றனர்.

இவ்வித மகிமை வாய்ந்த இந்த நூலைச் சிரத்தையோடு உலோபகாரமாக குமாரபாளையம் ஆனந்தாஸ்ரம

வெளியீடாக அச்சிட்டு உதவி செய்த ஷை ஆனந்தாஸ்ரமத்தின் தலைவர் உயர்திருவாளர் V. R. S. இராமசாமி செட்டியார் அவர்களுக்கு ஈஸ்வரக் கிருபையால் எல்லா நலன்களும் உண்டாகும்படிப் பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு,

**ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்,**

*198, சத்தார வீதி,*

*ஸ்ரீரங்கம்.*

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

முன்னைநற் சுருதியோதி முடிவுறற் கரியதாய
வின்மைத் தேவர்முவ ரெய்துதற்கிட ரேமேவத்
தன்னையிப் படியேகாணத் தாளளித்தெனக் கோர்வார்த்தை
சொன்னநற் சொரூபானந்தச் சோதியைத்தொழு
தல்செய்வாம்.

---

உகந்த தேசிகனே போற்றி உண்மையை உரைக்கும் எங்கள்
மிகுந்த முத்தி ராம போற்றி மிகுதுற விறையே போற்றி
தகுமணு மலையே போற்றி சார்மகா தேவ போற்றி
சுகந்தரு சோம சுந்தர தேசிக போற்றி போற்றி.



உ

சிவமயம்

மாமுகன் குமரன் ஈசன் மாலயன் மங்கை பாகன்
பூமகள் எனதுளத்தில் பூரண வாழ்வு நல்கி
நாமகள் நாவில் நின்று ஞானத்தால் வீடு நல்கி
சேமம தளிக்கும் வண்ணம் திருவடி போற்று கின்றேன்.

வேதத்தை அருளால் செய்த வியாச மாமுனியே போற்றி
பேதத்தை யறுத்து ஞானப் பேரர சளித்தான் என்றும்
போதத்தை வடிவாய்க் கொண்டப் புனிதனாம் சங்க ரன்தன்
பாதத்தைப் போற்றி வாழப் பாக்கியம் என்செய் தோமோ.

கோவிலூர் முத்து ராமக் கொன்றவன் பாதம் போற்றும்
ஏவலன் அருணா சலன்றன் இளவலாம் சிதம்ப ரேசன்
பாவலன் பதங்கள் போற்றும் பரமசற் குருவாய் வந்தென்
காவலன் திருக்க ளர்க்கோர் கற்பகத் தடிகள் போற்றி.

பொருளிலாப் பொருளை யெல்லாம் பொருளென இருந்த வென்னை
மருளிலா ஈசன் வந்து மாசில்பொன் னம்ப லவனாய்
இருளிலா இன்ப வீட்டில் ஏற்றிவைத் தின்பந் தந்து
அருளினல் ஆண்டு கொண்ட அடியிணைப் போற்றி செய்வாம்.

அஞ்சலென் றடைந்தோர்க் கீசன் அருளிய ஞானத் தீயால்
பஞ்சென அஞ்ஞன் மாளப் பரணிக்கோர் உரைசெய் தீய்ந்தேன்
வஞ்சகப் பேத வாத மயலறக் கற்றோர் கேட்டோர்
துஞ்சுதல் ஒழித்தே யின்பத் துரியவாழ் வடையப் பெற்ளுேர்.

---

திருவருளால் ஈசன் திறம்பரவும் நல்லோர்
குருவருளால் மெய்யுணர்வைக் கொண்டே-ஒருபொருளாய்த்
தன்னை அறிந்தால் தலைவனுய்ப் பேரின்பாய்ப்
பின்னமிலா வீடுறுவர் பேசு.

---

உ
ஓம் தத் சத்
சிவமயம்.

# பாராட்டுரை.

அன்ன வாகனனும் அயன் படைப்பாம் இவ்வுலகில் எழுவகைப் பிறப்புள்ளும் மனிதப் பிறப்பு மிக உயர்ந்தது. இந்த மனித சரீரத்தில் உள்ள மனம், புண்ணிய பரிபாகத்தால் பகுத்தறியும் ஆற்றல் உடைத்தாகிச் சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம் பூரணமாய் இருக்கின்ற காரணத்தால் சீவர்கள், முறையே மரணத்தை வெறுக்கிறார்கள். அறிவை மிகுதியாகப் பெற விரும்புகிறார்கள், மேலான இன்பத்தையே கருதுகிறார்கள். அழியாமல் உள்ள பெரிதையே அடைய விரும்புகிறார்கள். ஆனல், அதற்கான வழிமுறைகள் தெரியாமல் தவருன பாதைகளையே சரியானவைகள் என்று நிச்சயித்துச் செயல் படுகின்றார்கள். இதனல் விஷம் கலந்த பாலைப் போல துக்கங் கலந்த அல்ப சுகத்தையே பெறுகிறார்கள்.

சரியான பாதையைக் காட்டுவது உபநிஷத்துக்கள் எனப்படும் வேதாந்தமே ஆகும். இவ் வேதாந்தம் சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய சீவன் முத்திப் பயனை அடைய நேரான வழியைக் காட்டுகிறது. இவ் வழியைப் பின்பற்றிச் செல்ல வேண்டுமென்றால், சீவர்கள் தங்களிடையே உள்ள கீழானதும், துக்கத்திற்கு ஏதுவானதுமான இராத் துவேசாதி குணங்களைக் கெடுத்து, மேலானதும், சுகத்திற்கு ஏதுவானதுமான உதாசீனமாதி உயர் குணங்களைச் சம்பாதிக்க வேண்டும். இந்த விபரங்களை எல்லாம் நமக்கு எடுத்துக் காட்டிச் சீவர்களை பரிபக்குவம் ஆக்க வேண்டும். என்னும் பெருங் கருணையால் ஸ்ரீ சொரூபானந்த சுவாமி என்னும் திடஞானியாம் கருணமூர்த்தி தத்துவக் கல்விக் கடலாக விளங்கிய ஸ்ரீ தத்துவராயர் எனும் தமது சீடரை ''அஞ்ஞவதைப் பரணி'' என்னும் நூலை ஆக்கும்படிச் செய்தார்.

இந் நூல் கோவிலூர் சம்பிரதாய பாடங்கள் 16-ல்

ஒன்றாகும். இது. முமுட்சுக்களுக்கு இன்றி அமையாத நல்ல உயர்ந்த நூலானாலும், உரையின்றிப் படித்தறியும் தரம ன்று!? இதனை உணர்ந்த கோவிலூர் சம்பிரதாய சுவாமிகளில் கல்வி மிக்க சிலர் உரை எழுதியுள்ளார்கள். அந்த உரைகள் அச்சு வர்கனம் ஏறும்லே உள்ளன. ஆனால், நமது கோவிலூர் மரபு ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் எழுதிய இந்த உரையே அச்சாகி இப்பொழுது வெளி வந்து உள்ளது. ஷை நூலுக்கு நமது தமிழகத்தில் இதுவே முதல் உரையாகும்.

ஷை உரையாசிரியர் ஷை நூலாசிரியரான ஸ்ரீ தத்து வராய சுவாமிகளால் எழுதப்பட்ட பல நூற்களில் முதன்மை யாக விளங்கும் "பிரம்ம கீதை" என்னும் நூலுக்கும் பர மாத் வைத பரமாக உரை ஆற்றியுள்ளார்கள். இன்னும் வேதாந்த சூடாமணி, கைவல்லிய நவநீதம் ஆகிய நூற் களுக்கும் உரை ஆக்கம் செய்துள்ளார்கள்.

மற்றும், மருகல் அந்தாதி, மருகல் மாலை, சிக்கல் சிங்கார வேலர் அந்தாதி, திருவரங்கர் கட்டளைக் கலித்துறை அந்தாதி, திருவரங்கம் வெண்பா அந்தாதி, அரங்க நாயகி அந்தாதி ஆகிய பக்தி ரசம் ததும்பும் நூல்களையும் படைத்து வெளியிட்டுள்ளார்கள். மேலும், பல இடங்களில் வேதாந்த பாடங்களை நடத்தி, அத்வைதக் கருத்துக்களை மக்களிடையே பரப்பியுள்ளார்கள். இன்னுரை வேதாந்த உலகம் நன்கு அறியும். இந்த அஞ்ஞவதைப் பரணியைப் பற்றிய விளக்கத் தைத் தமது முன்னுரையில் கூறியுள்ளார்கள்.

மிகச் சிரமப்பட்டு எழுதிய இவ்வுரை நூலை குமார பாளையம் ஆனந்தாஸ்ரம வெளியீடாக வெளி வருவதற்குச் சம்மதித்தது உலகுபகாரமே யன்றி வேறில்லை. இதே போல நமது ஆனந்தாஸ்ரமத் தலைவர் உயர் திருவாளர் V. R. S. இராமசாமி செட்டியார் அவர்களும் இந்த உரை நூலை வெளியிடுவது ஆன்மீகத் துறைக்குச் செய்யும் சேவை யாகும் என்று எடுத்துச் சொன்னதைக் கேட்ட மாத்திரத் திலேயே அச்சுப் போடச் செய்து வெளியாக்கியுள்ளார்கள் என்பதும் உலக உபகாரமே அன்றி வேறில்லை. ஷை

செட்டியார் அவர்கள் மேலும், ஆனந்தாஸ்ரம ஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீ இராமசாமி சுவாமி அவர்களது "பிரார்த்தனை மாலை" அடக்க விளக்கும் ஷ்டி சுவாமிகளின் "அருள் மொழிகள்" எனும் நூல்களை இலவச வெளியீடுகளாகவும் கொடுத்துள்ளார்கள்.

தவிர, ஷ்டி நமது ஆனந்தாஸ்ரமத்தில் வருடந் தோரும் குருபூசையும், மாணவர் இந்துமத ஆன்மீகப் பயிற்சி முகாமும், ஸ்ரீ சங்கர ஜெயந்தி விழாவும், மாதந் தோரும் அந்தர் யோகமும், வாரந் தோரும் தேவாரப் பாடமும், தினந்தோரும் கோவிலூர் சம்பிரதாய வேதாந்த பாடமும், நடந்துவர ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள். மற்றும், நமது ஆனந்தாஸ்ரம வளர்ச்சிக்காக தலைவருக்கு உறுதுணையாக நின்று பணியாற்றும் உப தலைவரும், பெரும் தொழில் அதிபருமான திருவாளர் J. K. K. முனிராஜா M. TECH அவர்கள், போஷகரும் ஸ்ரீ ஆண்டாள் & கம்பெனி உரிமையாளருமான திருவாளர் R. S. இராஜு B. E. அவர்கள், காரியதரிசி திரு R. கிருஷ்ணமூர்த்தி குருசாமி அவர்கள், உபகாரியதரிசி திரு K. K. ஆறுமுகம் அவர்கள் ஆகியவர்களது ஆன்மீகச் சேவைகளைக் குறித்து மிகவும் பாராட்ட வேண்டி இருத்த லால், கடமையின் காரணமாகப் பெரிதும் பாராட்டுகிறோம். அன்னவர்களின் ஆயுள் விருத்திக்காகவும், இஷ்ட சித்திகள் நிறைவேறுவதற்காகவும் சர்வ வல்லமை பொருந்திய மாயா விஷிட்ட சேதனமான ஈசுவரனைப் பேரருள் செய்ய வேண்டு மென்று பிரார்த்தித்துக் கொள்கின்றோம்.

நன்றியும் வாழ்த்துக்களும் உரியனவாகுக.

எனவே ஆன்மீக நாட்டமுள்ள அனைவர்களும் நாடக பாணியிலே அமைக்கப்பட்டுள்ள இந்த நூலை வாங்கிப் படித்து ஆன்மீகப் பெரும் பயனுன பரமசாந்தி யைப் பெற வேண்டிக் கேட்டுக் கொள்கின்றனம்.

இப்படிப் பாராட்டுரை எழுதப் பணித்த இறைய ருளுக்கு அநேக நமஸ்காரங்கள் உரித்தாகுக.

| | |
|---|---|
| 1—6—1989 | சுபம் சுபம் சுபம் |
| ஆனந்தாஸ்ரமம் | |
| எடப்பாடி ரோடு, | வேணும் ஸ்ரீ சற்குரு நாதன் துணை. |
| குமாரபாளையம். | |
| சேலம் மா-வட்டம். | **சோம. கோபால சுவாமி.** |

சிவமயம்

# பொருள் அடக்கம்.

# ஸ்ரீ நாராயண சரஸ்வதி சுவாமிகள்

## முதலாவது தலைவர்



ஆனந்தாஸ்ரமம்

குமாரபாளையம்.

தோற்றம்: 1901 சமாதி: 9 6-1980

உயர்திருவாளர்

## V. R. S. இராமசாமி செட்டியார்

இரண்டாவது தலைவர்,



ஆனந்தாஸ்ரமம், எடப்பாடி ரோடு,
குமாரபாளையம்-638 183.



உ

# ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள்

ஸ்ரீ அஞ்ஞவதைப் பரணி உரை ஆசிரியர்

ஸ்ரீரங்கம்

சிவமயம்

ஓம் தத் சத் பரப்பிரஹ்மணே நம :

ஸ்ரீ மகா கணபதியே நம :

# அஞ்ஞவதைப் பரணி மூலமும் அத்துவைதாநந்த விளக்க உரையும்

## கடவுள் வணக்கம்.

1. படைப்பானும் வியன்ஞாலம் காக்கு மாழிப் -
படையானும் படைத்தளிக்கப் பட்ட வெல்லாந்
துடைப்பானுஞ் சுருதிகளுந் தொழுது போற்றுஞ் -
சொருபானந்தச் சுடரைத் தொழுதல் செய்வாம்.

இதன் பொருள்

படைப்பானும் - சிருஷ்டிப்பவராகிய பிரஹ்ம தேவரும்,

வியன் ஞாலம் காக்கும், ஆழிப்படையானும் - விசாலமான உலகத்தைக் காக்கின்ற சக்ராயுதமேந்தியதிருமாலும்

படைத்தளிக்கப்பட்ட எல்லாம் துடைப்பானும் - சிருஷ்டித்து இரட்சிக்கப்படுகின்றவற்றை யெல்லாம் அழிக்கின்ற சிவபெருமானும்,

சுருதிகளும் - வேதமுதலிய சர்வ சாஸ்திரங்களும்,

தொழுது போற்றும் - வாழ்த்தி வணங்குகின்ற,

சொருபானந்தச்சுடரை தொழுதல் செய்வாம் - சொருபானந்த ரென்னுஞ் சுயம் பிரகாச வடிவ சற் குருநாதனை வணங்குவோமாக, 1

2. அழிந்துபிறந் துழல்வதுவே தொழிலா யானின் -
றழியாம லெழுந்தருளி யமையா வின்பம்,
பொழிந்தபெருங் கருணைமுகி லனு நாளும் -
பூதத்தின் றுயர்தீரப் பொழிக வென்றே.

---

* வாழ்த்து, வணக்கு, பொருளியல்புரைத்தல் என்னும் மூவிதத்தினுள் இஃது நமஸ்கார ரூப மங்கலம்.

[இதன் பொருள்]

| | |
|---|---|
| யான் அழிந்து பிறந்து உழல்வதுவே தொழில் ஆய் இன்று அழியாமல் | இறந்து பிறந்து சுழல்வதே வேலையாய் இருந்து வீணாயழி வுறாமல், |
| எழுந்தருளி | - சற்குருவா யெழுந்தருளி |
| அமையா இன்பம் பொழிந்த பெரும் கருணை முகில் | நிரதிசயானந்தத்தினையே பெய்த பெருங்கருணை மூர்த்தியான மேகத்தை, |
| நாளும் நாளும் | - தினந் தினமும் |
| பூதலத்தின் துயர்தீரப் பொழிக என்று | உலகிலுள்ள துன்பமும் நீங்கும்படி பெய்ய வேண்டுமென்று. தொழுதல் செய்வாம் என முதற் பாடலோடு ஒட்டுக. 2 |

3. தலைபலவாய்ப் பெயர்பலவாம் நதிக ளெல்லாஞ்-
சாகரத்தி னொருநீராந் தன்மை போலப்,
பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்-
பட்டவொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்.

| | |
|---|---|
| [இ-ள்] நதிகள் எல்லாம் தலைபலவாய் பெயர் பலவாம் | ஆறுகள் யாவும் இமயம் முதலிய உற்பத்தி ஸ்தானங்கள் பலவாதலோடு. கங்கை முதலாகப் பற்பல பெயர்களு முடையன வாயினும், |
| சாகரத்தில் ஒருநீர் ஆம் தன்மை போல | சமுத்திரத்தை வந்து சேரும் போது நாமரூப பேதமின்றி ஒரேசலமா யிருப்பது போல, |
| பல பலவாய் சொல்லும் நெறி எல்லாம் | நாநா விதமாகக் கூறுகின்ற மார்க்கங்கள் யாவும், |
| சொல்லப்பட்ட ஒரு பொருளினை | பிரதி பாதிக்கின்ற ஏக நாயகனாகிய வொரு வஸ்துவை யே, |
| யாம் பணிதல் செய்வாம் | யாம் வணங்கு கின்றோம். 3 |

4. அழியாத வீடென்னும் பழைய வூர்கண்-
டறியாதா ரதுகாண வேண்டி யாறு,
வழியாகுஞ் சமயங்கள் கொண்டு தம்மில்-
வழக்குப்பே சுஞ்சழக்கு மாழ்க வென்றே.

| | |
|---|---|
| [இ-ள்] அழியாதவீடு என்னும் பழைய ஊர் கண்டு அறியாதார் | நித்திய ஸ்தான மென்னும் சுபாவ சித்தமான மோட்சமாம் பிரஹ்ம லோகத்தை உள்ளபடி காணுத வர்கள், |
| அது காணவேண்டி | - அந்த மோட்ச வீட்டை அறிவதற்காக |
| ஆறு வழி ஆகும் சமயங்கள் கொண்டு | சைவம், வைஷ்ணவம், சாத்தேயம், கௌமாரம், கணுபத்தியம், சௌரம் என்னும் ஆறு சமயங்களால், |
| தம்மில் வழக்கு பேசும் சழக்கு மாழ்க வென்று | தங்களுக்குள் நியாயம் பேசுகின்ற அறியாமை கெட வேண்டு மென்று, பணிதல் செய்வாமென 3 ஆம் பாட லோடு ஒட்டுக. 4 |

5. ஈருகி யாதி முதலாயி ரண்டு வகையாகி மூன்று வடிவா-
யெழுதாத வேத மொருநாலு பூத மிவைதா
ஞருகி யோது மிசையேழு மான திசையெட்டு மாகி யெவையு-
மாகாம லாகுஞ் சொருபங் கலந்த வருளான வாறு மொழிவாம்.

| | |
|---|---|
| [இ - ள்] ஈறு ஆகி | - எல்லாப் பொருள்களின் முடிவாயும், |
| ஆதி முதல் ஆய் | - யாவற்றிற்கு முதற் பொருளாகியும் |
| இரண்டு வகை ஆகி | - செகத் காரணமான சத்தியும் சிவமுமாகி, |
| மூன்று வகை ஆகி | - மாயாகாரியமான மும் மூர்த்திகளாகி, |

| | |
|---|---|
| எழுதாத வேதம் ஒரு நாலு | வரையப்படாத வேதங்களான இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்ற நான்காகி |
| பூதம் இவை ஓர் ஐந்து | பூமி, நீர், அக்கினி, காற்று, ஆகாசமெனும் இப் பஞ்ச பூதங்களாகியும், |
| சுவை ஆறு ஆகி | இனிப்பு, கசப்பு, புளிப்பு, துவர்ப்பு, உறப்பு, உப்பு ஆகிய அறு சுவைகளாகியும், |
| ஓதும் இசை ஏழும் ஆன | ச. ரி. க. ம. ப. த. நி. என்ற ஏழு சுரங்களும், |
| திசை எட்டும் ஆகி | - கிழக்கு முதல் எட்டு திக்குகளாகியும் |
| எவையும் ஆகாமல் ஆகும் சொரூபம் | உண்மையில் தானொன்று மாகாமல் உலகதிருஷ்டியில் எல்லாமாயிருக்கும் |
| கலந்த அருளான ஆறு மொழிவாம் | (பாலில் நெய் போல் சர்வத்திலும்) சேர்ந்திருக்கும் கருணையின் தகவினைப் போற்றுவோம். 5 |

6. ஓர்வொன்றி லேனோர் பொருளாக நல்கி யிருபாத
மூன்று குணநான் - குள்ளிந்தி யங்க ளுறுகோச
மைந்தொ டறுபாவ நாதி யுணர்கால்,
ஏர்பொன்றி லாத பவமேழ றுத்து வடிவான வெட்டு
முடையா-னெழிலாரு ஞான மயமாக வாழு
மியனளும் வாழ்க வென்றே.

| | |
|---|---|
| [இ-ள்] ஓர்வு ஒன்று இலேன் | விவேக மொன்று மிலாத என்னையும் |
| ஓர் பொருள் ஆக இருபாதம் நல்கி | ஒரு பொருளெனக் கருத்திற் கொண்டு (பிறவிக் கடலைத் தாண்டுவதற்குத் தெப்பமாக) இரண்டு திருவடிகளைத் தந்து, |
| மூன்று குணம் | - சத்வ, ரசோ, தமோ குணங்கள், |
| உள்ளிந்தியங்கள் நான்கு | அகங்கரண மாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் நாலும் |

| | |
|---|---|
| உறு கோசம் ஐந்தோடு | ஒன்றினு ளொன்ருகிய அன்னமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்த மயம் என்னும் பஞ்ச கோசத்தோடு. |
| அறு பாவனுதி | மூலாதாரம் முதலிய ஆருதாரங்களேயும், |
| உணர்கால் | - ஆராய்ந்து அறியும் போது |
| ஏர்பு ஒன்று இல்லாத பவம் ஏழும் அறுத்து | சிறப்பேது மின்றிய எழுவகைப் பிற விகளில் பிறந்துழலாமல் அதை நாசஞ் செய்து, |
| வடிவு ஆன எட்டும் உடையான் | பஞ்ச பூதங்களும் சூரிய சந்திரர்க ளும் சீவான் மாவுமான அஷ்ட மங் கள மூர்த்தங்களா யிருப்பவனும், |
| ஞான மயம் ஆக வாழும் இயல் நாளும் வாழ்க என்று | சின்மாத்திரமாக விளங்குஞ் சுபாவ த்தை என் றும் வாழட்டு மென்று மொழிவாமென 5-ஆம் பாடலோடு ஒட்டுக. 6 |

7. சினமான மாயை இனமான மாசு- செறியாம னூறி யறிவாகவே
மனமான தீய பகைவீய மோதி- வருஞான யானை வலிபடுவாம்.

| | |
|---|---|
| [இ-ள்] சினம் ஆன | - குரோத முதலியன வாலுண்டானதும் |
| மாயை இனம் ஆன | - மாயா காரியமானது மான |
| மாசு செறியாமல் நூறி | - குற்றங்கள் நெருங்காமல் கெடுத்து |
| அறிவு ஆகவே | - ஞானமே தனது வடிவ மாகவே |
| மனம் ஆன தீய பகை வீய மோதி | மனமாகிய கொடிய சத்துருவை நாசமாகும்படி அடித்து |
| வரு ஞான யானை வலி பாடுவாம் | வாராநின்ற (குருநாதனுகிய) அறி வாம்போதகத் திறத்தைப் பாடு வோமாக. 8 |

8. ஒழியாம லீச னொளியாகி மேவ-
வுணராமன் மூடு மொரு மாயையால்,
விழியாத லோக ரழியாத ஞான-
விழிமேவ லான வழிமேவவே.

[இ-ள்] ஒழியாமல் ஈசன் ஒளியாகி மேவ } மறைபடாமல் பரமாத்ம ஞானம் வந்து பொருந்தி

உணராமல் மூடும் ஒரு மாயையால் விழியாத லோகர் } அறியாமல் மறைக்கும் ஓர் அஞ்ஞானத்தால், ஞானக்கண் திறந்து பார்க்காத உலகத்தவர்கள்,

அழியாத ஞான விழி மேவல் ஆன வழி மேவவே } நித்தியமான ஞானக்கண்ணை யடைவதற்கு ஆன மார்க்கத்தைப் பெற. (யாம் பாடுவோமென 7 - ஆம் பாடலோடு ஒட்டுக.) 8

9. இறைவாழி நாத னருள் வாழி தாளி -
னிசைவாழி யாளு மியல்வாழியே,
மறைவாழி மோன மொழிவாழி யாறு -
வழிவாழி ஞான விழிவாழியே.

[இ-ள்] இறை வாழி } எனது தலைவனுகிய சற்குருநாதர் நீடூழி வாழட்டும்,

நாதன் அருள் வாழி - எனது குருநாதர் கருணை வாழட்டும்

தாளின் இசை வாழி } குருநாதர் திருவடிகளின் புகழ் வாழட்டும்,

ஆளும் இயல் வாழி } (என் போன்ற அடியார்களை) ஆட்கொள்ளும் பெருங்கல்யாண குணங்களென்றும் வாழட்டும்,

மறை வாழி - வேத வேதாந்தங்களென்றும் வாழட்டும்

மோன மொழி வாழி - மௌனோபதேசம் வாழட்டும்,

ஆறு வழி வாழி - சைவம் முதலிய ஆறு சமயங்கள் வாழட்டும்

ஞான விழி வாழி } (பிரம்மாகார விருத்தியாகிய) ஞானக் கண்ணனது என்றும் வாழவே வாழட்டும். 9

10 தறுகண்வினை வழிசரிய வருதலைவன் வாழியே -
தனதுசர ணெனதுதலை தரவலவன் வாழியே,
யுறுகணற வுணர்வுவிழி யுதவுமவன் வாழியே -
யுணர்வறமெய் நிகழவரு ளொளிவில்பரன் வாழியே.

| | |
|---|---|
| [இ-ள்] தறுகண் வினை வழி சரியவரு தலைவன் வாழியே | அஞ்சத்தக்க தீய கர்மங்களின் மார்க்கங்கள் நழுவும்படி வந்த இறைவன் வாழட்டும், |
| தனது சரண் எனது தலை தரவலவன் வாழியே | தன்னுடைய திருவடித் தாமரைகளை என்னுடைய சிரத்திற் சூட்டும் வல்லவனாகிய குருநாதன் வாழட்டும், |
| உறுகண் அற | - எனது துன்பங்கள் நீங்கும்படி |
| உணர்வு விழி உதவும் அவன் வாழியே | ஞானக்கண் தந்தருளிய சற்குரு நாதன் வாழட்டும், |
| உணர்வு அற | - (பேத) ஞானம் நீங்க |
| மெய் நிகழ | - உண்மை ஞானம் விளங்க |
| அருள் ஒளிவு இல் பரன் வாழியே | திருவருள் மறைபடாத மேலான சற்குரு நாதன் வாழட்டும். 10 |

11 நினைவயர்வு கெடநிகழு நிகரிலவன் வாழியே-
நிரதிசய சுகவடிவி னிலைசெய்பரன் வாழியே,
யெனையழிய வரும்விழியி னிசையுமவன் வாழியே-
யினிமைதரு சரணபத மருளுமிறை வாழியே,

| | |
|---|---|
| [இ-ள்] நினைவு அயர்வு கெட நிகழும் நிகர் இல் அவன் வாழியே | சங்கற் பாதிகளும், வருத்தம் முதலியனவும் நீங்கும்படி யுளத்தில் விளங்குகின்ற சமனில்லாத சற்குரு நாதன் வாழட்டும், |
| நிரதிசய சுகவடிவில் நிலை செய் பரன் வாழியே | நித்தியானந்த சொருபத்தில் நிலை பெறச் செய்யும் பரனாகிய சற்குரு நாதன் வாழட்டும், |
| எனை அழிய வரும் விழியின் இசையும் அவன் வாழியே | அகங்கார மமகாரம் அழியவந்து, கிருபா திருஷ்டியை செய்த சற்குரு நாதன் வாழட்டும். 11 |



## 2. கடை திறப்பு.

12. தனிநாடியர் பொருளோடுறு-தலைநாடியர் நிலைபேர்,
துனிநாடிய ரலைதீர்வதொர் துறைநாடியர் திறமின்.

[இ-ள்] தனி நாடியர் - தனித்திருப்பதை விரும்புவோர்கள்,
பொருளோடு உறுதலை நாடியர் } பரம் பொருளை அடையும் விருப்பம் உள்ளவர்கள்
நிலை பேர் துணி நாடியர் } இடம் (சோம்பல்) கீர்த்தி முதலிய வைகளில் துன்ப முண்டென் றறிந்த வர்கள்,
அலை தீர்வதோர் துறைநாடியர் திறமின் } அலைதலில்லாதமார்க்கத்தைவிரும்பி யவர்களாகிய நீங்கள் வாயில் திறந்து விடுங்கள். 1

அவதாரிகை

*வேதங்களையும், மநு நீதியையும், சைவ முதலிய சமய முறைகளையும் தெரிந்து, பரமாத்மாவையறிந்து, அடைகின்றவர்களே! நீங்கள் வாயிலைத் திறவுங்கள் எனல்.*

13 மறைநாடியர் மநுநாடியர் மதியால்வரு சமயத்,
துறைநாடிய ரிறைதாளிணை தொழநாடியர் திறமின்.

[இ-ள்] மறைநாடியர் - வேத வேதாந்தங்களை நன்கறிந்தவர்கள்
மநு நாடியர் - மனு நீதி தெரிந்து நடப்பவர்கள்,
மதியால் வரு சமயத் துறை நாடியர் } புத்தியின் விவேகத்தால் வாரா நின்ற சமயங்கள்கூறுகின்றமார்க்கங் களைத் தேடி யறிந்தவர்,
இறை தாளிணை தொழ நாடியர் திறமின் } தலைவன் திருவடிகளை வாழ்த்தி வண ங்கும் பிரிய முள்ளவர்களே வாயில் திறந்து விடுங்கள். 2

*[அ-கை] உருவ அருபத்தையும், மாயை அதன் காரியத்தையும், கடந்த பரம்பொருள் திருவுருவமாய் வந்ததை நினைந்துருகின்றவர்களே! வாயில் திறவுங்கள் எனல்.*

14 அருவ மன்றியவ ருருவ மன்றியவ -
ரடைய வன்றியவ ருடையசீர்
உருவ மொன்றுபட வுடைய நெஞ்சடைய -
வுருகு கின்றவர்க டிறமினே.

[இ-ள்] அருவம் அன்றியவர் - அருவமா யிருப்பவரு மல்ல,
உருவம் அன்றியவர் - உருவமா யிருப்பவரு மல்ல,
அடைய அன்றியவர் - சர்வப்ரபஞ்சமும் அல்லாதவருடைய,
உடைய சீர் உருவம் ஒன்றுபட உடைய } திருவுருவமானது ஒரு மூர்த்தமாய் எழுந்தருளியதை நினைத்து
நெஞ்சு அடைய உருகு கின்றவர்கள் திறமினே } மனம் பூரணமாக உருகு கின்றவர்களே திறந்து விடுங்கள். 3

[அ-கை] பஞ்ச பூத காரியங்களால் பழுது படாத பரம் பொருளாகிய அறிவு சொருபத்தை அறிந்திருப்பவர்களே வாயிலைத் திறவுங்கள் எனல்.

15. புனலினமிழாது ககனமிசை யூதை-புகுதவசை யாதபொருளதா
யனலினெரியாது படையினழி யாத-வறிவையறி வார்க டிறமினே

[இ-ள்] புனலில் அமிழாது - நீரில் மூழ்காததும்,
ககன மிசை புகுத - ஆகாயத்திற் செல்லாததும்,
ஊதை அசையாத - காற்றினல் அசையாததும்,
அனலின் எரியாது - அக்கினியால் தகிக்கப்படாத வஸ்து,
படையின் அழியாத பொருளதாய்அறிவை } ஆயுதங்களால் அழிக்கப்படாத வஸ்துவாகிய ஞான சொருபத்தை,
அறிவார்கள் திறமினே } அபரோட்சமாய்த் தனதுவடிவமாய் அறிந்திருப்பவர்களே திறந்து விடுங்கள். 4

[அ-கை] சந்தேகம் அழிக்கவந்தசற் குருநாதன் திருவடியி லுண்டான பத்தியினல் உள்ள முவகை யுற்று அதனல் வரும் ஆனந்தக் கண்ணீரால் மையழிந்த கண்ணையுடைய மங்கையர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்

16 ஐய மொன்றுமற வந்த கோனடியி -
னன்பொ டொன்றியக மின்புற,
மைய ழிந்திட மலர்ந்திலங் குவிழி -
மல்குவீர் கள்கடை திறமினோ.

| | |
|---|---|
| [இ-ள்] ஐயம் ஒன்றும் அற வந்த கோன் | சந்தேக விபரீதங்களொன்று மில்லாமல் நீக்க வெழுந்தருளிய சற்குருநாதனுடைய, |
| அடியில் அன்பொடு ஒன்றி அகம் இன்புற | திருவடிகளில் பத்தியுடன் பொருந்தி மனம் உருகி யானந்த மடைய, |
| மைஅழிந்திடமலர்ந்து இலங்கு விழி மல்குவீர் கள் கடை திறமினோ | மையழியும்படியாகவிரிந்து விளங்குகின்ற கண்களில் நீர் ஆறு போல்பெருக்கு கின்றவர்களே வாயில் திறவுங்கள். 5 |

*[அ-கை] பஞ்ச பூதங்களும் சூரிய சந்திரரும் சிவான்மாவு மாகிய இவ் வெட்டும் ஆராய்ந்தறிய அறிவு சொருபமாக மகாவாக்கியத்தால் உப தேசிப்பவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

17 பாரு மெறிவளியும் நீரு மெரியும்வெளி-பாநு மதியுமிய மானுநே
ரோரு மளவினுணர் வாக வொருமொழியி-னோது மவர்கள் திறமினோ

[இ-ள்] பாரும் எறிவளியும் - பூமியும் வீசுகின்ற காற்றும்,
நீரும் எரியும் வெளி - அப்பும், அக்கினியும், ஆகாசமும்,
பாநும்மதியும்இயமானும் - சூரியரும்சந்திரரும்சீவான்மாவும்

| | |
|---|---|
| உணர்வு ஆக ஒருமொழியின் ஓதும் அவர்கள் கடை திறமினோ | அறிவு வடிவம் ஆகும் படியாக ஒப்பற்ற மகாவாக்கியத்தால்உபதேசிக்கின்றவர்களே வாயில் திறந்து விடுங்கள். 6 |

*[அ-கை] கலியனது வலிமை அழியும் படி வந்த சற்குருநாதன் அருளைப் போற்றி மனமுருகி கண்ணீர் சொரியுமவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

18 கருகு கலியன்வலி தொலைய வுலகின்வரு -
கருணை மலையினருள் பரவியே,
பெருகு மதிசயமொ டுருகி யருவிசொரி -
பெரிய விழியினவர் திறமினே.

| | |
|---|---|
| [இ-ள்] கருகு கலியன் வலி தொலைய | கருகும்படி செய்யும் கலியனது வலிமை யொழிந்து போக, |
| உலகின் வரு கருணை மலையின் அருள் பரவியே | இவ்வுலகில் வந்த அருட் குன்றினது பெருங் கருணையைப் போற்றி செய்தே, |
| பெருகும் அதிசய மொடு உருகி அருவி சொரி | மிகுந்த ஆச்சரியத்தோடு மனங்கரைந்து அருவிபோல்கண்ணீர்சொரியும், |
| பெரிய விழியினவர் திறமினே | விரிந்து நீண்ட கண்களை யுடையவர்களே வாயில் திறந்து விடுங்கள். 7 |

*[அ-கை] திட ஞானிகளுக்கு வேறான மோட்சாதிகாரிகள் விரும்பி வந்து சரணடைய மகாவாக்கிய முபதேசித்து மோட்ச மளிப்பவர்களே! வாயிலைத் திறவுகள் எனல்*

19 உளவலிமுனிவர்களொழியவா-ருயிர்விடவிழிகொளவருகில்வீழ்,
அளவினி லொருதிரு மொழிய தா-மமிர்தருள் பவர்கடை திறமினே.

| | |
|---|---|
| [இ-ள்] வலி உள முனிகள் ஒழிய | சாபானுக்கிரக சாமர்த்தியமுந் தத்துவ ஞானமும் உள்ள மனன சீலர்களான முனிவர்களன்றி, |
| உயிர்விட விழி கொள அருகி(ல்) வீழ் அளவினில் | (வேறதிகாரிகள் உண்மை யுணராது துக்காலயமான உடம்போடு வாழ்வதை விட) மாளுவது நலமென்றெண்ணி உங்கள் முன்னிலையில் சரணடைந்த மாத்திரத்தில், |
| ஒரு திரு மொழி | ஒப்பற்ற தத்வமசி மகா வாக்கியத்தால், |
| அது ஆம் அமிர்து அருள் பவர் கடை திறமினே | தத்பத லட்சியார்த்த பிரம்மமே துவம்பத லட்சியார்த்த ஆன்மாவாயிருக்கும் மோட்சாமிர்தத்தை அநுகிரகிப்பவர்களே வாயில் திறந்து விடுங்கள். 8 |

*[அ-கை] தேவர்களும் அடைதற்கரிய பதத்தை இக்கலி காலத்தில் குருஉபதேசத்தால் நினைவற்ற பிரம்ம சொருபத்தில் பிரம்மாகாரமா யிருப்பவர்களே! வாயிலைத் திறந்து விடுங்கள்.*

**20** கனவினு மமரர்கள் பெறலறக் - கலியுக மிதிலொரு நினைவறத்,
தனையருள் செயவிறை நினைவறத் - தமைநினை பவர்கடை திறமினோ

| | |
|---|---|
| [இ-ள்] கனவினும் அமரர்கள் பெறல் அற | சொப்பனத்திலுங் கூட தேவர்களும் அடைய முடியாததை, |
| கலியுகம் இதில் ஒரு நினைவு அற இறை தனை அருள் செய | இக் கலி காலத்தில் சங்கற்ப மற்ற தனது சொருபத்தை சற்குருநாதர் உபதேசித்த மாத்திரத்தில், |
| நினைவு அற தமை நினைப்பவர் கடை திறமினோ | சங்கற்ப நாசஞ் செய்து தனது சொருபத்தை அபரோட்சமாக சாட்சாத்கரித்தவர்களே வாயிலைத் திறந்து விடுங்கள். 9 |

*[அ-கை] இருவினைகளையொழித்த இறைவனடிகளை நினைக்குந்தோறும் மெய் புளக முற்று ஆனந்தக் கண்ணீர் வரத்தோத்திரஞ் செய்யவும், இந்திரியங்களும் மனமும் அடங்கவும், பேதமற்ற நிர்விகற்ப சமாதியில் விலட்சணானந்த மநுபவிப்பவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

**21** வளைதரு வினைகழல் வுறவரு ளிறையடி -
மருவுதொ றுளமுடல் புளகம தெளியவு -
மலர்தரு குவளைக ளருவிகள் சொரியவு -
மறிகட லொலியென வலறியு முலறியும்,
அளைதரு புலனவை மடிதர மனமிற -
வறிவெழு மதுவற மருவிய வெளியினி -
னழிதர வொழிவற மிகுவிழி நிகழ்தரு -
மமிர்தது பருகிடு மவர்கடை திறமினோ.

| | |
|---|---|
| [இ-ள்] வளை தரு வினை கழல் வுற | சீவனை வளைத்து பிறப்பு இறப்புக் களைத் தரும்பாவபுண்ணியங்கள் நீங்குவதற்காக, |

| | |
|---|---|
| அருள் இறை அடி மருவு தொறு | அருளே திருவுருவமாகிய சற்குருநாதன் திருவடிகளைப் பொருந்தும் போதெல்லாம், |
| உளம் உடல் புளகமது எறியவும் | மனம் தூல தேகமிரண்டும் கரைந்து மயிர்ப் புளகம் உண்டாகவும், |
| அலர் தரு குவளைகள் அருவிகள் சொரியவும் | விரிந்த குவளை மலர் போன்ற கண்களில் மலையில் வீழ் அருவிகள் போல் நீர் சொரியவும், |
| மறி கடல் ஒலி என அலறியும் உலறியும் | மறித்து அலை வீசும் கடலொலி போன்று கதறி அழுதும் உலர்ந்தும், |
| அலைதரு புலனவை மடி தர | (உள்ளத்தைக்) கலக்குகின்ற பஞ்சேந்திரியங்களடங்கி நிற்கவும், |
| மனம் இற | - தூல மனம் நாச முறவும், |
| அறிவு எழுமது அற பருவிய வெளியினில் | பேத ஞான மாகிய சங்கற்ப மற்றிருக்கின்ற சிதாகாயத்தில், |
| அழிதர ஒழிவு அறமிகு விழி நிகழ் தரும் அமிர்தது பருகிடும் அவர் கடை திறமினோ | நித்திய நிராவரணமா யிருக்கின்ற அவஸ்தான ரூப நிர்விகற்ப சமாதியில்உண்டாம்விலட்சணானந்தத்தை அநுபவிப்பவர்களே வாயிலைத் திறந்து விடுங்கள். 10 |

*[அ-கை] இகபர லோக போக சாதனங்கள் அழியுமெனவும், மதவாதிகள் மனக் குழப்பஞ் செய்வரெனவும், மனத்தெளிவால் இவைகள் நீங்கி மனமுருகவும், குருபரன் தந்த திருவடியை சிரம்பொருந்தத்தாழ்வறநானற்ற மோட்சாமிர்தம் அநுபவித்து அவ்வானந்தமே எமது வடிவமென்றிருப்பவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

22 சிதையு மெனவுடன் முதல்வரு பொருள்களுந் -
திரியு மெனவுயர் பதமுறு வினைகளுஞ் -
சிலுக தெனவலை யலைவரு சமயமுந் -
தெளிவு தரவிவை முழுதையு நழுவினின்,
றிதைய மலர்செய வுருகிநம் மிறைவர்தந் -

திடுமடி யிணைமலர் முடிமிசை யணியவந் -
திழிவு கழிவித மகமறு மமிர்தமுண் -
டெமது சுகவடி வெனுமவர் திறமினோ.

| | |
|---|---|
| [இ-ள்] உடல் முதல் வருபொருள்கள் சிதையும் என | தேகமுதலாய் வருகின்ற சர்வபதார்த்தங்களும் கண நேரத்திற்குள் அழிந்து போமெனவும். |
| உயர் பதம் உறு வினைகளும் திரியும் என | மேலான பதவி யடையும் அஸ்வமேதாதி புண்ணிய கர்மங்களும் மாறுபடு மெனவும், |
| அலை அலை வரு சமயமும் சிலுகது என | சலனத்திற்கு மேற்சலனம் வரும்படி செய்யும் சமயாநுஷ்டானங்களும் துயர மெனவும், |
| தெளிவு தரஇவைமுழுதையும் நழுவி நின்று | சித்த சுத்தி வந்தவுடன் யாவற்றையும் விட்டிருந்து, |
| இதய மலர் செய உருகி | மனம் நன்றாய்க் கரைந்துருக, |
| நம் இறைவர் தந்திடும் அடியிணை மலர் | நமது சற் குருநாதரால் சூட்டப் பெற்ற திருவடித் தாமரைகளை |
| முடிமிசை அணிய வந்து | சிரத்தின் மேலணியப் பெற்று, |
| இழிவு கழிவிதம் | குற்ற மொழிந்த தன்மையால், |
| அகம் அறும் அமிர்தம் உண்டு | நானெனதென்னும் அபிமான மற்ற மோட்சாமிர்தத்தை யநுபவித்து, |
| எமது சுக வடிவு எனும் அவர் திறமினோ | ஆனந்தமே எங்களுடைய சொருபமென்று கூறுபவர்களே நீங்கள் வாயிலைத் திறவுங்கள். ... 11 |

*[அ-கை] முக்குணமும், பாவமும், இருவினைப் பயனில் மயக்கமும், சுகதுக்கம் நீங்கவும் பொறுமையுற்றுமனம் சங்கற்பமற்ற சமாதி பெறவும், குருநாதனடியில் தம் சிரம் பொருந்தவும், நினைப்பு மறப்பற்ற பிரம்மம் விளங்கவும், மாயை அதன் காரியமான வுலகனைத்து நீங்கிய அப்பரமாத்மாவில் நிலைத்து ஆனந்தம் அநுபவிப்பவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

23 மருவு குணமொடு மலமது கழியவு -
 மலரு மிருவினை மயலது பறியவு -
மகிழ்வு மடிவற வொருபொறை யணையவு -
 மனனும் நினைவரு மிடமது நினையவும்,
அருவ வுருவன தடிதலை யமரவு -
 மயர்வு நினைவறு மறிவது நிகழவு -
மடைய வொழிவுறு மதநிலை திதிபெறு -
 மமிர்து பருகிடு மவர்கடை திறமினே.

| | |
|---|---|
| [இ-ள்] மருவு குண மொடு மலமது கழிய | பிரகாச, பிரவிர்த்தி, மோகமாய முக் குணங்களோடு பாவமும் நீங்கவும், |
| அவம்அலரும்இருவினை மயல் அது பறியவும் | பயனின்றி விரியும் பாவ புண்ணியங் கள் (பலனெனவெண்ணும்) மயக்கம் |
| மகிழ்வு மடிவு அற | - இன்ப துன்பங்க ளொழியவும், |
| ஒரு பொறை அணையவும் | ஒப்பற்ற பொறுமை யடைந் திருக்கவும், |
| மனனும் நினைவு அரும் இடமது நினையவும் | மனமும் மனத்திற் கெட்டாத பர மாத்மாவில் நீரில் விழுந்த உப்பு போல் பேத மற்றிருக்கவும், |
| அருவ உருவனது அடி தலை அமரவும் | அருவனுகவும் உருவனுகவும் இருக்கு மிறைவனது திருவடிகள் சிரத்திற் பொருந்தி யிருக்கவும், |
| அயர்வு நினைவு அறும் அறிவது நிகழவும் | மறப்பும் நினைப்பு மில்லாத நித்திய சொருப ஞான மானது விளங்கவும், |
| அடைய ஒழிவுறும் அதன் நிலைதிதி பெறும் | மாயை மாயா காரியங்களான சர்வ முமின்றிய அப்பரமாத்மாவில் நிலைத் திருப்பதான மனோ நாச வாசனுட் சயம் பெற்று, |
| அமிர்து பருகிடும் அவர் கடை திறமினே | சீவன் முத்தி விலட்சணனந்தம் அநு பவிப்பவர்களே வாயிலைத் திறந்து விடுங்கள். |

*[அ-கை] ஆத்மா நித்தியமெனவும், அதற்கு வேருன உலக முதலிய பொருள்கள் அநித்திய மெனவும், உருவாருவமான பரம் பொருள் சற்குருவாக வந்து உமது மனத்தில் உண்மையை விளக்கவும், கர்ம காண்ட சுருதிகளை கை விட்டவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

24 உலகம நித்தமெனு வுணர்வது நித்தமெனு -
வுருவரு வற்றவரோ ருருவு தனைக்கொடுநுங்
கலகம னத்திடையே யிலகமு தற்பகரும் -
கலைகளை விட்டெறிவீர் கடைதிற மின்றிறமின்.

| | |
|---|---|
| *[இ-ள்] உலகம் அநித்தம் என* | நாம ரூபமாகத் தோற்றும் உலகம் அழிந்து போமெனவும், |
| உணர்வது நித்தம் என | அறிவு வடிவ ஆன்மாவே அழியாது எனவும், |
| உருவு அருவு அற்றவர் ஓர் உருவுதனைக்கொடு நும் கலக மனத்திடை இலக | உருவாருவங்களைக் கடந்த நிலையினராகியசற்குருநாதர் உருவுடன்எழுந்தருளி உங்கள் போர் செய்யும் மனத்தில் ஆன்ம வடிவமாக விளங்கவும், |
| முதல் பகரும் கலைகளை விட்டு எறிவீர் | பூர்வபட்சமாகக் கூறும்கர்மகாண்ட சுருதிகளை எடுத்தெறிந்து விடுபவர்களே, |
| கடைதிறமின் திறமின் | வாயிலைத் திறந்து விடுங்கள் திறந்து விடுங்கள். |

13

*[அ-கை] மனோவாக்கிற்குஎட்டாதஇறைவன்சற்குருநாதனுக வந்து அருள் செய்ததை நினைக்குந்தோறும் அன்பினுல் ஆனந்தக் கண்ணீர் சொரியும் படியான பிரேமை யுள்ளவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

25 ஓதல றக்கணியா வொப்பில் பரம்பொருளே -
யொருவடி வாகியெழுந் தருளுத லுன்னுதொறுங்,
காதன்மி குத்துவரக் கண்பனி கொண்டுவரக் :
கரையழி யன்புடையீர் கடைதிற மின்றிறமின்.

| | |
|---|---|
| [இ-ள்] ஓதல் அறகணி யா ஒப்பு இல் பரம் பொருளே | சொல்லுதற்கும் நினைத்தற்கும் எட்டாததும் சமான மில்லாததும் ஆன பரவஸ்துவே, |
| ஒரு வடிவு ஆகி எழுந்தருளுதல் உன்னு தொறும், | சற் குருநாதனாக பிரத்யட்சமாக வந்திருப்பதை நினைந்து நினைந்து பார்க்கும் போது, |

காதல் மிகுத்து வர - அன்பானது மேன் மேலும் உண்டாகி,
கண்பனிகொண்டுவர - கண்களில் நீர் சொரியும்,

| | |
|---|---|
| கரை அழி அன்பு உடையீர் கடை திறமின் திறமின் | அளவில்லாத பத்தியுள்ளவர்களே வாயிலைத் திறந்து விடுங்கள் திறந்து விடுங்கள். 14 |

[அ-கை] *உயிர்க்கு உயிரான வேதப் பொருளானது உலகமாகிய வீதியில் ஊர்வலம் வருவதைக் கண்டு வணங்க மனோ வாக்கற்று அகங்காரமற்று உள்ளபடி விளங்குபவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.*

26 ஆவியி னுக்குயிரா மாரண னோருருவா -
யவனியில் வந்தருளும் பவனிவி ரைந்துதொழ,
ஓவிய மொத்திடநின் றுரையுணர் வொன்றொழியா -
தும்மையொ ழிந்திடவே வொழிவறு வீர்திறமின்.

| | |
|---|---|
| [இ-ள்] ஆவியினுக்கு உயிர் ஆம் ஆரணன் ஓர் உருவாய் | உயிர்க்குயிராயிருக்கும் வேதப் பொருளானவர் சற் குரு மூர்த்தமாய், |
| அவனியில் வந்தருளும் பவனிவிரைந்துதொழ | பூமியின் கண் உலாப் போந்ததை வேகமாக வந்து வணங்கிப் போற்ற, |
| ஓவியம் ஒத்திட நின்று உரை உணர்வு ஒன்றும் ஒழியாது உம்மை ஒழிந்திடவே | சித்திரம்போன்றிருந்துவாக்கு மனம் மற்றொன்றும் மிஞ்சாது (யானென தென்னும்) அகங்காரம் அழிந்த |
| ஒழிவு அறுவீர் திறமின் | ஆவரணமற்று இலங்குபவர்களே வாயிலைத் திறவுங்கள். 15 |

[அ-கை] உலகவிஷயங்களை எண்ணி கொடியபஞ்சேந்திரியமார்க்கங்களில் உழல்பவன் என்று அறிந்தும் இம்மையே வந்து திருவருள் புரிந்த கிருபா சொருபனுன குருநாதன் திருவடிகளை எண்ணும் போதெல்லாம் அளவு கடந்து மனம் உருகும் பத்தியுள்ளவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.

27 பொருளையே கருதிவெம் புலன்வழிச் செல்லுமென் -
புன்மையே கண்டுவந் திம்மையே யருள்பெருங்,
கருணையே யுடையவன் கழனினைந் திடுதொறுங் -
கரையழிந் துளநெகுங் காதலீர் திறமினே.

| | |
|---|---|
| [இ-ள்] பொருளையே கருதி வெம்புலன் வழி செல்லும் என் | சத்தாதிவிஷயங்களையே சுகம் என்று நினைத்துகொடிய பஞ்சேந்திரியமார்க்கத்திற் போகின்ற அறியாமையை, |
| புன்மையே கண்டு வந்து இம்மையே அருள் | நோக்கி குருவாய் எழுந்தருளி இத்தேகத்திலே முத்தி யளித்திட்ட |
| கருணையே உடையவன் கழல் நினைந்திடும் தொறும் | பெருங் கிருபையே வடிவமாய் இருப்பவன் திருவடிகளை நினைக்கும் போதெல்லாம், |
| கரைஅழிந்துஉளம்நெகும்காதலீர் திறமினே | எல்லையின்றிமனமுருகும் பத்தியுடையவர்களே வாயிலைத் திறவுங்கள். 16 |

[அ·கை] நம் அனைவரையும் ஆட்கொண்ட அருட் குரவனை கனவிலும் நனவிலும் போற்றுவதன்றி மற்றொரு சிறப்பும் நமக்குத் தெரியவில்லை என்று உணரும் பத்தி உள்ளவர்களே! வாயிற்பக்கம் திறந்துவிடுங்கள் எனல்

28 நம்மையா ளுடையநா யகனையே நனவிலும் -
கனவிலு நனவிலுமா றன்றிவே றென்றுநஞ்,
செம்மையா னதுதெரிந் திடுதல்கண் டிலமெனத் -
தெரியுமா தரவினீர் கடைதிறந் திறமினே,

| | |
|---|---|
| [இ-ள்] நம்மை ஆளுடையநாயகனையேகனவிலும் நநவிலும் | அடியேங்களை ஆட்கொண்ட சற்குருநாதனையே சொப்பனத்திலும் சாக்கிரத்திலும், |

| | |
|---|---|
| நவிலுமாறு அன்றி வேறு ஒன்றுநம் செம்மை யானது தெ ரிந்திடுதல் கண்டிலம் | மனோவாக்கு காயங்களால் வழிபாடு செய்வதே யல்லால் மற்றொரு காரி யம் நமக்கு நலந்தரும் படியாக ஆராய்ந்தறிந்ததில் காணவில்லை. |
| என தெரியும் ஆதரவி னீர் கடை திறம் திறமினோ. | என்பதா யறிந்திருக்கின்ற பத்தியு டையவர்களே வாயிற் பக்கம் திறவுங்கள். 17 |

[அ-கை] உண்மை ஞானத்தால் உலகு தோன்றுமல் உணர்வுமயமாக விளங்க, ஆவரண மற்ற ஆனந்தம் அநுபவிப்பவர்களே! உங்கள உயர்ந்த வாயிலைத் திறவுங்கள் எனல்.

29. விழியாலுல கழியாவெறு முணர்வாய்விடு வகையால்,
ஒழியாவமிர் துண்பிரும துயர்பொற்கடை திறமின்.

| | |
|---|---|
| [இ-ள்]விழியால்உலகு அழியாவெறும் உணர் வாய்விடும் வகையால் | ஞான திருஷ்டியால் நாம ரூபப் பிர பஞ்சமானது தோன்றுமல் அழிந்து போகவும் அத்வைத ஞான சொருப மாய் இருக்கின்ற தன்மையால், |
| ஒழியா அமிர்து உண் பீர்உமது உயர் பொற் கடை திறமின் | மறைப்பின்றிய மோட்சானந்த மான அமிர்தத்தை அநுபவிப்பவர் களே உயர்ந்ததும் அழகியனதுமான வாயிலைத் திறவுங்கள். 18 |

[அ-கை] அகண்டசொருபனான சற்குருநாதன் கிருபா திருஷ்டி உங்களுயிரைக் கொள்ளை கொண்டதால் உருகுகின்றவர்களே! நல்ல வாயிலைத் திறந்து விடுங்கள் எனல்.

30 அளவு கண்டிட வரிய பங்கய-நயனம் வந்தும தாவியைக்,
களவு கொண்டிட வுருகு கின்றவர்-கனக நன்கடைதிறமினோ

| | |
|---|---|
| அளவு கண்டிட அரிய பங்கய நயனம் வந்து | கால தேச வஸ்த்துக்களால் எல்லை காண முடியாத (குருநாதரது) மலர் போன்ற கண்களால் நோக்கிய கிரு பா திருஷ்டியானது |

| | |
|---|---|
| உமது ஆவியை களவு கொண்டிட உருகுகின் றவர் கனக நன் கடை திறமினோ | உங்கள் உயிரைக் கவர்ந்து சென்ற தால் மனங் கரைந்து உருகு கின்ற வர்களே தங்கமயமான அழகிய வாயிலைத் திறவுங்கள். 19 |

[அ-கை] இறைவனைப் பெற்று இரண்டற நின்று அநுப வித்து நீங்கியதை மறுபடியும் அநுபவிக்க விரும்பு கின்றவர்களே! வாயிலைத் திறவுங்கள் எனல்.

**31** அழுந்த வாகமி ரண்டு மொன்றுற- அழிவி லானொடு தழுவிமுன்
பிழந்த நாளைநி னைந்து போதவி - ரங்கு வீர்கடை திறமினோ.

[இ-ள்] அழிவிலானொடு – நித்திய ரூபனான சற்குரு நாதனோடு.

| | |
|---|---|
| ஆகம் இரண்டும் ஒன்றுற அழுந்த முன்பு தழுவி | தேகமிரண்டும் பேதமின்றி அழுந் தும்படி ஆலிங்கனம் செய்து, |
| இழந்த நாளை நினைந்து போத இரங்குவீர் கடை திறமினோ | போனகாலத்தை நினைப்பவர்களாய் மறுபடியும் கூடுவதற்கு ஏங்குகின்ற வர்களேவாயிலைத்திறந்துவிடுங்கள். 20 |

[அ-கை] மனத்தைவென்று மெய்ஞ்ஞான மடைவதற்கு ஆவரண மற்ற அருட் குருநாதன் அருளும்வரைத் தூங் காமற்தூங்கும்நங்கையீர்வாயிலைத் திறவுங்களெனல்

**32** ஒழித்தே யுள்ள முணர்வடைய -
வொழியா வொருவன் வருமளவும்,
விழித்தே யுறங்கும் விளங்கிழையீர் -
மேவும் கபாடம் திறமினோ.

| | |
|---|---|
| [இ-ள்] உள்ளம் ஒழித் தே உணர்வுஅடைய | சங்கற்ப மனத்தை நாசஞ் செய்து அபரோட்ச ஞானம் அடைவதற்கு. |
| ஒழியா ஒருவன் வரும் அளவும் | மெய்ஞ்ஞானிகளுக்கு மறைபடாத ஒப்பற்ற பரமாத்மாவானவர் தனது வடிவமாய் பிரத்யட்சமாகும் பரியந்தம், |

| | |
|---|---|
| விழித்தே உறங்கும் விளங்கு இழையீர் | தூங்காமற்றூங்குகின்றவரும் விளங்கா நின்ற ஆபரணங்களை உடையவருமான, |
| மேவும் கபாடம் திறமினே | நீங்கள் நிலேயோடு பொருந்திய திருக்கதவுதனை திறந்து விடுங்கள். 21 |

*[அ-கை] பேரும் வடிவுமற்ற பேரொளியே கிருபாகரனெனும் பேர் பெற்று எழுந்தருளிய பெருமையை போற்ற வாயிலைத் திறவுங்கள் எனல்.*

**33.** உருநாம மொன்றுமிலா - வொளிகருணு கரனென்னுந்,
திருநாமம் பெறவந்த - திறம்பாடத் திறமினே.

| | |
|---|---|
| [இ-ள்] உருநாமம் ஒன்றும் இலா ஒளி | வடிவமும் பெயரும் மற்றெதுவும் இல்லாத சுயஞ்சோதியானது, |
| கருணுகரன் என்னும் திருநாமம் பெற வந்த திறம்பாடத்திறமினே | சற் குருநாதன் என்ற திருநாமத்தை பெற்று எழுந்தருளி இருக்கின்ற, |
| திறம் பாடத் திறமினே | மேன்மையைப் போற்றுவதற்காகத் திறவுங்கள், 22 |

*[அ-கை] மண்ணுலகில் கண் காண வந்த சற் குரு நாதன் திருவடியை சிரத்தில் பொருந்த வணங்கி அஞ்ஞவதைப் பரணியை பாட வாயிலைத் திறவுங்கள் எனல்.*

**34** தரணியில் வந்த பெருமானுர் - தாளினை சூடி யஞ்ஞவதைப்,
பரணியை யின்றென் வாயாரப் - பாடக்க பாடந் திறமினே.

| | |
|---|---|
| [இ-ள்] தரணியில் வந்த (பெருமானுர்) தாளினை சூடி | பூவுலகின் கண் சற் குருநாதராக எழுந்தருளிய தலைவனது திருவடிகளை ச்சிரத்தில் அணிந்து கொண்டு, |
| அஞ்ஞவதைப் பரணியை இன்று என் வாயார | அஞ்ஞவதைப் பரணி என்னும் இப் பிரபந்தத்தை இப்போது, என் வாக்கினுல், |
| பாடக் கபாடம் திறமினே | பாடும் படியாக திருக் கதவு திறவுங்கள். 23 |

## ( 3. காடு )

*[அ-கை] இது வென்றறிய முடியாத பிரம்ம ரூபமாகிய காளி தேவியின் கோயில்; நினைந்தடைந்தவர் மனமாகும் தத்துவ ஞானிகள் இல்லாத ஸ்தலங்கள் எல்லாம் காடாகும்! தத்துவ ஞானம் இல்லாத அஞ்ஞர்கள் எல்லாம் பேய்களாகும் எனல.*

35 குறியுரு வறிவுதா னிறைவிதன் கோலமே -
குறுகுவா ருளமெலா மவள்பெருங் கோயிலே,
அறிஞர்வா ழிடமலா தழனெடு கானமே -
யறிவிலா வவையெலா மடையவும் பேய்களே.

| | |
|---|---|
| [இ-ள்] குறிஉரு அறிவு இறைவிதன் கோலம் | சுட்டியறி படாமலிருக்கின்ற ஞான சொருபமே காளிகா தேவியின் வடிவமாம், |
| குறுகுவார் உளம் எலாம்அவள்பெரும் கோயிலே | சரணடைந்தர்களுடைய மனங்கள் அனைத்தும் தேவி வீற்றிருக்கும் பெரிய ஆலயங்களாகும், |
| அறிஞர் வாழ் இடம் அலாது அழல் நெடும் கானமே | தத்துவ ஞானிகள் சஞ்சார மின்றிய ஸ்தலங்கள் எல்லாம் தீயுற்ற பெருங் காடாகும், |
| அறிவிலா அவை எலாம் அடையவும் பேய்களே | (அறிவே வடிவமான பிரம்மமே தனது வடிவமாயிருக்க அறியாமல் தேகமே தான் என்றிருக்கும்) அஞ்ஞர்களெல்லாம் பிசாசங்களே ? |

*[அ-கை] சுருதிகள் துதிக்கும் சோதியே ஒரு உருவமாய் வந்துஉபதேசித்து அந்தந்த மனத்தில் நானென்று சுயம் பிரகாசமாய் விளங்கவும் அதையறியாது மயங்கித் திரிகின்றவர்களே! பிசாசங்கள் எனல்.*

36 மறையெலா மறைவதா கியபரஞ் சோதியோர் -
வடிவதா யருளுமிப் பொருளெனுந் தேசுதான்,
உறைவதா மகமுரு தலமரும் பேயெலா -
முழல்வதா முலகமா மொருபுறங் கூறுவாம்.

[இ-ள்] மறை எலாம் அறைவது ஆகிய பரம் சோதி } வேத வேதாந்தங்களெல்லாம் போற்றுகின்ற மேலான அறிவு சொருபமே

ஓர் வடிவதாய் அருளும் இப் பொருள் எனும் } ஒப்பற்ற சற் குருவாகி வந்து உபதேசத்தால் இவ் வான்ம சொருபம் என்று அருளிய,

தேசுதான்உறைவதாம் - சுயஞ்சோதியாய்மனத்திருப்பதாம்,

அகம் உருது அலமரும் பேய் எலாம் } உள்ளத்தி லுற்றறியாது சுழல்வதான பிசாசங்கள் எல்லாம்,

உழல்வதாம் உலகம் ஆம்ஒருபுறம்கூறுவாம் } திரிகின்ற இவ் வுலகத்தை ஓர் பக்கத்தில் பேசுகின்றோம். 2

[அ-கை] கரையாத மனம் கல்லெனவும், கருணையற்ற கண்ணை மரமெனவும், கடுஞ்சொல்லைக் கனலெனவும், அவர் செயலைப் புயற் காற்று எனவும் கூறல்.

37 கல்லுங் கயவோர் மனமே யவர்தங் -
கண்ணே மரமு மவர் தண் மையறச்
சொல்லு முரையே சுடுதீ யிடர்சேர் -
சூரு வளிமற் றவர்தங் தொழிலே.

[இ-ள்] கயவோர் மனமே கல்லும் } கீழ் மக்களது நெஞ்சமே கற்களாம்,

அவர் தம் கண்ணே மரமும் } அன்னோருடைய கண்களே மரங்களாம்,

அவர் தண்மை அற சொல்லும் உரையே சுடுதீ } அக் கயவர்கள் சாந்தமின்றி பேசுகின்ற பேச்சானது எரிகின்ற அக்கினியாம்,

அவர் தம் தொழிலே - அவ்வீனர்களுடைய செய்கையே,
இடர் சேர் சூரு வளி - பெருங் காற்றாகும். மற்று-அசை. 3

[அ-கை] துன்பத்தைத் துன்புறுத்தும் தீரரையும் துன்பப்படுத்தும்அக்கயவர்உற்றவிடமேதீயகாடாகும் ஆன்மாவையும் சுடுவது அவர் வசனமே யல்லாமல் அக்கினியல்ல எனல்.

38 செயிரைச் சுடவல் லவர்தம் மளவும் -
செயிர்செய் பவர்சேர் வுறுதீ வனமீ,
துயிரைச் சுடவல் லதுவெவ் வழலோ -
வோரா விவர்த முரையன் றியுமே.

| | |
|---|---|
| [இ-ள்] செயிரை சுட வல் லவர் தம் மளவும் | துன்பத்தைச் சுட்டு அழிக்க வல்ல வர்களேயும், |
| செயிர் செய்பவர் | - துன்பப் படுத்துபவர்கள், |
| சேர் உறு தீவனம் ஈது | இருக்குமிடமாகிய இக் கொடிய வனம் இதுவாம், |
| உயிரை சுட வல்லது | - ஆன்மாவையுந் தகிக்கத் தக்கது, |
| ஓரா இவர் தம் உரை அன்றியும் வெவ் வழலோ | அஞ்ஞர்களான இக் கயவர்களது வசனமே யல்லாமல் கொடுந்தீயும் உளதோ (இல்லை யென்பதாம்) 4 |

*[அ-கை] கோபாக்கினிக்கு ஏதுவான கண்களும், கோபாக்கினியும்சேர்ந்து எரியவாரம்பித்தால்அருவமான ஆத்மாவையும் அழியச் செய்யுமேல், அதை விட வேறு அக்கினி என்பதில்லை எனல்.*

39 வெருவ வெரிசொரியும் விழியுமழல் பொழியுமால் -
வெகுளி யெரிவிரவி மிகமிகவு மெரியுமால்,
அருவ யுயிருமிற வெரியுமன லதனில்வே -
றனலு மிலதகில வுலகதனி னழலதே.

| | |
|---|---|
| [இ-ள்] வெருவ எரி சொரியும் விழியும் | அஞ்சத்தக்க அக்கினியைக் கொட்டு கின்ற கண்களும், |
| அழல் பொழியும் வெகுளி எரி விரவி | அக்கினியைச் சிந்துவது எனக் கோப மாகிய அக்கினியும் ஒன்றோடு ஒன்று சேர்ந்து, |
| மிக மிக எரியும் | - அதிகத்திலும் அதிகமாய் எரிவதாம், |
| அருவ உயிரும் இற எரியும் அனல் அதனில் | எவ்வித ரூபமும் இல்லாத ஆன்மா வும் கேடுறும் படி வேகுதல் செய்யும் அக்கினியைப் பார்க்கிலும், |
| வேறு அனலும் இலது | - வேறோர் அக்கினி கிடையாதாம், |

| | |
|---|---|
| அகில உலகதனில் அழல் அதே | சர்வ லோகங்களேயும் சுடுகின்றதீயானது அக் கோப திருஷ்டியேயாம். 5 |

*[அ-கை] இவர் கொடுப்பர் இவர் கொடார் என்ற நினைப்புடன் தனது மேன்மை அழிய அப்படிப் பட்டவர் வாயிலேயுற்று அவர்கள் உணவைக் கருதி திரிபவர்களை யல்லாமல் நாய்களும் வேறு உளவோ எனல்.*

40 தருவர் தருவதில ரெனநினையு மனமொடே -
தமது தலைமைகெட வவரவர்கள் கடையிலே,
ஒருவர் தருமுணவு கருதியுழல் பவையில்வே -
றுழலு ஞமலிகளு முளவுமல முணரிலே.

| | |
|---|---|
| [இ-ள்] உணரில் தருவர் தருவது இலர் என நினையும் மனம் ஒடு | ஆராயும் இடத்து, இவர் கொடுப்பவர் இவர் கொடுத்திலர் என்பதாக எண்ணுகின்ற எண்ணத்தோடு, |
| தமது தலைமை கெட | - தங்களது முதன்மை அழியும் படி, |
| அவர் அவர்கள் கடையிலே | அப்படிப் பட்டவர்களது புற வாயிலிலே, |
| ஒருவர் தரும் உணவு கருதி உழல் பவையில் | ஒருத்தர் அளிக்கும் உண் பொருளை நினைத்துச் சுற்றுகின்றவர்களைக் காட்டிலும், |
| வேறு உழலும் ஞமலி களும் உளவும் அல | வேறாய் சுற்றுகின்ற நாய்களும் இல்லை என்ற படி. |

6

*[அ-கை] 41-42-ல் கற்பக மரம், அசோக மரம், அரச மரம் போல இக் காட்டில் தோப்பாய் இருந்தும், துன் புற்றோர் குளிர்விடம் என வந்தால் தீயாய் இருப்பதாம் எனல்.*

41. அணிகொ ளும்பர் தருவுநே - ரருகர் பிண்டி மரமுநேர்,
கணிக பங்கர் அரசுநேர் - கடிய கான மதனிலே.

| | |
|---|---|
| [இ-ள்] கடிய கானம் அதனிலே | கொடுமையான காட்டகத்தில், |
| அணிகொள் உம்பர் தருவு நேர் | அழகுள்ள தேவர்களது கற்பக விருக்ஷம் போன்றும் |

| | |
|---|---|
| அருகர் பிண்டி மரமும் நேர் | சமணர்களது அசோக மரத்தைப் போன்றும், |
| கணிக பங்கர் அரசு நேர் | க்ஷணிக விஞ்ஞான வாதியரான புத்தர்களது போதி விருக்ஷம் போன்று உள்ள, இது குளகம். 7 |

42 நீளத்திற் சோலையா நெடுந்தா பத்தா -
னிழலெனவந் தடைந்தவர்க்கு நெருப்பே யாகி,
வாளொத்த முட்சரித்து வறிதே காய்க்கும் -
வன்பாகுங் கருவேலை வளர்க்குங் கானம்.

| | |
|---|---|
| [இ-ள்] கானம் நீளத் தில் சோலையாம் | காடானது வெகு தூரமாகத் தோப்பா யிருப்பதாம், |
| நெடும்தாபத்தால்நிழல் என வந்து அடைந்த வர்க்கு நெருப்பே ஆகி | மிகுந்த துன்பத்தால், குளிர்ந்த திடம் எனப்போயிருந்தவர்களுக்கு தீ போன்று சுடுவதாயும், |
| வாள்ஒத்தமுள் சரித்து வறிதேகாய்க்கும் வன் பாகும் கருவேலை வளர்க்கும் | வாள் ஆயுதம் போன்ற முள்ளோடு சாய்ந்திருப்பதும் பயனின்றிக்காய்ப் பதுமாகிய தீமையை உண்டு பண் ணும் (கண்ணுகிய) கருவேல் மரத்தை வளரச் செய்யும். |

*[அ-கை] அறியாமையால் அருந்தல் பொருந்தலைச் சுக மென்று ஆசையாய மான் போகப் போக சுகமின்றி போய்க் கொண்டிருக்கும் சிற்றின்பமாகிய கானலே பரவி இருக்கும் எனல்.*

43 ஆராத வருந்துதலும் புணர்ப்பு மாகு -
மாயாமல் வருந்தோற்ற மம்பென் றோடி,
பேராசை மான்செல்லச் செல்லப் போகும்,
பேய்த்தேரே யெம்மருங்கும் பெருகுங் கானம்.

[இ-ள்] பேர் ஆசை மான் - மிகுந்த அசையாகிய மாஞனது,

| | |
|---|---|
| ஆராத அருந்துதலும் புணர்ப்பும் ஆகும் | புசித்து நிறைவுருது உண்பதுவும் புணர்வதுவும் ஆகிய, |
| ஆயாமல் வருந்தோற் றம் அம்பு என்று ஓடி | அறியாமையால் தோன்றுகின்ற தோற்றங்களை சுகமாகிய தண்ணீர் என்று ஓடி, |

செல்ல செல்ல போகும் பேய்த்தேரை எம்மருங்கும் பெருகும் கானம் } போகப் போகக் கிட்டாது போய்க் கொண்டிருக்கும் விஷய சுகமாகிய கானல் நீரே எவ்விடத்தும் பெருகித் தோன்றும் கானகம் என்பதாம். 9

*[அ-கை] சிலர் அறியாமையால் பிணம் வைத்து எரிக்கும் காட்டை பிணக்காடு என்பர்; உடல் உள்ளவரை உண்மை யறியாமல் உண்டு உடுத்தி வாழ்வதே வாழ்வென்று எண்ணுவோர் இருக்கும் இடமே மயானமாம் எனல்.*

**44** செத்தபிண மிடுகாடு சுடுகா டென்று -
செப்புவர்க ளறியாதார் சிலர்தன் னெஞ்சத்,
தொத்தது தாமுணரா துண் டுடுத்து வாழு,
முயிரோடும் பிணம்பயில்கா டொழிய விட்டே.

[இ-ள்] சிலர் அறியாதார் - விவேகமின்றிய சில பேர்கள்,

தன் னெஞ்சத்து ஒத்தது தாம் உணராது } தம் மனத்திற்கு (வேறாகவும் சாட்சியாகவும் உலகத்திற்கும்) சம்மதமாயிருப்பதை மரண பரியந்தமும் அவரவர்கள் அறியாமல்,

உண்டு உடுத்து உயிரோடு வாழும் பிணம் } உண்பதுவும் உடுப்பதுவுமாய் சீவனோடு வாழ்கின்றவராகிய பிரேதம், இருக்குமிடமாகிய மயானத்தை விடுத்து (சொல்லாமல்)

செத்த பிணம் இடு காடு சுடுகாடு என்று செப்புவார்கள் } உயிரற்ற உடம்பைவைத்து எரிக்கும் இடத்தை மயானம் என்று கூறுநிற்பார்கள். 10

*[அ-கை] தர்மத்தைச் சொன்னால் காதிற் கனல் இட்டார் போன்றிருப்பவர் இருக்கும் இடமே பேய்கள் இருக்குஞ் சுடுகாடல்லாமல் மயானமும் வேறு உண்டோ எனல்.*

**45** அறங்காட்டி லிருசெவிமீ தழற்காட்டி-னாற்போலு மலகை வாழும்
புறங்காட்டிற் கொப்பதுமிப் புறங்காடே-வேறுண்டோ புறம்பு கூற.

[இ-ள்] அறம் காட்டில் இருசெவி மீது அழல் காட்டினர் பே — செய்வதும் செய்யத் தகாதது மான தர்மா தர்மத்தை எடுத்துக் கூறினல் இரண்டு காதுகளில் தீ வைத்தது போன்று இருக்கின்ற,

அலகை வாழும் இப் புறங் காடே — பேய்கள் போன்றவர்கள் வசிக்கின்ற லோகமாகிய மயானமே,

புறங் காட்டிற்கு ஒப்பது — சுடுகாட்டிற்குச் சமானமாய் இருப்பதாம். 11

*[அ-கை] விவேகிகள் பாவமிகுந்த பஞ்ச விஷயங்களை யும் தேகத்தையும் வெறுத்துத் துறவுற்றது; அவர்கள் இருக்கும் இடமே மயான மாகையினலல்லவோ எனல்.*

46 வெய்யமற மறப்பெருத்த விடயமெனி -
னெப்பொழுது வெறுத்து மெய்யை,
ஐயமறத் துறந்தவர்க ளறுவருத்த -
திதுசுடுகா டாகை யன்றே.

[இ·ள்] வெய்ய மறம் அற பெருத்த விடயம் எனின் — கொடிய பாவ கர்மங்கள் மிகவும் அதிகமாய் இருக்கின்ற சப்தாதி விஷயங்கள் என வேதாதி சாஸ்திரங்கள் கூறுவதால்;

எப்பொழுதும் மெய்யை வெறுத்து ஐயம் அற துறந்தவர்கள் — எச்சமயத்தும் தேகத்தை கோபித்தவர்களாய் சந்தேகமின்றி இந்த லோகத்திலும், பரலோகத்திலும் ஆசையற்றவர்கள்,

அறுவருத்தது — (காக்கை மலம் போல்) அசுத்தம் என்று விட்டது,

இது சுடுகாடு ஆகை அன்றே — இக் கயவர்கள் இருக்கும் இடமே மயானமாய் இருந்ததினல் அல்லவா 12

**[அ-கை] எதனலும் கலங்காத வீராதி வீரர்களும் நடு நடுங்கிப் போனது, இக் காட்டின் கொடுமை யல்லவா எனல்.**

47 தின்ருலுஞ் சிலரரிந்து தீற்றி ஞலுந் -
தீமையுறத் தீக்குள்ளே தள்ளி ஞலுங்,
கொன்ருலு மஞ்சாதார் தங்க ணெஞ்சிற் -
குலை குலைந்த திக்காடு கொடிதா யன்ருே,

[இ-ள்] சிலர் அரிந்து தின்ருலும் — சில வீரர்கள் தமது உடலை அறுத்துப் புசித்தாலும்,
தீமை உற தீக்குள்ளே தள்ளிஞலும் — அழிந்து போகும் படி அக்கினியில் தள்ளி விட்டாலும்,
கொன்ருலும் - கொலை செய்தாலும்,
அஞ்சாதார் — பயப்படாதவர்கள், (இத்தகையர்)
தஙகள் நெஞ்சில் குலை குலைந்தது — தமது மனத்தையும் நடு நடுங்கும் படி செய்த,
இக் காடு கொடிதாய் அன்ருே — இம் மூர்க்கர் இருக்கும் இடம் அல்லவா! கொடிய மயானம் ஆகும். 13

[அ-கை] குணம் நிறைந்தோர்க்கும் கோபம் வருதலும், மகான் களும் விட்டுப் போவதும், இக்காட்டின் கொடுமையைச் சகியாமை யல்லவா! எனல்.

48 கரையற்ற நீராருங் கனன்றெழுவ -
திக்காட்டின் கடுமை யன்ருே,
புரையற்ற பெரியோர்கள் போயகல்வ-
திவ்வெம்மை பொருமை யன்ருே.

[இ-ள்] கரை அற்ற நீராரும் கனன்று எழுவது — எல்லையின்றிய சற்குணங்களுடையோர்களையும் கோபிக்கும்படி செய்வது,
இக் காட்டின் கடுமை அன்ருே — இம்மூர்க்கர்களதுகொடுமையல்லவா,
புரை அற்றபெரியோர்கள் போய் அகல்வது — குற்றமின்றிய மகான்களும் உலகத்தைத் துறந்து சென்று விடுவதற்கு ஏதுவாய் உள்ளதும்,
இவ் வெம்மை பொருமை அன்ருே — இம் மூர்க்கரிடத்துண்டாம் கொடுமைகளைச் சகியாமை யல்லவா 14

*[அ-கை]தேவர்களாய்தேவலோகத்திற்குச்சென்றிருப்பதும், பரந்தாமன் பாற்கடலிற் பள்ளி கொண்டிருப்பதும், இக் காடாக்கினியைப் பொறுக்க மாட்டாமல் அல்லவா எனல்.*

**49** மேலாய வானேரும் விண்டிருப்ப-துடம்புற்ற வெம்மை யன்றோ
மாலாரும் பாலாழி வைகுவது - மிவ்வழலே மாற்ற வன்றோ.

| | |
|---|---|
| [இ-ள்] மேல்ஆய வானேரும் விண்டிருப்பது | சிறந்திருக்கின்ற தேவர்களும் இதனை விட்டு மேலுலகத்திருப்பது, |
| உடம்பு உற்ற வெம்மை அன்றோ | இக்காட்டினுல்தேகத்தில்உண்டான கொடிய துன்பத்தினுல் அல்லவா!, |
| மாலாரு பால் ஆழி வைகுவதும் | மகா விஷ்ணுவும் திருப்பற் கடலில் யோக நித்திரை கொள்வதும், |
| இவ் வழலே மாற்ற அன்றோ | இக் காட்டில் உண்டாம் துன்பஅக்கினியைத் தொலைப்பதற்குஅல்லவா |

15

*[அ-கை]அயன் அன்ன வாகனத்தில் ஏறிப் பறந்துபோனதும் இக்காட்டிலுள்ள துன்பத்தினுல்என்றுல் இதற்கு மேல் என்ன சொல்லவிருக்கின்றது.*

50 இன்னமுநான் வேறுசில வியம்புவதெ -
னிவ்வுலக மெல்லா மீன்றுன்,
அன்னமுமாய்ப் பறந்ததுமிவ் வாரணியத் -
துறுவெம்மை வாற்ற வன்றோ.

| | |
|---|---|
| [இ-ள்]இவ்வுலகம் எல்லாம் ஈன்றுன் | இந்த லோகங்கள் அனைத்தையும் சிருஷ்டித்த பிரம்ம தேவரானவர், |
| அன்னமும் ஆய் பறந்ததும் | அன்னமீதாரோகணித்து பிரம்ம லோகத்துக்குப் பறந்து போனதும், |
| இவ்வாரணியத்து உறும் வெம்மை ஆற்ற அன்றோ | இக்கானகத்திலுள்ள கொடுந் துன்பத்தை மாற்றிக் கொள்ளும் பொருட்டல்லவா!, |
| இன்னமும் நான் வேறு சில இயம்புவது | இதல்லாமலும் நான் பற்பலவற்றை சொல்வதில் பயனென்ன. |

16

*[அ-கை] கூறற்கரிய காட்டெரியின் மத்தியில் செல்வோமென நினைக்கவுங் கூடாது. சென்றால் தத்வ ஞானமின்றியவரை மாயை யதன் காரியமான பூதங்கள் அதஞ் செய்யுமெனல்.*

**51** ஓத வரியவெரி கான மிதிலொருவ-ரூடு வரநினைய லாயதோ,
போத வுருவநினை யாத வவரையடு-பூத கணமணவி மோதுமே

| | |
|---|---|
| [இ-ள்] ஓத அரிய எரி கானம் | இத்தகையது எனக் கூறமுடியாத துன்பாக்கினியுள்ள கானகமாம், |
| இதில் ஒருவர் ஊடுவர நினையல் ஆயதோ | இக்காட்டில் யாவராயினும் மத்தியில் புகுந்து வருவதற்கு நினைக்கவாவது கூடுமா, |
| போத உருவம் நினையாத அவரை | அறிவு வடிவமான தன்னை யுணர்ந்தறியாத அஞ்ஞானிகளை, |
| அடுபூத கணம் அணவி மோதுமே | கொல்கின்ற பூத கணங்கள் நெருக்கி சாடுவதாம். 17 |



# 4. பேய்

*[அ-கை] குற்றம் மிகுந்த கானகத்தில் உள்ள பேய்கள் பேதத்தின் உண்மை அறியாமல் மிகுந்த அறிவுடையதாகக் கூறு சில பேய்களை கூறுவாம் எனல்.*

**52** ஏத மளவுதெரி யாத கொடியவன-மேவும் வகைமருவு பேயரோ
பேத மளவுதெரி யாது பெரிதறிவு-பேசு மலகைசில பேசுவாம்

| | |
|---|---|
| [இ-ள்] ஏதம் அளவு தெரியாத கொடிய வனம் | குற்றங்களை கணக்கிட்டு அறிய முடியாத கொடிய கானகத்தில், |
| மேவும் வகை | - அடையுந் தன்மையதாய், |
| மருவு பேய் | - சேர்ந்திருக்கின்ற பேய்கள், |

| | |
|---|---|
| பேதம் அளவு தெரியாது | பேதத்தின் தன்மையித்தகையது என வரையறை யறியாமல், |
| பெரிது அறிவு பேசும் அலகை சில பேசுவாம் | மிகுந்த அறிவுடையதாகப் பேசுகின்றசிலபேய்களை எடுத்துக்கூறுவாம். 1 |

*[அ-கை] சில பேய்கள் ஒருபொருள் என்றது, சில பல என்றது, சில இருபொருள் என்றது. சில மனோ வாக்கிற் கெட்டாதவஸ்துவை நாமரூப அளவாக கூறியதெனல்*

53 ஒன்றென்று நின்றசில பலவென்று நின்றசில-
வுபயத்து நின்ற சிலவே,
அன்றென்று நின்றதனை யாமென்று சொல்லியுட-
லலகிட்டு விட்ட சிலபேய்.

| | |
|---|---|
| [இ-ள்] சில ஒன்று என்று நின்ற | சில பேய்கள் ஒருபொருள் தான் உண்டென்று கூறியது, |
| சில பல என்று நின்ற | சில பேய்கள் சீவேசுர செகத்தை யுண்மை யென்று கூறியது, |
| சில உபயத்து நின்ற | சில பேய்கள் இருபொருள் என்று கூறியது, |
| அன்றுஎன்றுநின்றதனை ஆம் என்று சொல்லி | (மனோ வாக்கிற்கு எட்டாததால் அதத்வியா விருத்தியினால்) இதல்ல இதல்ல என்று உணரத்தக்க பொருளை யித்தகையது எனக்கூறி, |
| உடல் அல கிட்டு விட்ட சில பேய் | நாமரூபமான மூர்த்திகளின் அளவு செய்து விட்டது சில பேய்கள். 2 |

*[அ-கை] சில பேய் தெய்வம் இல்லை என்றது, சில தெய்வம் உண்டு என்றது, சில நெஞ்சிலுள்ள தெய்வத்தை நினைத்தறிய மாட்டாமல் அநித்தியமும் அசுத்தமுமான தேகத்தில் இருக்கும் படியான தவத்திற்குரிய வேடங்கள் கொண்டன எனல்*

54 இலதென்று நின்றசில வுளதென்று நின்றசில-
விறைதன்னை நெஞ்சி னுணரும்,
வலதின்றி மங்குமல வுடறங்கு கின்றதவ-
வடிவங்கள் கொண்ட சிலபேய்.

| | |
|---|---|
| [இ-ள்] சில இலது என்று நின்ற | சிலபேய்கள்கடவுள்இல்லை; இல்லவே இல்லை கடவுள் எனக் கூறியது |
| சிலஉளது என்றுநின்ற | சில பேய்கள் கடவுள் இருக்கின்றார், எங்கும் இருக்கின்றார் எனக் கூறியது |
| இறைதன்னை நெஞ்சில் உணரும் வலதின்றி | கடவுளைமனத்தில்வீற்றிருக்குந்தகைமையை குருசாஸ்திரங்களைக்கொண்டறியுஞ் சமர்த்தின்றி, |
| மங்கு மல உடல் தங்குகின்ற | பார்க்கும்போதேயழிவதும்மலமுள்ளதுமாகிய உடலிலிருக்கும்படியான |
| தவ வடிவங்கள் கொண்டசில பேய் | தவ வேடங்களை மேற்கொண்டன சில பேய்கள் என்பதாம். 3 |

*[அ-கை] சில பேய்கள் துறவிகளாய் ஏக தண்டம் திரிதண்டம் எடுத்தன, சில தலைமுடி வளர்த்தன சில சடைகளை வளர்த்தன, சில மழித்து விட்டன, சில சிகையைப் பறித்தன, சில வானம் போல கடிஞசாரத்தில் பிடிவாதமாய் இருந்தன எனல்.*

55 தண்டைப்பி டித்தசில சிகையைத் தரித்தசில-
 சடையைப் பரித்த சிலவே,
முண்டித்து விட்டசில முடியைப்ப றித்தசில-
 முசுவிற்பொ றுத்த சிலபேய்.

| | |
|---|---|
| [இ-ள்] சில தண்டை பிடித்த | சில பேய்கள் ஏகதண்ட திரி தண்டங்களை யெடுத்தது, |
| சில சிகையை தரித்தது | சில பேய்கள் முடியை வளர்த்தது, |
| சில முண்டித்து விட்ட | சில பேய்கள் மழித்து விட்டதுகள், |
| சில முடியை பறித்த | சில பேய்கள் சிகையை பறித்ததுகள், |
| சிலமுசுவில்பொறுத்த | சில பேய்கள் குரங்கைப் போல் கடிஞசாரங்களைத் தரித்தது, |
| சில சடையைப் பரித்த | சில பேய்கள் சடையை வள்ர்த்தது. 4 |

*[அ-கை] சில பேய்கள் அமைதியின்றிய குதற்க நூல்களைக்கற்று அதுவே சிறந்தது என்று கற்றவருடன் கலகமிட்டுத் திரிவனவும் பல உள்ளன எனல்.*

56 அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல்பழகி-
யதுமுக்ய மாக மிகவே,
கலைகற்ற பேய்களொடு சிலுகிட்டு லாவுவன-
கரையற்ற பேய்க ளுளவே.

[இ-ள்] கரை அற்ற பேய்கள் - அளவில்லாத பேய்கள்,
அலை கெட்டு இராது - அலைதல் அற்று இருக்காமல்,
பல தலை கெட்ட நூல் பழகி } சிறப்பின்றிய பற்பல சாஸ்திரங்களைப் படித்தறிந்து,
அது மிகவே முக்யம் ஆக } அந்த நூல்களே மிக மிகச் சிறந்தது எனக் கூறி,
கலைகற்றபேய்களோடு - கற்றறிந்து இருக்கின்ற பேய்களுடன்
சிலுகு இட்டு உலாவுவன உளவே } போராடித் திரிகின்ற பேய்கள் இருக்கின்றன என்பதாம். 5

[அ-கை] *சிலபேய்கள் பயனற்றவார்த்தைகளை கேட்டுக் காலத்தைக் கழிப்பன, பிறப்பிறப்பை மாற்றும் பிரம்ம வித்யா சாஸ்திரங்களை உபதேசித்தால் கேட்பதில்லை எனல்.*

57 வறிய வானவு ரைபல கேட்பன -
மாண்டு மீண்டினி வாரா வழியினைச்,
செறிய லான பொருள்கடெ ரிந்துரை -
செய்யு மெல்லைசெ விடுக ளாவன.

[இ-ள்] வறிய ஆன உரை பல கேட்பன } பலனற்ற சொற்களை பலவற்றைக் கேட்டிருப்பின,
மாண்டு மீண்டு இனி வாரா வழியினை } இறந்து மறுபடி இன்னமும் பிறந்து வாராத மார்க்கத்தை,
செறியல் ஆன பொருள்கள் தெரிந்து } அடையத்தக்க சாஸ்த்திரார்த்தங்களை நன்கறிந்து, (பெரியோர்கள்)
உரை செய்யும் எல்லை - உபதேசிக்கின்ற போது,
செவிடுகள் ஆவன - அதைக் கேட்டறியாதவைகளாகின்றன.
6

[அ-கை] வீணுரையை ஆரம்பித்தால் வாய் மட்டுமின்றி உரோமக்கண்களும்பேசவந்து விடும்; பரமேஸ்வரனைப் பாடிப் பரவுங்கள் என்றால் ஒருவாயுந் திறவாது எனல்.

58 வம்பு கூறிலு டம்பெ லாம்வெறும் -
வாய்க ளாகிவ டித்தற்கு வல்லன,
உம்பர கோனடித் தாமரை போற்றியென் -
றுரைக்க வென்னில்வெற் றூமைக ளாவன.

[இ-ள்] வம்பு கூறில் உடம்புஎலாம்வெறும் வாய்கள் ஆகி வடித்தற்கு வல்லன — தீமையைப் பேசினால் சரீரத்திலுள்ள ஒவ்வொரு ரோமக்கண்களும் வாய்களாகப் பேசத் துடங்கிவிடும்,

உம்பர் கோன் அடித் தாமரை போற்றி என்று உரைக்க வெனில் — திருவாய்மொழி, தேவாரம், திருவாசகம் முதலிய பாசுரங்களால் தேவதேவனுடைய திருவடித் தாமரைகளைத் தோத்திரஞ் செய்து வாழ்த்துவீர் என்றால்,

வெற்று ஊமைகள் ஆவன-வாய் பேசாத மூகைகளாகின்றன. 7

[அ-கை]மெய் போன்று இருக்கின்ற பொய்யுலகத்தைப் பார்க்க வென்னில், இருவிழிகள் எண்ணற்றதாகக் காணும்; உள்ளத்திலுள்ள படியிருக்கின்ற வஸ்துவைக் காண வென்றால் இரு விழிகளும் இல்லாதனவாம் எனல்.

59 பொய்ம்மை யாகிமெய் போல விளங்கிய -
பொருடெ ரிக்கினற் புற்புதக் கண்ணின,
மெய்ம்மை யான பொருளையு ளத்தினில் -
மீண்டு பார்க்கிலவெ றுங்குரு டாவன.

[இ-ள்] பொய்ம்மை ஆகி மெய் போல் விளங்கிய பொருள் — ஆராய்ந்து பார்ப்போர்க்கு பொய்யாகியும் அவிவேகிகளுக்கு உண்மை போல் காணும் பொருளை,

தெரிக்கில் நல் புற்புதக் கண்ணின — பார்க்கும்போது நீர்க்குமிழிகள்போல நல்ல கண்கள் அளவற்றனவாம்.

மெய்ம்மை ஆன பொருளை உளத்தினில் } நித்திய பரமாத்ம வஸ்துவை சித்தத்தின் கண்,
வெறும் குருடு ஆவன - உள்ள கண்களும் அறியாதனவாம். 8

*[அ-கை] மனத்தில் மோட்சாமிர்தம் பொழியும் வேதாந்த சாஸ்த்திரங்களை மாயாவாதமென நிந்தைசெய்து கபட மனத்தால் குதர்க்க நூல்களைக் கற்று அலைந்து திரிவன எனல்.*

60 பருகு ளத்தமிர் தம்பொழி நூல்களை -
பக்க மோதிப்ப ழித்துக் கழிப்பன,
திருகு ளத்தொடு தர்க்கங்க ளேயுரை -
செய்யு நூல்கற்றுத் தெற்றர்க ளாவன.

[இ-ள்] உளத்து பருகு அமிர்தம் பொழி நூல்களை } மனத்தால் நுகரும் சாவாமருந்தைச் சொரியும் வேதாந்த சாஸ்திரங்களை
பக்கம் ஓதிப் பழித்துக் கழிப்பன } மாயாவாதம் பூர்வ பட்சமெனக் கூறி நிந்தித்து நீக்குவன,
திருகு உளத்தொடு தர்க்கங்களே உரை செய்யும் நூல் கற்று தெற்றர்கள் ஆவன } வஞ்சக மனத்தோடு தர்க்கங்கள் மாத்திரம் கூறும் சாஸ்திரங்களைப் பயின்று சுருதிப் பிரமாணமின்றி அலைந்து திரிவதாகின்றன. 9

*[அ-கை] தான் சுதந்தரமின்றியிருந்தும் தம்மை யுயர்வாகக் கருதி அதோகதி அடைவன அறியாமையை அன்னியர்க்கு அறிவிப்பார் போல், துடி துடிப்புடன் தம் வாக்கால் வசனிப்பனவாம் எனல்.*

61 ஆவ தொன்றிலை யாயினுந் தன்னைமே -
லாக வுன்னிய றக்கடை யாவன,
பாவ கத்தொன்றி லாதமை காட்டல்போற் -
படபடத் துத்தன் பாழ்வாய்தி றப்பன,

[இ-ள்] ஆவது ஒன்று இலை ஆயினும் } தன்னலாவது ஒரு காரியமும் இல்லாதிருந்தாலும்,

| | |
|---|---|
| தன்னை மேல் ஆக உன் னி அறக் கடை ஆவன | தங்களையேயுயர்ந்தவர்களாகநினைத் துக் கொண்டு மிகக் கீழானவை ஆகின்றன, |
| பாவகத்துஒன்றுஇலா தமை காட்டல் போல் | வெளிறிய மனநிலையைப் புறம்பில் உள்ளார் அறியக் காட்டுவது ஒப்ப |
| பட படத்து தன் பாழ் வாய் திறப்பன | துடி துடித்து தங்களது பயனின்றிய வாக்கால் வசனிப்பதாம். 10 |

*[அ-கை] தத்வ ஞானிகள் விஸ்ராந்தியாய் இருப்பதால் தத்வ ஞானத்தை விஸ்ராந்திக் கேது வென்றறிந்தும் அப்படிபட்ட கரும்பு ரசம் போன்ற தத்வ ஞானத்தை யடையாமல், அஞ்ஞானிகள் கூறும்பேதபட்சமான சக் கையை மெச்சித் திரிவன எனல்.*

62 ஆறு ஞானமு டையர்பி ணக்கற -
வாறு ஞானநெ றியென்ற றிந்தவர்,
கூறுஞானக்க ரும்புகொள் ளாது போய்க் -
குருடர் சொன்னசொற் கோதுகொண் டாடுவ.

| | |
|---|---|
| [இ-ள்] ஆறுஞானம்உ டையார் பிணக்கு அற | ஆறுதலுற்ற தத்துவ ஞானிகள் மனப் போரற்றிருக்கவும், |
| ஆறு ஞான நெறி என்று அறிந்தர் | விஸ்ராந்தி தருவது ஞான மார்க் கமே என்று உணர்ந்தவர்களும், |
| கூறு ஞான கரும்பு கொள்ளாது போய் | உபதேசிக்கும் ஞானமர்கிய கன்னல் ரசத்தைப் பருகாது சென்று, |
| குருடர் சொன்ன சொல் கோது கொண் டாடுவ | அஞ்ஞானிகள் உபதேசிக்கும் பேத வார்த்தைகள் உண்மை எனஎன்றும் சக்கையை மெச்சிக் கொள்வன. 11 |

*[அ-கை] புசித்தற்கு ஏதுவான இடங்களிலுள்ளவர்களை உறவு செய்வன, கண் போன்றவர் எனினும் பொருளு தவியற்றவராயின் அவரைவிட்டகல்வனவாகும் எனல்.*

63 உண்ண லானவி டந்தொறு மற்றவர்க் -
குற்ற நட்டவர் போலுற வாகுவ,
கண்ண ணூர்சில ராயினுங் கைப்பொரு -
ளில்லை யாகிற்க ழலக்க ழல்வன,

[இ-ள்] உண்ணல் ஆன இடம் தொறும் — புசித்தற்கு ஏதுவாயிருக்கும் அவ் வவ்விடங்களில்,
மற்றவர்க்கு உற்ற நட்டவர் போல் உறவு ஆடுவ — அவரவர்க்கு வேண்டிய உறவுடையவர் போன்று ஐயக்கிய பாவமாய் இருப்பன,
கண்ணனுர் சில ஆயினும் கைப் பொருள் இல்லை ஆகில், — விழிகள் நிகராய் சிலரிருப்பினும் கைவசம் பொருள் இல்லாவிட்டால்,
கழலக் கழல் வன - உறவில்லாமல் விலகி விடுவனவாம். 12

*[அ-கை] அடையத் தக்கது: உண்டு உடுத்தி சுகமாய் இருப்பதே யல்லாமல் வேறில்லை யென்ற நினைப்பினுல் அன்னம் முதலியவைகள் உதவுவோர்கள் பின் சென்று எதைச் சொன்னுலும் அதை ஆமோதிப்பனவாம் எனல்*

**64 கண்ட மட்டினி துவன்றி வேறொன்றுங் -**
**கண்டி லோங்கதி யென்னுங்க ருத்தினுற்,**
**பிண்ட மிட்டவர் தம்பிற கேஞுஞ்ஞை -**
**பிஞ்ஞை யென்றுபி தற்றித்தி ரிவன.**

[இ-ள்] கதி கண்ட மட்டு இனிது அன்றி — அடையத்தக்கது செய்தவறையிலும் சுகமாயிருப்பது அல்லாமல்,
கண்டிலோம் என்னும் கருத்தினுல் — அறிந்தது ஒன்றும் இல்லை என்ற எண்ணத்தினுல்,
பிண்டம் இட்டவா தம் பிறகே — அன்னம் கொடுப்பவர்களது பின் செல்வனவாய்,
ஞுஞ்ஞை பிஞ்ஞை என்று பிதற்றி திரிவன — ஞை பிஞ் என அர்த்தமின்றிய உரையாடி திரிவன வாகும். 13

*[அ-கை] சாண் வயிறு வளர்ப்பதற்குச் சகலலோகமும் போய் வரக் கால் சலிக்காதனவாய், கயிறு கம்பு கையில் தாங்கி இறைவனைப் போல் வருவன எனல்.*

**65 வயிறு சாணும்வ ளர்ப்பதற்பொ ருட்டந்த -**
**வானுஞ் சென்றுவ ரக்காலு டையன,**
**கயிறுங் கம்பையு மேடும்பி றர்க்கொரு -**
**காட்சி போல்வரும் புத்தகக் கையன.**

| [இ-ள்] வயிறு சாண் வளர்த்தல் பொருட்டு அந்த | ஒரு சாண் வயிற்றுக்கு உணவளித்து வளர்ப்பதற்காக அந்த, |
|---|---|
| வானும் சென்று வர கால் உடையன | தேவ லோகத்திற்குப் போய் வர கால்கள் உள்ளவனவாம், |
| கயிறும் கம்பையும் ஏடும் பிறர்க்கு ஒரு காட்சி போல் | யாத்திரைக்குரிய கயிறும் தண்டும் பனையோலைஏடும் பார்ப்பவர்குஒப் பற்றபரமேஸ்வரன்காட்சிபோன்று |

வரும் புத்தக கையன — புத்தகக் கையுடன் வருவனவாம். 14

*[அ-கை] சஞ்சலத்திற்கேதுவான பல மார்க்கங்களைக் கற்று அநுஷ்டிப்பன, தன்னை யுள்ளபடி யறியாதன தேகத்தையே ஆன்மா என்று இருந்திருப்பன, கவலைக் கிடமாயிருப்பன, அற்ப சுகங்கட்கே ஆசைப் பட்டுழல் வன, கல்வியை விற்று புசிப்பனவான அகங்காரப் பேய்கள் அனந்தமாம் எனல்.*

66 சவலைச் சாகர மாகிய சமயத் தேநிலை யாவன -
தனைமெய்ப் பாலுண ராதன தநுவைத் தானென நாடுவ
கவலைக் காகர மாவன கடைகட் கேநட மாடுவ -
கலைவிற் றேயுண வாவன கருவிப் பேய்பல கோடியே

| [இ-ள்] சவலை சாகரம் ஆகிய சமயத்தே நிலை ஆவன | இளைத்தற்கேதுவாய் கோடி கோடியான பூர்வ பட்ச மார்க்கங்களைச் சித்தாந்தமாகக் கூறுவன, |
|---|---|
| தனை மெய்ப்பால்உண ராதன | தனது எதார்த்த சொருபத்தை ஆராய்ந்து அறியாதன, |
| தநுவை தான் என நாடுவ | தேகத்தையே ஆன்மா என்று இறுப்பன, |
| கவலைக்கு ஆகாரம் ஆவன | துன்பத்திற்கு உறைவிடமாய் இருப்பன |
| கடைகட்கே நடமாடுவ | கீழான விஷய சுகங்களுக்கு என்றே சஞ்சரிப்பன, |
| கலை விற்றே உணவு ஆவன கருவிப் பேய் பல கோடியே | கல்வியை விற்று உணவு உண்டு வாழ்வனவாகிய அகங்காரப் பேய்கள் அனந்தங் கோடி உள்ளன. 15 |

*[அ-கை] வேடங்கள் தரித்தன, காமக்குரோத மிகுதியால் அமைதியற்று உலக விஷயங்களை நிலையற்றதென்றுவுணராதன, சடை கட்டாதன, முடியெடுக்காதன, உடலிலும் தலையிலும் ஆடையணியாதனமனோவாக்கிற்கெட்டாத பரவஸ்துவைதேகமுள்ளபோதே அறியாத சமயப் பேய்கள் பலவாம் எனல்.*

67 அடைகட் டாவுக கோடிக ளளவிற் காமச ஞுதியை -
யமைவற் றேநிலை யாமையு மறைவுற் றேயறியாதன,
சடைகட் டாமழி யாவுட றலைகட் டாநினை யாவொரு -
தமைமெய்ப் பாலுண ராதன சமயப் பேய்பல கோடியே.

*[இ-ள்] அடைகள் தாவுக - அலங்காரத்தோடு சஞ்சரிப்பன,*
*கோடிகள் அளவில் - கோடிக்கணக்கான,*

| | |
|---|---|
| *காம சஞுதியை அமைவு அற்றே நிலை யாமையும்,* | *காமக் குரோதாதிகளால் அடக்கமில்லாது சஞ்சலம் உற்றிருப்பன,* |
| *மறைவு உற்றே அறி யாதன* | *ஆவரண சத்தியால் மறைக்கப்பட்டு தன்னை யுணராதன,* |
| *சடைகட்டா, மழியா, உடல், தலை, கட்டா* | *சடை கட்டாதன, முடியெடுக்காதன, உடலில் உடை உடுக்காதன, தலைமயிர் கட்டாதன,* |
| *நினையா ஒரு தமை மெய்ப்பால் உணராதன,* | *மனத்திற்கு கட்டாததும் சமான மற்றதுமான தன் சொரூபத்தை உள்ளபடி யறியாதனவான,* |
| *சமயப் பேய் பல கோடியே* | *பல மார்க்கங்களிலுள்ள பிசாசங்கள் பல கோடிகளாவன,* 16 |

*[அ-கை] உழன்று திரிவதும், உண்டிக்கு ஆனவை தேடுவதும், அறிவாகிய தன்னை அறியாதனவும், உலகோரிகழ வாழ்வனவும், விலகும் படியான வார்த்தைகளாடுவனவும், கடுஞ்சொற்களை யாடுவனவும் பொன்னைத்தேடுவதிற் கருத்தாயுள்ள வகங்காரப் பேய்கள் அனந்தங் கோடியாம் எனல்.*

68 உழலத்தா னிளையாதன உணவிற் காவன தேடுவ -
வுணர்வைத் தானுண ராதன வுலகத்தார்நக வாழ்வன,
கழலத் தானுரை யாடுவ கதறத் தான்முசி யாதன -
கனகத் தேமன னுவன கருவிப் பேய்பல கோடியே.

| | |
|---|---|
| [இ-ள்] உழல தான் இளையாதன | சுழன்று திரிவதற்கு தளராது திரிவன வாகும், |
| உணவிற்கு ஆவன தேடுவ | உண்பதற்கே யாக வேண்டியதை செய்து கொண்டிருப்பனவாம், |
| உணர்வை தான் உணராதன | அறிவாகிய தமது சொருபத்தை தாம் அறியாது இருப்பனவாம், |
| உலகத்தார் நக வாழ்வன | லோகத்திலுள்ளவர்கள் இகழும்படி யாகவாழ்ந்துகொண்டிருப்பனவாம் |
| கதற முசியாதன | கரடிகள் போல் தாம் கத்துதற்கு இளையாதன, |
| கனகத்தே மனன் ஆவன | பொன் முதலியவைகளைக்கவருவதே கருத்தாய் இருப்பன வாகிய, |
| கருவிப் பேய் பல கோடியே | அகங்காரப் பிசாசங்கள் அனந்தங் கோடிகள் உள்ளனவாம். 17 |

*[அ-கை] தேகத்தை வருத்தி குரு சேவை செய்து அவர் கிருபையை அடையாமல், பிறந்திடம் கரந்திடம் என நினையாமல் போகத்தில் அழுந்தியிருந்தும் தம்மை உயர்ந்தசீவன்முத்தர்களாக நினைத்து அகங்கரித்துத்திரியும் பேய்கள் அனந்தங் கோடியாம் எனல்.*

69 மெய்வருந்திக் குரவனருள் விரும்பா தென்றும் -
விட்டிடமுந் தொட்டிடமு மறியா தேகின்,
றவ்வருகுப் பட்டனவாய் மிகவுந் தம்மை -
யகமதித்துத் திரியுபே யனந்தங் கோடி.

| | |
|---|---|
| [இ-ள்] மெய் வருந்தி குரவன் அருள் விரும்பாது | மனோவாக்குகாயங்களின்பிரயாசத்துடன் சேவை செய்து சற்குருவின் கிருபையைப் பெறுமல், |

| | |
|---|---|
| என்றும் விட்டிடமும் தொட்டிடமும் அறியாதே நின்று | எப்போதும் யோனித் துவாரத்தையும் தன பாரத்தையும் பிறந்திடம் கரந்திடம் என்றுணராமல் அதில் இச்சை இருந்தும் |
| தம்மை அவ்வருகு பட்டனவாய் | தங்களை அந்தச் சீவன்முத்திநிலையை யடைந்திருப்பதாக, |
| மிகவும் அகம் மதித்து திரியும் பேய் | அளவற்ற வகங்காரத்தை யடைந்து சஞ்சரிக்கின்ற பிசாசங்கள், |
| அனந்தம் கோடி | - பல கோடிகள் உள்ளனவாம். 18 |

*[அ-கை] தம்பசியை மாற்ற வறியாமல் அன்னியர்க்குத் தர்மம் போதிப்பன போல், உலகோர் பொருளை ஊடு கொள்ளையடிக்கும் பேய்கள் அனந்தங் கோடியாம் எனல்.*

**70 கவலையுற்ற தம்பசியைத் தணிப்ப வேறோர் -**
**கதியின்மை யாலறந்தாங் காட்டு வார்போற்,**
**குவலயத்தோர் பொருள்விரகால் வாங்கிக் கொண்டு -**
**குருக்கொடுக்கும் பேய்களொரு கோடி கோடி.**

| | |
|---|---|
| [இ-ள்] கவலைஉற்ற தம் பசியை தணிப்பவேறு ஓர் கதி இன்மையால் | கிலேசமுற்றஉதறக்கனலையொழிப்பதற்குபிறிதொருவழி இல்லாததால், |
| தாம் அறம் காட்டு வார் போல் | தாங்கள் தருமத்தைக்காண்பிப்பவர்கள் போன்று, |
| குவலயத்தோர் பொருள் விரகால் | உலகத்தோர்கள் பொருள்களை அவ் வுபாயத்தால், |
| வாங்கிக் கொண்டு | - கவர்ந்து கொள்வதாய், |
| குருக்கொடுக்கும்பேய் ஒரு கோடி கோடி | மத்தியில் முறித்துத் துன்புறுத்தும் பிசாசங்கள் ஒரு கோடி கோடியாய் உள்ளனவாம். 19 |

*[அ-கை] தன்னையும் பிறரையும் பயமுறுத்துவதும் வற்புறுத்துவதுமான கடின சித்தத்தால் கிளிகள் போல், தர்மத்தைப் பிறர்க்குக் கூறித் தன் வசமாக்கியவரைக் கெடுப்பதற்கே ஆடித் திரிவனவாம் எனல்.*

71 தன்ம னந்தனை வெருட்டு மேபிறர் -
தழும்பு நெஞ்சக டெருட்டுமே,
வன்ம னங்கொடு கிளிகள் போலறம் -
வடிக்கு மேபட நடிக்குமே.

[இ-ள்] தன்மனம் தனை வெருட்டு மே — தனது மனத்தை தானே பயமுறுத்துவதாகும்,
பிறர் தழும்பு நெஞ்சுகள் தெருட்டுமே — அன்னியரது குற்றமுற்ற மனங்களை வற்புறுத்து வனவாம்,
வன் மனம் கொடு - கல் நெஞ்சங் கொண்டு,
கிளிகள் போல் அறம் வடிக்கும் — சொன்னதைச் சொல்லும்கிளிப்பிள் போன்று நூலுரைப்பது உரைத்து அவரைத் தன்வசமாக்குவன,
பட நடிக்கும் - கெடுப்பதற்கே ஆடித் திரிவனவாம். 20

*[அ-கை] சடை வளர்ப்பதில் இச்சையுள்ளன, பிரவிருத்தியில் முழ்கி நிவர்த்தி அடையுஞ் சாதனங்களில் என்றும் ஆதரவு இல்லாதனவாம் எனல்.*

72 நீளு கின்றசடை தன்னி ளுசைமிக -
நீளுமே வினையின் மூளுமே,
மீளு கின்றநெறி தன்னி ளுதரவு -
மீளு மேயொழுக நாளுமே,

[இ-ள்] நீளுகின்ற சடை தன்னில் ஆசை மிக நீளுமே — நீண்டு வளரும் சடாபாரத்தில் மிகவும் இச்சை வைத்திருப்பனவாம்,
வினையில் மூளுமே - கர்மத்திற் பிரவிருத்திப்பனவாம்,
மீளுகின்ற நெறிதன்னில் ஒழுக நாளும் ஆதரவு மீளும் — நிவர்த்திக்கு ஏதுவான மார்க்கத்தில் நடப்பதற்கு என்றும் விருப்பம் இல்லாதனவாய் இருப்பனவாம். 21

*[அ-கை] பயனற்ற கல்வியைக் கற்று சிரம்பிளக்கச் சீறுவனவாம், பயனுள்ள ஞானசாஸ்த்திரங்களைப் பகைக்துப்பாழாய்த் திரியும் எனல்.*

73 பஞ்சு படுகலைக டன்னை யும்பல -
படிக்கு மேதலை வெடிக்குமே,
பிஞ்சு படுகலைக டன்னை யுந்துவர்,
பிடிக்கு மேபட நடிக்குமே. 22

| | |
|---|---|
| பஞ்சு படு கலைகள் தன்னையும் பல படிக்கும் தலை வெடிக்கும் | பஞ்சுபோல் பறந்து ஓடும் அனுத்ம சாஸ்த்திரங்கள் பலவற்றைக் கற்ற தனால் சிரம் பிளக்கும் படியாய் உரையாடும், |
| பிஞ்சு படு கலைகள் தன்னையும் துவர் பிடிக்கும் பட நடிக்கும் | பலனைத்தரும் அத்தியான்மநூல்களை பகைத்தவைகளாய் அழியும்படி ஆடித்திரியும் என்பதாம். 22 |

# 5. உவமை.

*[அ-கை] மனோவாக்கிற் கெட்டாத பரம் பொருளை வாக்கால் வர்ணிப்போம் என்று வசனமானது சருகைக் கொண்டு அக்கினி தேவனை எரிப்பதுபோலாம். அன்றியும் புகையிலிருந்து அக்கினி உண்டாம் என்பது போலாம் எனல்.*

74 சொல்லாலு மனனுலு மறியா வொன்றைச் -
சொல்லாலே தோற்றுவிப்பத் துணியுஞ் சொற்கள்,
புல்லாலே யெரிசுடுதல் போலும் போலும் -
போலாதேற் புகையினெழுங் கனலே போலும். 1

| | |
|---|---|
| [இ-ள்] சொல்லாலும் மனனுலும் அறியா ஒன்றை | வாக்கு தன் வாசகத்தினுலும், மனம் தனது மனனத்தினுலும், சொல்லவும் உணரவும் முடியாத ஓர் பொருளை, |
| சொல்லாலே தோற்றுவிப்ப துணியும் சொற்கள் | வாக்கால் வர்ணிப்பதற்கு துணிந்தது எது போலெனில் இவ்வாக்குகள், |
| புல்லாலே எரி சுடுதல் போலும் போலும் | துரும்பைக் கொண்டு அக்கினியை யெரித்தற்குச் சமானமாகும், |
| போலாதேல் | - இத் திருஷ்டாந்தம் இல்லை எனில், |

| | |
|---|---|
| புகையில் எழும் கனலே போலும் | புகைக்கு ஆதாரமாயுள்ள கனல் தனது ஆதேயமாகிய புகையினின்றும் தோன்றுதல் போலாம். 1 |

*[அ-கை] உபநிஷத்தாதி ஞான சாஸ்த்திரங்களைக்கற்று உணராமல், சீவபுத்தியால் செய்த பேதவாத சாஸ்திரங்களைக்கற்றுகலங்குகின்றபேய்கள்க்கண்ணில்லார் கையால் தடவிப்பார்த்து கை, கால், காது முதலியவைகளையே யானை என்று அறிந்தார் போலும் எனல்.*

75 ஒளிதருநூ லோதிமுடி பொருளைக் காணு -
தோதியநூல் பலவுணர்ந்து பிணங்கும் பேய்கள்,
களிதருமியா னையைக்குருடர் கையாற் கண்டு -
கண்டகண்ட வளவுகொடே கழறல் போலும். 2

| | |
|---|---|
| [இ-ள்] ஒளிதரு நூல் ஓதி முடி பொருளை காணுது | அபரோட்ச ஞானத்தைகொடுக்கும் உப நிஷத்தாதி அத்யான்மநூல்களை கற்றுமுடிவானபொருளை அறியாமல் |
| ஓதிய நூல் பல உணர்ந்துபிணங்கும்பேய்கள் | சீவ புத்தியால் செய்த சாஸ்த்திரங்கள் பலவற்றைக் கற்று குழம்புகின்ற பிசாசங்கள், |
| குருடர்களிதரும்யானையைக் கையால் கண்டு | பிறவிக் கண்ணில்லார் களிப்பு கொண்ட யானையை கையால் தடவிப் பார்த்து, |
| கண்ட கண்ட அளவு கொடே கழறல் போலும் | காது, கை, கால், வால், வயிறு முதலிய ஒவ்வோர் உறுப்பையே யானை என்பதுபோலக்கூறித்தம்முள் கலகம் விளைவிப்பனவாம். 2 |

*[அ-கை] விபூதி உருத்ராக்கம்முதலியனசாதனங்களோடு கூடிய சைவ முதலிய சமயிகளைக் கண்டால், கேட்டால் தீட்டு என கையில் மயில் தோகை விசிறியை வைத்து மறைத்தும், தலைமயிர் பறித்தும் மற்றவரைப் பறிக்கும்படி செய்யும் சமண மதத்தர் போலும் எனல்.*

76 கலைபகருஞ் சமயிகள்கண் காணிற் பீலிக் -
கண்ணென்றைக் காணுமெனக் கையிற் கொண்டு,
தலைபறியே சமயங்க ளென்று தத்தம் -
தலைபறித்துச் சிலசமண்பேய் சாற்றல் போலும். 3

[இ-ள்] சில சமண் பேய் - சில சமண மதத்தோர்கள்,

| | |
|---|---|
| கலைபகரும் சமயிகள் கண் காணில் | கல்வி கற்று ஓதும் சைவ முதலிய மத வாதிகளை கண்டால் தீட்டுகேட்டால் தீட்டு, என்று இருப்பதால், |
| கண் ஒன்றை காணும் என | கண்ணனது விபூதி உருத்ராக்கம் முதலிய சின்னங்களோடு உள்ள சமயிகளைப் பார்க்குமென, |
| பீலி கையில் கொண்டு | மயில் தோகை விசிறி கரத்தில் வைத்து மறைத்துக் கொண்டு, |
| தலை பறியே சமயங்கள் என்று | தலை ரோமம் பறிப்பதே உயர்ந்த மார்க்கம் எனக் கூறி, |
| தம்தம் தலை பறித்து சாற்றல் போலும் | தத் தமது தலை ரோமம் பறிப்பவர்களாய் மற்றவரையும் பறிக்கும்படி உபதேசிப்பது போலும் என்க. 3 |

*[அ-கை] அருட் குருவை அடைந்து பத்தியோடு பணி செய்யாமல் அருவமாகிய வான்மாவை அடைய எண்ணுவது பழத்தை விட்டு ரசம் அருந்த நினைப்பார் போலும் எனல்.*

77 அன்புறுநற் குருபரனுக் கன்பு செய்யா -
தருவுருவைப் பெறவிருக்குந் தன்மை யையோ,
வினபுறுநற் கனிபாறே னினித ருந்தா -
திரதநுகர் வுறவிருப்பா ரியல்பு போலும். 4

| | |
|---|---|
| [இ-ள்] அன்பு உறும் நல் குரு பரனுக்கு | கிருபையுள்ள நல்ல சற்குருநாதனுக்கு ஆர்வத்தோடு மனோ வாக்கு காயங்களால் திருப்பணி புரியாமல், |
| அரு உருவை பெற இருக்கும் தன்மை ஐயோ | தத்துவ ஞானத்தால் மோட்சத்தை அடைய நினைக்கும் இயல்பை நோக்கில் மிகவும் ஆச்சரியம் |
| இன்பு உறு நல் கனி பாறேன் | சுகந்தரும் நல்ல பழம் பார்க்கவும் முடியாது கிடைக்குமானால், |
| இனிது அருந்தாது | சுகமாய் புசியாது விட்டவர், |

| | |
|---|---|
| இரதம்நுகர்உற இருப்பார் இயல்பு போலும் | பழரசம் அருந்த நினைப்பவர்களுடைய சுபாவத்தை யொக்கும் என்று அறியவும். 4 |

[அ-கை] உருவமின்றிய பரமாத்மாவே சற்குருவாய் வந்து உபதேசிக்குஞானத்தை அநுமான முதலிய பிரமானங்களைக் கொண்டு சிலருக்கு உபதேசிக்கும் ஆசாரியத் தன்மையானது பிறவிக் குருடன் வந்த குருடனுக்கு வழி காட்டல் ஒக்கும் எனல்.

78 அருவாய பரனுருவா யருள்வ தொன்றை -
அஞ்சாதே சிலவளவை கொண்டு தாமுங்,
குருவாகிச் சிலகுருப்பேய் கூறுந் தன்மை -
குருடருக்குக் குருடர்நெறி கூறல் போலும். 5

| | |
|---|---|
| [இ-ள்] அருவு ஆய பரன் உருவாய் அருள்வது ஒன்றை | மனோவாக்கிற்கு எட்டாத பரம்பொருள் கருணையால் ஓர் வடிவெடுத்து வந்து உபதேசிக்கத்தக்க ஓர் பொருளை, |
| அஞ்சாதே சில அளவை கொண்டு | பயமின்றி அநுமான உபமான முதலிய சிற்சில பிரமாணங்களை வைத்து, |
| தாமும் குருவாகி சில குருப் பேய் கூறும் தன்மை | தாங்களும் உபதேச கர்த்தாக்களாயும் உபதேசிக்கின்ற சிற்சில குருமார்களது உபதேசம் எது போல் எனில் |
| குருடர்க்குக் குருடர் நெறி கூறல் போலும் | பிறவிக் குருடர்க்கு மத்தியில் வந்த குருடர் வழிகாட்டுவது ஒக்கும் என்பதாம். 5 |



# 6. உட்சோலை

*[அ-கை] துன்பம் நீங்காத துஷ்டப் பேய்கள், அடைய முடியாத யோகமாகிய சமாதி அவஸ்தையில் ஆத்ம சொருபமாய்இலங்குந்தேவியேஉட்சோலையாம்எனல்*

**79** போகாத துயர்மேவு பொல்லாத - விப்பேய்கள் புகுமாறிலா,
யோகால யத்துள்ளி ருப்பாடி - ருச்சோலை யுட்சோலையே. 1

| | |
|---|---|
| [இ-ள்]போகாததுயர் மேவி பொல்லாத இப் பேய்கள் | விட்டு ஒழியாத துன்பத்தைப் பொருந்தும் கொடிய இப் பிசாசங்கள், |
| புகுமாறு இலா யோகாலயத்து உள்ளிருப்பாள் | அனதிகாரிகள் அடையும் படிக்கில்லாத யோக முடிவில் உண்டாகும் (யான் எனது அற்ற அவஸ்தான ரூப நிர்விகற்ப சமாதியில் தனது சொருபமாய் இலங்குந் தேவியே, |
| திருச் சோலை உட்சோலையே | அழகிய பூஞ்சோலையாகிய உட்சோலையாம். 1 |

*[அ-கை] அஷ்ட மங்கள மூர்த்தங்களையும் அழியாது முடிக் காக்கும் வஸ்திரமாகிய வல்லமையுள்ள பரமேஸ்வரன் அடியார்கள் உட்சோலையை அனுயாசமாய் அடைவரர்கள் எனல்.*

**80** ஆகாச நீர்பூமி யனல்கால் ரவிசோம ரவியாதுமூ,
டேகாச தரநாத னடியார்கள் பயில்வார் களிதமாகவே. 2

| | |
|---|---|
| ஆகாசம் நீர் பூமி அனல் கால் இரவி சோமர் | வானம் அப்பு பிருதிவி அக்கினி வாயுவாகிய பஞ்ச பூதங்களையும் சூரிய சந்திரர்களையும், |
| அவியாது மூடும் ஏகாச தரம் நாதன் அடியார்கள் | அழியாமல் மூடிவைக்கும் உத்தரீயமாகிய வல்லமையுள்ள பரமேஸ்வரனுடைய மெய் அடியார்கள், |

| | |
|---|---|
| இதம் ஆகவே பயில் வார்கள் | சுலபமாகவே (இவ் வுட் சோலையை அடைவார்கள்.) 2 |

*[அ-கை] அத்வைத ஞானசாஸ்த்திரங்களும், சற்குணத்தை உடைய ஞானிகளும், விஸ்ராந்தியானதிருவருளும் குறைவற்ற 64கலைஞானங்களும் இவ்வுட் சோலையைக் கூறுவதேயன்றி வேறில்லை எனல்.*

**81** ஆறு மிலகலை நீருமறிஞர்க - ளாறு நிறையுமவ் வருளுமே,
வேறு மிலகலை கூறு பதினறு - நாலு மலதுவிளம்பிலே. 3

| | |
|---|---|
| [இ-ள்] ஆறும் இலகலை நீரும் அறிஞர்கள் | அத்வைதஞானமும்மைத்திரிகருணை முதிதை உபேட்சையாய சற்குணங்களும் ஞானிகளும், |
| ஆறும் நிறையும் அவ் வருளும் | விஸ்ராந்தியும், அழிவின்மையும், (நிறைவும்) அத் திருவருளும், |
| பதின் அறு நாலு கலை கூறும்அலது விளம்பில் வேறும் இல | அறு பத்து நான்கு கலை ஞானங்களும் எடுத்துரைப்பது இவ் வுட் சோலையே யல்லாமல் கூற வேறில்லை என்பதாம் 3 |

*[அ-கை] யோகிகளும் வேத வேதாந்தங்களும் தேவியின் திருவடிகளை தங்களுக்கு முடிந்தமட்டும்வாழ்த்திக் கொண்டிருப்பன எனல்.*

**82** நிலவியகிளிகளுலவியகுயில்க-ளிறைபயிலியல்பதிறைவர்தாள்,
குலவிய மறைக ளிறைவிதனருகு-குழறுவ குழறுவ மழலையே

[இ-ள்] நிலவிய கிளிகள் - ஞான யோகிகளாகிய கிளிகளும்,
உலவிய குயில்கள் - கர்ம யோகிகளாகிய குயில்களும்,

| | |
|---|---|
| இறைவர் தாள் நிறை பயில் இயல்பது | உட்சோலையில் தேவரின் கல்யாண குணங்களைப்பாடுந்தன்மையதாயின |

குலவியமறைகள் - அனுதியாய்விளங்கும் வேதவேதாந்தங்கள்
இறைவிதன் அருகு - தேவியின் சமீபத்திலிருந்து கொண்டு,

| | |
|---|---|
| குழறுவ குழறுவ மழலையே | அரை குறைவான மழலைச் சொற்களை மீண்டும் மீண்டும் கூறுவன 4 |

*[அ-கை] உடல் எரியவும், சீவன் சோகமுறவும், சஞ்சல முற்று பயந்து சோர்வடைந்த போது, குளிரிடமின்றி அழகிய கருணையால் விளங்கும் தேவியின் திருவடித் தாமரையே நிழலாகும் எனல்.*

83 அழலுற உடலு மயர்வுற வுயிரு - மலம்வர வெருவி யயருநா,
ணிழலில பிறிதவ் வழகிய கருணை-நிகழ்வுறு நிழலொர் நிழலுமே

| | |
|---|---|
| [இ-ள்] உடலும் அழல் உற | தேகம் மரண காலத்தில் தீ போல் எரியவும், |
| அலம் வர வெருவி அயரும் நாள் | மனம் சுழலவும் பயமுற்று சோர்வு அடையும் காலத்தில், |
| நிழல் பிறிது இல | - நிற்க குளிர்ந்திடம் வேறு இல்லை. |
| அவ்வழகிய கருணை நிகழ்வுறும் நிழல் | அந்த கிருபையால் விளங்கிக்கொண் டிருக்கும் உட் சோலையே, |
| ஒரு நிழல் | - ஒப்பற்ற குளிர்ந்திடமாகும். 5 |

*[அ-கை] எப்போது உலகம் உண்டோ அப்போதிருந்து இவ்வுட் சோலையின் வேறாய் இதுவரை இவ்வுலகில் ஓர் பொருளாகிலும் இருந்ததில்லை. எப்பொழுதும் நித்திய மாய் இருந்தது இவ்வுட் சோலையாகியாகிய ஒரே பொருளாம் எனல்.*

84 என்றிவ் வுலகுள தன்று முதலெதி -
ரின்று வரையிதி லொன்றுதா,
னின்ற தெனவிலை யென்று மொழிவற -
நின்ற தொருபொரு ளொன்றுமே. 6

| | |
|---|---|
| [இ-ள்] என்று இவ்வுலகு உளது அன்று முதல் எதிர் | எக்காலத்தில்இந்தஉலகம் இருக்கின் றதோ அக்காலத்திலிருந்து வேறுக |
| இன்று வரை இதில் ஒன்று நின்றது என இல்லை | இக்காலபரியந்தம்இந்தவுட்சோலையி ல் ஒருபொருள் இருந்ததென்பதில்லை |
| என்றும் ஒழிவு அற நின்றது ஒரு பொருள் ஒன்றுமே | எக்காலத்தும்நீக்கமின்றிநிலைபெற்றி ருப்பது ஒப்பற்ற வுட்சோலையாகிய ஒரே பொருள் தான் என்பதாம். 9 |

# 7. கோயில்.

*[அ-கை] அறுதியான வேதாந்தங்களாலும் கோயிலை அளவு கூறலாகா!பத்துத்திக்கும் நிறைந்த பரமாத்மா வீற்றிருப்பதாம் எனல்.*

85 ஆதி நாலுமா மறைகள் சூழ்வதற் -
  கரிய கோயிலுக் களவு கூறவோ,
 வோது நாலிரண் டுடனி ரண்டுதிக் -
  குண்ட மேனியக் கோயி லுள்ளதே.

| | |
|---|---|
| [இ-ள்] ஆதி நாலு மா மறைகள் | முதன்மையான நான்கு சிறந்த வேத வேதாந்தங்களும், |
| சூழ்வதற்கு அரிய கோயிலுக்கு | அறிவதற்கு அரியதாய் இருக்கின்ற அந்த ஆலயத்திற்கு, |
| அளவு கூறவோ | - வரையறை சொல்ல முடியுமோ!? |
| ஓது நால் இரண்டுடன் இரண்டு திக்கு | கூறுவதெனில் பத்து திக்குகளையும், |
| உண்ட மேனி அக் கோயில் உள்ளதே | விழுங்கிய பரப் பிரம்மமான தேவி யானவள் அந்த ஆலயத்தில் இருப்பள் என்பதாம். 1 |

*[அ-கை] ஆறு சமயங்களும் அறைவதேயலால் அறியாததும் அறிதற்கரிதாமதை உள்ளபடி அறிந்து ஓதுவாரார்? மனுதிக்கு எட்டாத மகா தேவர் வீற்றிருக்கும் பெருங் கோயிலாம் எனல்.*

86 சமய மாறுதா னறைவ தேயலாற் -
  சதுமு காதிகா ணரிய தார்கொலோ,
 வமையு மாறுதா னரிய வோதுவா -
  ரரிய கோலம்வாழ் பெரிய கோயிலே. 2

| | |
|---|---|
| [இ-ள்] சமயம் ஆறு தான் அறைவதே அலால் | சமயங்கள் ஆறும் (ஏட்டுச் சுரக்காய் எனத்) தாங்கள் பற்பல விதமாகக் கூறிக்கொண்டிருப்பதே யல்லால், |
| சதுமுகாதிகாணரியது | நான்முகன் முதலியதேவர்களாலும் கண்டுரையாட முடியாததை, |

ஆர் கொலோ அமையும் ஆறுஅறிய ஓதுவார் } வேறுஆர் அந்த ஆலயத்தை சம்மதிக்கும் வழியாய் அறியும் படியாய்க் கூற முடியும்,

அரிய கோலம் வாழ் பெரிய கோயில் } மனோவாக்கிற்கு அரியதான பரம் பொருளாகிய தேவி வீற்றிருக்கின்ற பேராலயமாகும். 2

*[அ-கை] எல்லாவற்றிற்கும் இருப்பு விளக்கத்தை தந்து விளக்குவதை விளக்குவதற்கு விளக்கில்லை எனல்.*

**87 மெய்வி ளக்கினர் மேவு கோயிலுக்,**
**கெவ்வி ளக்குவே றினிவி ளக்குமே.**

[இ-ள்] மெய் விளக்கினர் மேவு கோயிலுக்கு } சத்துக்களுக்கு எல்லாம் சத்தையைக் கொடுத்து விளக்கும் பரம்பொருள் எழுந்தருளி இருக்கும் ஆலயத்திற்கு,

இனி வேறு - இதற்கு வேறு விளக்கமாக,

எவ்விளக்கு விளக்கும் } எந்த தீபமானது வந்து விளங்கும் படி பிரகாசிக்கப் போகின்றது. 3

# 8. பலி பீடம்.

*[அ-கை] கோடிக்கணக்கான அண்டங்கள் ஓர் கவள அன்னமாய் இருப்பது பலி பீடமாம் எனல்.*

**88 அண்ட கோடிநூ றுயி ரங்களோர்,**
**பிண்ட மாவிடும் பெரிய பீடமே. 1**

[இ-ள்] நூறுயிரம்கோடி அண்டங்கள் ஓர் பிண்டம் ஆய் விடும் பெரிய பீடமே } எண்ணற்றிருக்கும் கோடானுகோடி அண்டங்கள் எல்லாம் சேர்ந்தொரு கவளமாய் இருப்பதான பெரும் பலி பீடமாம். 1

*[அ-கை] பிறப்பொழிக்க வழிபடு தவத்தினர் பலியிடுவது தன்னை எனல்.*

**89 பவத்தி னர்பொடி படப்ப ராவிய,**
**தவத்தி னர்பலி கொடுப்பர் தம்மையே. 2**

| | |
|---|---|
| [இ-ள்] பவத்தினர் பொடி பட | பாவத்திற்கும் பிறப்பிற்கும் பயந்தவர்கள் அவை அழியும் பொருட்டு, |
| பராவிய தவத்தினர் | மனோவாக்கு காயங்களால் இறைவியைபோற்றும்தவம்உடையோர்கள் |
| பலி கொடுப்பர் தம்மையே | பலியிடுவது நான் என்கின்ற அகங்காரத்தையே யாம். 2 |

*[அ-கை] தேவரீர் பரமேஸ்வர வடிவம் ஆதலின், தாங்கள் செய்த கைமாறுக்கு பதில் செய்திலம்; எங்கள் உடல் பொருள் ஆவியை கைமாறாக எடுத்துக் கொள்ள வேண்டுமெனப் பணிந்து தரும் பலி பல எனல்.*

90 தமதுரு விறைவடி வுறுதலி னிதநிகர் -
தருவது மொருபொரு ளிலமிது தகவில,
தெமதுயி ரெனினுமி தமுதுசெய் வதுகட -
னெனவடி தொழுதிடு பலிபல பலவே. 3

| | |
|---|---|
| [இ-ள்] தமது உரு இறைவடிவுஉறுதலின் | தேவரீருடைய திருமேனி பரமேஸ்வரனுடையதாய் இருத்தலினால், |
| இதம்நிகர் தருவதுஒரு பொருள் இலம் | தாம் செய்த நன்றிக்குச் சமமாகக் கொடுப்பதற்கு ஓர் வஸ்துவும் எமதிடமிலது |
| இது தகவு இலது | - இம் முறை தகுதியற்றதாம், |
| எமது உயிர் எனினும் அமுது செய்வது கடன் என | எங்கள் உடல்பொருள்ஆவியை அற்பமெனினும் தாங்கள் எடுத்துக் கொள்வது முறை என்று, |
| அடி தொழுதிடு பலிபல பலவே | திருவடியை வாழ்த்தி வணங்கி தரும் பலிப்பொருள்கள்பற்பலவாம்எனல் 3 |

*[அ-கை] உடல் முதலனைவராக உலகிலுள்ள அனைத்தையும் எடுத்துக் கொண்டனை இனி பலிப் பொருள் ஒன்றுமில்லை என்ற ஓசை பலவாம் எனல்.*

91 உடையன வுடலுயி ருறும்வினை யுளமுணர் -
வுலகது தனிலின முரைசெய வருபொரு,
ளடையவு மமிர்துசெய் தனையினி யமிர்துசெய் -
வதுமில தெனுமொலி யவைபல பலவே.

| | |
|---|---|
| [இ-ள்] உடல் உயிர் உறும் வினை | தேகம் சிதாபாசன் இவற்றிற் பொருந்திய கர்மம், |
| உளம் உணர்வு உலகு | - புத்தி யதன் ஞானம் செகத்து, |
| அது தனில் இனம் உரை செயவரு பொருள் உடையன அடையவும் | அதிலுளதாக இன்னமும் சொல்லும் படியாய் இருக்கின்ற வஸ்துக்களான எல்லாவற்றையும், |
| அமிர்து செய்தனை | - புசித்து விட்டனை, |
| இனி அமிர்து செய்வதும் இலது | இனிமேல் புசிப்பதற்கு யாதொன்றும் இல்லையாம், |
| எனும் ஒலியவை பல பலவே | என்கிற சப்தங்களானவை பற்பலவாகக் காணப்படுவதாம். 4 |

# 9. ஆல்.



*[அ-கை] தன்னை நினைப்பவர்கள் இருதய மலரை இடமாகக் கொண்ட தேவி வீற்றிருக்கும் வட விருட்சமுளது அதனளவு நோக்கும் போது ஓர் வித்தினளவு ஓர் அண்டம் எனலாம் அதன் முழுவித்தை கூறுவரர் எனல்.*

92 மருவிதய கமலமுறை வாளென்றும் வாழ்வதொரு -
வடமுமுள ததனளவை யாமிங்கு நாடளவி,
னொருவிதையி னளவளவி லோரண்ட மாகுமதி -
னுளகனியி னளவையினி யார்கண்டு கூறுவரே. 1

| | |
|---|---|
| [இ-ள்] மருவு இதயகமலம் என்றும் உறைவாள் | பொருந்தும் இதய தாமரையில் எப்போதும் வீற்றிருப்பவளான தேவி |
| வாழ்வது ஒரு வடம் உளது | - வாழ்வதானஓர் ஆலவிருட்சமுளது |
| அதன் அளவை யாம் இங்கு நாடு அளவில் | அதனது எல்லையை நாம் இவ் இடத்து ஆராயும் போது, |

| | |
|---|---|
| ஒரு விதையின் அளவு அளவு இல் ஓர் அண்டம் ஆகும் | ஓர் வித்தின் எல்லே அளவற்றிருக்கின்ற ஓர் அண்டம்எனக் கூறப்படும் |
| அதின் உள கனியின் அளவை இனியார் கண்டு கூறுவரே | அதடத்துள்ள பழத்தினது முழுவடிவத்தின் எல்லே வேறுஆர் அறிந்து உரைப்பவர். 1 |

*[அ-கை] உலகத்தையும் பிரம்மாவையும் உந்தியில் தோற்றுவித்த திருமால், அதில் ஓர் தளிர் நுனியில் இருப்பர் எனில் மரக்கிளேகளே கூறுவதுக் அரிது எனல்.*

93 அயனேயுல கடையவரு மோருந்தி மாமலரி -
னருளியறி வரியபர யோகொன்றி மாறுயில் கொள்,
சயனமென மொழிவதொரு தாழ்கொம்பின் மேவுசிறு -
தளிரினொரு தலேயினுனி யேதென்பர் சாகையையே.2

| | |
|---|---|
| [இ-ள்] அயனே உலகு அடையவரும்ஓர்உந்தி மாமலரில் அருளி அறிவு அரிய பரயோகு ஒன்றிமால்துயில்கொள் | பிரம்மாவும் உலகங்களி யாவும்உண்டாகும் ஒப்பற்ற திருவுந்திக் கமலத்தில் உண்டாக்கி, அரிதற்கரிய யோக நித்திரை யுற்றிருக்கும், மகா விஷ்னு நித்திரை கொண்டிருக்கும், |
| சயனம் என மொழிவது | இடமென்று கூறுவது, |
| ஒரு தாழ் கொம்பின் மேவு சிறு தளிரின் | தாழ்ந்த கிளேயிற் பொருந்திய சிறு தளிரின் கண்ணுள்ள, |
| ஒரு தலேயின் நுனி சாகையை ஏதென்பர் | ஓர் தலேயினது நுனியாம் அதன் கிளேகளே எத்தகையது எனச் சொல்ல முடியும் என்பதாம். 2 |

*[அ-கை] இவ்வாலின் சிறு விழுதின் நிழலில் தெட்சணுமூர்த்தி அமர்ந்திருக்க சனகாதிகள் வேதார்த்தம் அறிந்தனர் எனல்.*

94 செறியும்வகை யரியதென வேதங்க ளோதுபொரு -
டொரியவிர கொருவரறி யாதன்பி ஞலரஞெ,
டறியும்வகை யகிலவுல காய்வந்து கூடியது -
மதனில்விடு சிறியதொரு வீழ்கின்ற நீழலிலே.

| | |
|---|---|
| [இ-ள்] வேதங்கள் செறியும்வகைஅரியதுஎன | வேத வேதாந்தங்களில் பூர்வபட்சசித்தாந்தங்களும்அதிகாரிகளும்பலவகையாய் இருத்தலால் அறிவதற்கு அரிது என்பதால், |
| ஓதுபொருள் தெரியவிரகுஒருவர்அறியாது | பிரதிபாதிக்கும் அர்த்தங்களை தெரிந்துகொள்ளும் உபாயம் ஒருவரும் அறியாதவர்களாய், |
| அன்பினுல் அரன் அறியும் வகை | கிருபையால் தெட்சணாமூர்த்தமாய்த்தெரிந்து கொள்ளும் உபாயமாய் |
| அகில உலகாய் வந்து கூடியதும் அதனில்விடு | சர்வ லோகத்தவர்களும் வந்து கூடியிருந்தது அவ்வால விருட்சத்தில் விட்டிருக்கும், |
| சிறியது ஒரு வீழ்கின்ற நிழலில் | சிறியதோர் விழுதினது நிழலாகும் 3 |

*[அ-கை] பிரமாண்டத்தின் அளவு கூறல்.*

95 இரையுமெழு கடலும்வளை யாநின்ற வேழ்புவியு -
மெழுமலையு முலகுபதி ஞலுந்த ஞடுருவும்,
வரையுமிரு சுடரடைய வோரண்ட மாகுமிது -
வடவிதையி னளவுமில தாலென்கொ லோதுவதே,

| | |
|---|---|
| [இ-ள்] இரையும் எழு கடலும் | சப்திக்கும் ஏழு சமுத்திரங்களும், |
| வளையா நின்ற ஏழ் புவியும் | அவ்வேழு சமுத்திரங்களால் சூழ்ந்திருக்கின்ற ஏழு தீவுகளும், |
| எழு மலையும் | உயர்ந்திருக்கும் அஷ்ட குலாசலங்களும், |
| உலகு பதிஞலும் | பதிஞன்கு லோகங்களும், |
| ஊடு உருவும் வரையும் | மத்தியில் புகுந்திருக்கும் மகாமேரு கிரியும், |
| இருசுடர் அடைய ஓர் அண்டம் ஆகும் | சூரிய சந்திரர் இவையாவும் சேர்ந்து ஓரண்டமாம், |
| இது வட விதையின் | இவ் அண்டம் ஆலம் வித்தின், |

அளவும் இல்து - பரிமாணங் கூடஇல்லை என்றால்,

ஆல் என் ஓதுவது } அத்தேவி வாழ் ஆல விருட்சத்தை நாம் எவ்விதங் கூறலாம். 4

*[அ-கை] இவ் ஆலமரத்தின் ஊசலாகிய முத்தொழிலுற்றம் மூர்த்திகளும் உசல் நின்றால் அல்லது தாம் நின்றிலர் எனல்.*

96 நெரியமுய லகன்முதுகு நாகன்ப ணுமகுட -
நெறுநெறென முறியநட மாடுஞ்ச டாதரனு,
மரியுமல ரவனுமதி லேநின்ற வூசல்மிசை -
யணையவரி னவர்கள்விசை போயன்றி மீள்விலரே. 5

| | |
|---|---|
| [இ-ள்] முயலகன் முதுகு நெரிய | முயலகன் முதுகு நொறுங்கவும், |
| நாகன் பணுமகுடம் நெறு நெறென முறிய நடம் ஆடும் சடாதரனும் | ஆதிசேடனது ஆயிரஞ் சிரங்களிலுள்ள கிரீடங்கள் எல்லாம் நெறுநெறென்று ஒடியவும் நடனமாடுகின்ற பொற்சடையரானசிவபெருமானும் |
| அரியும் மலரவனும் | விஷ்ணுவும் பிரம்மாவும், |
| அதிலே நின்ற ஊசல் மிசை அணைய வரின் | அவ் விருட்சத்திலுள்ள ஊஞ்சலின் மேல் ஏறி இருந்தால், |
| அவர்கள் விசைபோய் அன்றி மீள்விலர் | அவர்களும் ஊஞ்சலாடும் வேகம் போனால் அல்லாமல் திரும்பிவர மாட்டார்கள். 5 |

*[அ-கை] அருட் குரவன் நீக்கினால் அல்லது நில்லாது ஆடும் பிறப்பிறப்பாய வூசல் எனல்.*

97 மாருத வருளுடையான் மாறென்ற லன்றிவிசை
யாருத வவ்வூச லதிலூச லல்லவோ. 6

| | |
|---|---|
| [இ-ள்] மாருத அருள் உடையான் மாறு என்றால் அன்றி | சீவர்களிடத்தில் ஆராத திருவருளுடையவன் (பிறப்பிறப்பாகியவேகத்தை) நீக்கினால் அல்லாமல் |

விசை ஆராத - நீக்கினுல் அல்லாமல் அவ் வேகமானது,

அவ்வூசல் அதில் வூசல் அல்லவோ! } மாருதிருக்கின்ற முத்தொழில்களே அவ் ஆலமரத்தில் உள்ள வூஞ்சல் அல்லவோ 6

*[அ-கை] விருட்சத்தின் மூலம் பரமாத்மா என்றும் காரியம் உலகம் என்றுங் கூறல்.*

98 மேனேக்கி வீழோட்டி விரிதிசையே கவடோட்டிக்,
கீழ்நோக்கிக் கிளேயோட்டிக் கிளரவளர் வடமிதுவே. 7

[இ-ள்] மேல் நோக்கி வீழ் ஓட்டி } மேன்முகமாக விழுதுகளேச் செல்லும் படி செய்தும்

விரிதிசையே கவடு ஒட்டி } விரிந்த பத்துத் திக்குகளே கொம்பு களாய் செல்லவும்,

கீழ் நோக்கி கிளே ஓட்டி - அதோ முகமாய் கிளேகள் செல்லவும்,

கிளர வளர் வடம் இதுவே } உயர்ந்து வளர்ந்திருக்கின்ற ஆல விருட்சமாம் 7

*[அ-கை] காமிய கர்மத்தைச் செய்து அப்பலனேப் புசிக் கும் சீவர்களே அம்மரத்திலுள்ள பட்சிகளாகும் எனல்.*

99 ஆசையெனுந் தளேயிட்டே யமையாமற் பறந்திந்தப்,
பாசம்விடப் பறவாத பறவையதிற் பறவைகளே.

[இ-ள்] ஆசைஎனும்தளே இட்டே அமையாமல் } இச்சை என்கிற கால் விலங்கைப் போட்டு ஆசை நீங்காமல்,

பறந்து இந்த பாசம் விட பறவாத பறவை அதில் பறவைகள் } இக பரங்களில் சஞ்சரித்து இவ் விச்சை நீங்கும் படியாக நிஷ்காமகர்மம் உபாசனே ஞானமாகியசாதனங்களே அடையாத சீவர்களே, அவ்விருட் சத்திலுள்ள சுக துக்கங்களே அநுப வித்திருக்கும் பட்சிகளாம். 8



# 10. தேவி

*[அ-கை] தேவியின் சொரூபத்தைக் கூறல்.*

**100** அன்னையென வெழுந்தருளு மருளுடைய திருமேனி,
தன்னையினி யாமறியுந் தன்மையினைச் சாற்றுவாம், 1

[இ-ள்] அன்னை என எழுந்தருளும் } தாய் போலும் தோன்றி இருக்கின்ற
அருளுடைய திருமேனி தன்னை இனியாம் அறியும் } திருவருளுடைய அழகிய சொரூபத்தை இதற்கு மேல் யான் அறியும்,
தன்மையினை சாற்றுவாம் - பிரகாரத்தைக் கூறுவேனாக. 1

*[அ-கை] இன்பக் கடலாய் ஞான சொருபமாய் வாடாமலராய் அளவற்ற வாசனையாய் பிரம்மாதி தேவர்களும் சகல வேத வேதாந்தகளும் நாம சங்கீர்த்தனங்களும் குசல புத்தியினாலும் தொட முடியாத திருவடிகளை உடையவள் எனல்.*

101 மதுர வாரி யாய்ஞான மயம தாகி வாடாத -
மலர தாகி நாடாத மணம தாகி யானுத,
சதுமு காதி வானோர்கள் சகல வேத கீதாதி -
தகும நாதி யான்மீது தடவொ ணாத தாளாளே. 2

[இ-ள்] மதுர வாரியாய் - இன்ப சமுத்திரமாய்,
ஞான மயமது ஆகி - ஞான சொருபமாகவும்,
ஆனுத சது முகாதி வானோர்கள் சகல வேத கீதாதி } அழியாத அயனாதி தேவர்கள் சகலமான வேத வேதாந்தங்கள் நாம சங்கீர்த்தனாதிகள்,
தகும் மனாதியால் - தகுந்த மன முதலிய எல்லாவற்றாலும்,
மீது தடவொணாத தாளாள் } மேல் தழுவ முடியாத தன்மை உடைய திருவடிக்ளை உடையவளாம். 2

*[அ-கை] இறைவனை வாழ்த்தி வணங்காமல் பிறப்பிறப் பாகிய மாயை யாலுற்ற துன்ப நீங்காமல் கண்ணீர்*

*சொரிய வாய் விட்டலரும் அதிகாரிகளை வெறுக்காமல் மோட்சாமிர்தம் அளிக்குந் தன பாரங்களை உடையவள் எனல்.*

102 தொழுதெ ழாவி ழாவாறு சுழலுமாற ருமாயைத் -
துயரி ளுல்வி டாதாறு சொரிய வாய்வி டாநாளு,
மழுத பாலர் சீறும லமிர்த வாரி யாயூறி -
யருள்ப யோத ரீயாகி யமிர்த பான மீவாளே. 3

| | |
|---|---|
| [இ-ள்] தொழுதுவிழா எழா வாறு | பரமேஸ்வரனை வாழ்த்தி பூமியில் படிய வணங்கி யெழுமாறின்றி. |
| சுழலும் ஆறு அரு மாயை துயரினுல் விடாது | பிறப்பிறப்பிற் சுழன்று திரிதலொழியாத அஞ்ஞானத்தினுல் உண்டாம் துன்பம் நீங்காத படியினுல், |
| ஆறு சொரிய வாய் விடா | ஆறு போற் கண்களில் நீரொழுக திறந்த வாய் மூடாதபடி, |
| நாளும் அழுத பாலர் சீறுமல் | தினம் தினமும் அழுது கொண்டிருக்கின்ற பாலரான அதிகாரிகளைக் கோபிக்காமல், |
| அமிர்த வாரி ஆய் ஊறி அருள் | மோட்சாமிர்தம் சமுத்திரம் போல் பெருகத் திருவருள் புரியும், |
| பயோதரி ஆகி அமிர்த பானம் ஈவாள் | தனபாரங்களை உடையவளாய் மோட்சாமிர்தத்தைக் கொடுப்பவள் ஆகும். 3 |

*[அ-கை] திக்கற்ற தீனனை வா என்று அழைத்துத் திருவடி தீட்சை செய்து கொள்ளென என் மனத்தில் கிருபைக் கடலான தேவி எழுந்தருளி இருந்தும், விவேகம் இன்றி அறிவு சொருபத்தை அநேக விதமாக எண்ணவும், அப்படியே தோன்றும் காதாபரணம் உள்ளவள் எனல்.*

103 கதியி லாத நாயான கடைய னேனை வாகூடு -
கழலெ ளுவெ னுடுறு கருணை வாரி யோர்கோலம்,
மதியிலாமை யான்ஞான வடிவை வேறு கூறுக -
வகைசெய் தேறு மாறுக மலைவ தோடு காதாளே.

[இ-ள்] கதியிலாத நாயான — புகலிடம் ஒன்றுமின்றியவராய் நாய் போன்று அலைந்தவனும், நன்றியின்மையின் அதனினும் கடையனுன,

வாகூடு கழல் என என் ஊடு ஊறு — வந்து திருவடி தீட்சைசெய்துகொள் என்பதாக என் மனதிலிருந்து பொங்கி வரும் கிருபா சமுத்திரமானது,

ஓர் கோலம் — ஒருவடிவெடுத்து வந்திருந்தும்,

மதியிலாமையால் - புத்தி விவேகம் இல்லாமையால்,

ஞான வடிவை வேறு கூறு ஆக வகை செய்து — அறிவு சொரூபத்தை யனந்த ரூபங்களாக பேதங்கமாக்கி,

ஏறுமாறு ஆக மலைவ தோடு காதாள் — உயர்வு தாழ்வதாகமயங்கும் படியாய் உள்ள காதாபரணம் உடையவள்

4

*[அ-கை] உடம்பாகிய மானை யுற்ற குணங்கள் எல்லாம் ஒழுங்காகி, மனம் வேறு தன்மை யுற்று அகலாத சங்கற்பம் எல்லாம் அடியோ டகன்றும் ஆராயத்தக்க பிரம்மமும் ஆத்மாவும் அபேதமாய் ஆவரணமற்று, அறிவு சொருபமாய் இலங்கும்படி உபதேசிக்கும் வாக்கினை உடையவளாம் எனல்.*

104 மருவு மாக மான்மேவி வருகு ணுதி நேராக-
மனனின் மாறி மீளாத மனன மாதி வேரோடு,
வொருவ மாறி மேனுடு முணர்வு நானு நேராகி -
பொழிய ஞான மேயாக வொருசொ லோதும் வாயாளே.

[இ-ள்] மருவும் ஆகம் மான்மேவிவருகுணுதி நேர் ஆக — கர்மத்தாற் பொருந்திய தேகமாள மான் வந்து அதனுல் வந்த முக்குணத்தால்சீவேசுரசெகத்தாய்தோன்றி

மனனில் மாறி — நான் வேறு ஈசுரன் வேறு செகத் சத்யமென்னும் மன மாறுதலடைந்து,

மீளாத மனனம் ஆதி வேரோடு ஒருவ மாறி — நீங்காத சங்கற்ப விகற்பங்கள் எல்லாம் அடியோடு அகன்று ஒழியவும்,

மேல் நாடும் உணர்வும் நானும் நேர் ஆகிஒழிய — மேலானதும் ஆராய்ந்து அறியத் தக்கதும் ஆன தத் பததுவம் பத லட்சியமான அறிவு சொரூபமும் அறிவு ஆகாரமான விருத்தியும் ஒன்ருகி ஆவரணத்தோடு தானும் சவஞ்சுடுதடி போற் போகவும்,

ஞானமே ஆக - அறிவே எனது சொருபமாய் விளங்கும் படி,

ஒரு சொல் ஓதும் வாயாள் — தத் துவ மசி மகா வாக்கியத்தை நீ அது ஆகின்ருய் என்று உபதேசித்த திருவாக்கு உடையவள். 5

*[அ-கை] விபரீதமான உருவமும் பெயரும் விஸ்தாரமாய்க் கோடி கோடியாக விரிந்திருக்கும் விஸ்வருபத்தில் கிரீடங்கள் கோடி கோடியாம். திருவடிகள் கோடி கோடியாம். ஆதலால் மானே வாக்கிற்கு எட்டாத மாயா சொருபம் உடையவள் எனல்.*

105 **விகட நாம ரூபாதி விததி யோரொ ரோர்கோடி -**
**விரியு மாக மீதோடி விரிவொ ணுத மேலான,**
**மகுட நாடி லோர்கோடி மலரு தாள்க ளோர்கோடி -**
**மனனு நாவு மேவாத வடிவ தான மாயாளே. 6**

[இ-ள்] விகட நாம ரூபாதி விததி ஓர் ஓர் கோடி — வேறுபாடான நாம ரூப முதலிய விஸ்தாரமான பேத தோற்றங்கள் கோடி கோடியாக,

விரியும் ஆகம் மீது ஓடி விரிவு ஒணுத மேலான மகுடம் நாடில் — பரவியிருக்கும் விஸ்வருபத்தில் நெருக்கமாகவும் அளவு கூறமுடியாததும் உயர்ந்ததுமான கிரீடங்களை நோக்கும் போது,

ஓர் கோடி - கோடி கோடியாய் இருப்பதாம்.
மலரு தாள்கள் - விரிந்த திருவடித் தாமரைகள்,
ஓர் கோடி - கோடி கோடியாய் இருப்பதாம்,

மனனும் நாவும் மேவாத வடிவ தான மாயாள் — மனத்தாலும் வாக்காலும் சொல்லவும் நினைக்கவும் எட்டாத நிர்க்குண நிர்விசேட சொருபம் உடையவளும், வியவகாரத்தில் மாயை யோடு கூடியவளுமாம். 6

[அ-கை] அஞ்சாமல் தினமும் வினையில் அழுந்தி வாள் போன்ற கண்ணுற்றவனிதையர ராசையிற்சென்றுண்டாம் தீமையைச் சிந்தியாதவனையும் வெறுக்காமல்தேவர் முதலோராலும் காண முடியாதசொரூபத்தை என் மனத்தில் அருள் புரியும் விருப்பம் உள்ளவள் எனல்.

106 வெருவ ராம ஞடோறும் வினையின் மூழ்கி வாளாரும் -
விழியி ஞர்கள் பாலோடி விளைவ தோர்வு ருதேனை,
யருவ ராம ஞயேனு ளமர ரானு மாரானு -
மறியொ ஞத தோர்கோல மருளு காதல் கூர்வாளே.

[இ-ள்] வெரு வராமல் - பயம் உண்டாகாமல்,
நாள் தோறும் - ஒவ்வொரு தினமும்,
வினையின் மூழ்கி - தீவினையில் அழுந்தி,
வாள்ஆரும் விழியினர்கள்பால்ஓடி விளைவது - வாள் ஆயுதம் போன்ற கண்களுடைய ஸ்திரிகளிடத்தில் ஓடிஅநுபவித்து உண்டாவது, (ஆன தீமையை)
ஓர்வு உருதேனை - ஆராய்ந்து அறியாதவனை,
அருவராமல் நாயேன் உள் - வெறுக்காமல் நாயினுங் கடையனை வென்னுள்,
அமரரானும் ஆரானும் அறிய ஒஞத ஓர் கோலம் அருளு காதல் கூர்வாள் - தேவர்களாலும் வேறு எவராலும் அறிதற்கரிய ஒப்பற்ற சொருபத்தை திருவருள் செய்வதில் மிகுந்த விருப்பு உடையவளாம். 7

[அ-கை] பூமி நீரிலும், நீர் அனலிலும், அனல் வாயுவிலும், வாயு ஆகாயத்திலும், ஆகாயம் பரஞ்சோதியிலும் ஒடுங்கவும்; அழியாமலும், பழமையாயும் உள்ள சூனியத்தில் உள்ளவள் எனல்.

107 அவனி நீரி ஞன்மாள வனலின் மாள நீர்காலி -
னனலு மாள வாகாய மதனின் மாள வூடாடு,
பவனன் வான மேலான் பரம தேசி லேயான -
படியின் மாள மாளாத பழைய பாழில் வாழ்வாளே.

[இ-ள்]அவனி நீரிஞல் மாள-பூமியானது அப்புவில்கரையவும்,
நீர் அனலில் மாள - அப்பு அக்கினியிற் சுவரவும்,

அனல் காலில் மாள - அக்கினி வாயுவில் அணைந்து ஒடுங்கவும்,

| | |
|---|---|
| ஊடு ஆடு பவனன் ஆகாயம் அதனில் மாள | எங்கும் வீசும் காற்று ஆகாயத்தில் ஓய்ந்து ஒடுங்கவும், |
| வானம் மேலான பரம தேசிலே ஆன படியின் மாள | ஆகாயம் மேலான பரஞ்சோதியின் இடத்தில் உண்டான படி ஒடுங்கவும் |
| மாளாத பழைய பாழில் வாழ் வாள் | அழியாத பழைமையான சூனியத்தில் வாழ்பவளாம். 8 |

*[அ-கை] ஒரு மாறுதல் ஒரு போதும் மடையாமலும் ஒரு வஸ்து இருந்தால் குற்றமற்ற தேவிக்கு அன்னியமாய் ஆதாரம் காணப்பட்டாலும், காணப்படாத போதும், அவ்வஸ்துவின் வேறு ஆகாமல் அறிவு சொருபமாய் இருப்பவள் எனல்.*

108 ஒருவி கார மோர்காலு முறநி லாம லியாதானு -
முளது மாசி லாமேனி யொழிய வேறொ ராதார,
நிருபி யான வோர்போது நிருபி யாத வோர்போது -
நிகழ்வு றும லோர்போத நிலைய தாக நேர்வாளே.

| | |
|---|---|
| [இ-ள்] ஒரு விகாரம் ஓர் காலும் | ஒருவித மாறுபாடு ஒரு காலத்தும், |
| உற நிலாமல் | - அடையாமலும், |
| மாசிலா மேனி ஒழிய | - குற்றமற்ற சொருபமே அல்லாமல், |
| யாதாலும் உளது | - மற்றொன்று இருப்பது போல், |
| வேறு ஒரு ஆதாரம் | - வேறோர் ஆதாரமான பொருள், |
| நிருபியான ஓர் போதும் | - காணப்படுங் காலத்தும், |
| நிருபியாத ஓர் போதும் | - காணப்படாத காலத்தும், |
| நிகழ் உறுமல் | - அதற்கு வேறாய் விளங்காமல், |
| ஓர் போதம் நிலையது ஆக நேர்வாள் | அத்துவைத ஞான சொருபமாய் நிலை பெற்று இருப்பாள் என்பதாம். 9 |

*[அ-கை] சுபானுபவத்தால் அறிவதே அல்லாமல் ஒரு பிரமாணத்தால் அறிய முடியுமோ?! குரு உபதேசத்தால் சுவானு பூதியால் அல்லாமல் அடையப்பெறாத வஸ்துவாம் எனல்.*

109 அநுப வந்தனி னறிவ தன்றியோர் -
அளவை கொண்டறி வுறுவதோ,
தநுப வந்தனே யொழிய வின்றிய -
தகமை நின்றதோர் தனியையே.

[இ-ள்] அனுபவந் தனில் - சுவானு பூதியால்,
அறிவது அன்றி - அறிந்து அனுபவிப்பதே அல்லாமல்,
ஓர் அளவை கொண்டு அறிவு உறுவது } பிரத்தியட்சாதி எந்த பிராமணங்களுக்காவது விஷயமாகுமா !
ஓது அநுபவம் தனே ஒழிய இன்றிய தகமை நின்றது } உபதேசிக்கும் குருவினது சுபாநுபவத்தாலல்லாமல் அறிய முடியாத இயல்புடையதாய் இருக்கின்ற,
ஓர் தனியை - ஒப்பற்ற வேக நாயகியாம். *10*

*[அ-கை] உருவம் என்றோ, அருவம் என்றோ முடிவுசொல்ல முடியாத அவ் வருவமே அருட் குரு வடிவமாய் இது என்று அறியும் படியாய் வந்திருப்பதாம் எனல்.*

110 உருவ மென்பது மருவ மென்பது -
முணர்வு கொண்டுணர வொண்ணுமோ,
வருவ மிங்கொரு வடிவு கொண்டது -
விதுவெ னும்பொரு டன்னேயே,

[இ-ள்] உருவம் என்பதும் - வடிவம் என்று சொல்வதும்,
அருவம் என்பதும் - வடிவம் அன்று எனக் கூறுவதும்,
உணர்வு கொண்டு உணர ஒண்ணுமோ } நமது புத்தியைக் கொண்டு அறிய முடியுமோ,
அவரும் இங்கு - வடிவமற்ற வஸ்து இவ்வுலகத்தில்,
இது வெனும் பொருள் தன்னே ஒரு வடிவு கொண்டது } இஃது என்று அறியும் வஸ்துவான ஒப்பற்ற குரு மூர்த்தமாய் எழுந்தருளியது. *11*

*[அ-கை] பரஸ்பர விரோதத்தைக் கூறும் சமய சாஸ்திரங்களால் கூற முடியாமல் காணும் நாம ரூப உலகத்தில் அந்தந்த வடிவமாய் இருந்தும், அவை அழியும்*

*போது தான் அழியாமல் நிலை பெற்ற உணர்வே தேவி எனல்.*

**111** பொருது திரிபல சமய மதிவழி-புரிவு தருகலை புகல்வதோ,
கருது பொருடொரு மருவி யவையவை-கழல நிலவிய கண்ணையே

| | |
|---|---|
| [இ-ள்] பொருது திரி பல சமய மதிவழி | பரஸ்பரம்கலகம்விளைவித்துத்திரியும் பல மதங்களின் அறிவு உண்டான வகையில், |
| புரிவு தருகலை புகல் வதோ | ஆசையளிக்கு சாஸ்திரங்களால் கூற முடியுமோ. |
| கருதுபொருள்தொரும் | நினைக்கின்றஒவ்வொருவஸ்துவிலும் |
| மருவி அவை அவை கழல நிலவிய கண்ணையே. | பொருந்தி இருந்தும் அவ்வவ் வஸ்துக்கள் நீங்கும் போது நிலை பெற்று இருப்பது அறிவாகிய தேவியினது சொருபமே. 12 |

*[அ-கை] தங்களுடைய புத்தி வலியால் தர்க்கவாதிகள் வாக்கு வன்மையைத் தெரிவிப்பது உண்மையாகுமா? உளமயல் ஒழித்து உள்ளதை உள்ளபடி அறியும் அவர் பார்க்கத் தக்கது ஞான சொருபத்தை எனல்.*

112 தத்த மதிகொடு தர்க்க சமயிகள் -
சத்த மறிவதொர் தத்வமோ,
சித்த மயலது கெட்ட வவர்தெரி -
சிக்க வுரியதொர் சித்தையே.

| | |
|---|---|
| [இ-ள்] தத்தம் மதி கொடு | தங்கள் தங்களது அறிவைக் கொண்டு, |
| தர்க்க சமயிகள் | வைசேடிய நையாயிகர்கள், |
| சத்தம் அறிவது | வாக்கு வாதம் இட்டுக் கொள்வது, |
| ஒரு தத்வமோ | ஓர் உண்மையான பொருளாகுமா, |
| சித்த மயல் கெட்டவர் | தேகம் தான் என்றும், ஈசுரன்வேறென்றும், உலக மெய் என்றுள்ள மயக்கம் அழிந்த ஞானிகளே, |

| | |
|---|---|
| தெரிசிக்க உரியது ஓர் சித்தையே | சுவானுபவ சாக்ஷாத் காரமாய் அறியத்தக்கது ஒப்பற்ற ஞான சொருப தேவியையாம் 13 |

*[அ-கை] அசங்க பரமாத்மாவிற்கு வடிவில்லை எனலாமோ!? உண்மையில் உதிக்காமல் வந்தாட்கொண்ட திருக்கோலம் பார்த்திருந்தும் எனல்.*

113 மருவு ருத தற்கு ரைக்கும் - வடிவு மில்லை யென்னவோ,
கருவு ருமலாள வந்த - கருணை மேனி கண்டுமே.

| | |
|---|---|
| [இ-ள்] கருவுறுமல் | - தாய் வயிற்றிற் பிறக்காமல், |
| ஆள வந்த கருணை யேனி கண்டும் | ஆட்கொள்ளும் பொருட்டு மாயையால் உண்டான கிருபையே வடிவமாய் எழுந்தருளியசற்குருநாதரைத் தெரிசித்தும், |
| மருவு உருத அதற்கு உரைக்கும் வடிவு இல்லை என்னவோ | யாதொரு சம்பந்தமும் இல்லாத அத்தேவிக்கு சொல்லும் உருவம் இன்றியது எனக் கூறலாமோ. 14 |

*[அ-கை] அநாதியாயும் பரிசுத்தமாயும் உள்ள திருவடிகளுக்கு அளவில்லை எனலாமோ! என்னுச்சியில் அமர்ந்திருக்க எனல்.*

114 தொல்லை யாகி நின்ற துய்ய - துணைம லர்ப்ப தங்களுக்,
கெல்லை யான தில்லை யோவென் - னுச்சி மீதி ருக்கவே.

| | |
|---|---|
| [இ-ள்] தொல்லை ஆகி நின்ற துய்ய துணை மலர்ப் பதங்களுக்கு | பழைமையாய் இருக்கின்றதும் பரிசுத்மானதுமான இரண்டு திருவடித் தாமரைகளுக்கு, |
| எல்லை ஆனது இல்லையோ என் உச்சி மிது இருக்கவே | அளவில்லை என்று சொல்ல லாமோ எனது சிறத்திற் சூட்டப் பெற்றிருக்கும் போது என்பதாம். 15 |

*[அ-கை] எல்லாவற்றிற்கும் மேலாயிலங்குந் திரு முடிகள் விசாலமானது, என் மனத்துள் அமைந்திருக்க அளவிலை எனலாமோ எனல்.*

115 விளம்பு மெப்பொருட்கு மேல்மி குத்த நீண்மு டிப்பரப்,
புளம்பு குந்தி ருக்க வெல்லை யுன்ன வில்லை யென்னவோ.

[இ-ள்] விளம்பும் எப்பொருட்கும் மேல்மிகுத்த நீள் முடிப்பரப்பு } நாநாவாகக் கூறு நின்ற மாயை மாயா காரியங்களான சர்வத்திற்கும் மேலாய் அதிகரித்து உயர்ந்திருக்கின்ற திருமுடிகளின் விசாலமானது

உளம் புகுந்து இருக்க - எனது மனத்திற் குடி புகுந்திருக்கவும்

எல்லை உன்ன இல்லை என்னவோ } அதனளவு நினைப்பதற்கு இல்லை எனக் கூறலாமோ? (கூடாது) 16

[அ-கை] ஆகாயம் முதல் அனைத்தையும் படைத்த தேவி அணியும் ஆடை இல்லை எனலாமோ? என் மனத்துள் இருக்கவும் எனல்.

115 அடைய மாதி ரப்ப டைத்து - வப்பு ரம்பு டுப்பதோர்,
றுடையு மில்லை யென்ன வோவென் - னுள்ள டங்க லுற்றுமே

[இ-ள்] மாதிரம் அடைய படைத்த } ஆகாயம் முதல் சர்வத்தையும் சிருஷ்டித்தவளான

அப் புரம்பு - அந்தப் பரதேவதைக்கு,

உடுப்பது ஓர் உடையும் இல்லை என்னவோ } அணிந்து கொள்ளும் படியான வஸ்திரமும் இல்லை எனக் கூறலாமோ,

என்னுள் அடங்கல் உற்றும் } எனது மனத்தினுள் அடங்கப் பெற்றிருந்தும் என்பதாம். 17

[அ-கை] தாயாகி தந்தையாகி அஞ்சாதே அஞ்சாதே என வந்தருளி யாட் கொண்ட திருக்கோலமான கல்யாண குணங்களை எப்படிபட்டதுளனக்கூறலாம்எனல்.

117 அன்னை யாகி யத்த னாகி - யஞ்ச லஞ்ச லென்றுவந்
தென்னை யாளு கோல நீர்மை - யென்ன தாகி யாப்பவே.

[இ-ள்] அன்னை ஆகி அத்தன் ஆகி - தாயும் தந்தையும் ஆகி,

அஞ்சல் அஞ்சல் என்று வந்து } பயப் படேல் பயப் படேல் என்று அருகுற்று

| | |
|---|---|
| என்னை ஆளு கோலநீர்மை என்னதா இயம்பவே | என்னையும் பொருளாய் ஆட்கொண்ட திருக்கோலமான கல்யாண குணத்தை யான் எத்தகையது என மகிழட்டும், 18 |

*[அ-கை] தேவி அமரும் இடம் அனந்தனோ வேதங்களின் உச்சியோ சம்மார சூனிய மயானமோ அடியார்கள் மனமோ எனல்.*

**118** மாசுணமோ மறைத்தலையோ மயானமோ வாக்கிறந்த,
தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ திருந்தமளி.

| | |
|---|---|
| [இ-ள்] திருந்து அமளி | - திருத்தமாகி சயனிக்கும் இடம், |
| மாசுணமோ | - திருபாற்கடலில் ஆதி சேடனோ, |
| மறைத்தலையோ | - வேத வேதாந்தங்களின் உச்சியோ, |
| மயானமோ | - சர்வ சம்மாரமான மயான சூனியமோ, |
| வாக்கிறந்த தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ | மனோவாக்கிற்கு எட்டாதபரஞ்சோதியை தானு அறிந்திருக்கின்ற தத்துவ ஞானிகளுடைய மனம் தானோ (என்ப) 19 |

*[அ-கை] பூமாலை சாத்துவதிலும் தத்துவ ஞானிகளாகிய மெய்யன்பர்கள் பாடும் பாமாலைகளில் என்றும் தேவிக்கு விருப்பமாம் எனல்.*

**119** சாத்தும்பூ மாலையினுந் தமையுணர்ந்த மெய்யடியார்,
எத்தும்பா மாலையிலே யெப்போதுந் திருவுளமே.

| | |
|---|---|
| [இ-ள்] சாத்தும் பூ மாலையினும் | அணிவிக்கின்ற புட்பமாலையினும் இறைவிக்கு, |
| தமை உணர்ந்த மெய்யடியார் | தன்னை பிரம்மமாயறிந்த தத்வ ஞானிகளால், |
| ஏத்தும் பாமாலையிலே | - போற்றுகின்ற திருப்பாசுங்களிலே, |
| எப்போதும் திருவுளம் | என்றும் மிகப் பிரியமாகத் திருவுளம் பற்றும், 20 |

*[அ-கை] நகம் சிகை பரியந்தம் விரும்பி அணியும் ஆப ரணங்கள், திருவருளாம். காண்பான் காட்சி காணப்ப டும் பொருளான திரிபுடியே விரும்பி உண்ணும் உன வாகும் எனல்.*

**120** பாதாதி கேசாந்த முவந்தணியும் பணியருளே,
ஞாதாதி யாமூன்று முவந்தயிலு நல்லமுதே

| | |
|---|---|
| [இ-ள்] பாத ஆதிகேச அந்தம் | அடி முதல் முடி வரை எல்லா அங்கங்களிலும், |
| உவந்து அணியும் பணி அருளே | சந்தோஷமாய் அணிந்து கொள்ளும் ஆபரணமாவது திருவருளே யாம், |
| ஞாதாதி ஆம் மூன்றும் | ஞாதாஞானம் ஞேயம் என்னும் திரிபுடியை |
| உவந்து அயிலும் நல்ல அமுது | விரும்பி புசிக்கத்தக்க நல்ல உண வாய் இருப்பதாம். **21** |

*[அ-கை] அவள் வசனிப்பது வேதமே. மறவாமல் அவளை நினைக்கும் நினைவே அவள் வடிவமாம். பரிசுத்தமே அவள் வாசலுக்குக் காவலாகும், ஞானமே அவள் திருமேனி யின் சுபாவமான காவலாம் எனல்.*

121 **வேத மவடிரு வாயி லோது கீதம் -**
**வேறு நினைவிலர் காணு மேனி மேனி,**
**பூத மவடிரு வாசல் காவ லாகும் -**
**போத மவடிரு மேனி காவ ருனே.**

| | |
|---|---|
| [இ-ள்] வேதம் அவள் திரு வாயில் ஓது கீதம் | வேதமானது அவளுடைய அழகிய வாக்கால் பாடுகின்ற பாடலாகும், |
| வேறு நினைவு இலர் காணும் மேனி மேனி | வேறெண்ண மற்றவர்கள் கண்டறி யும் வடிவமே யவளது வடிவமாம், |
| பூதம்அவள் திருவாசல் காவல் ஆகும், | தூய்மையே தேவியின் உடைய அழ கிய வாசலுக்கு காவலாகும், |
| போதம் அவள் திரு மேனி தானே காவல் | ஞானமே தேவியினுடைய அழகிய சொருபத்தில் சுபாவமான பாது காப்பாகும். **22** |

*[அ-கை] கருணையாதிகளே யோகமாதர்களாம், ஞானயோகமேயோகபூமியாம், பிரம்மாவிஞலும் அறிதற்கரியதே கோயிலாம், பேசற்கரிய பேரானந்தத்தைப் பேச வல்லார் யார் எனல்.*

122 **யோகி நிகள்கரு ணுதி யான மாதர் -**
**யோக மருநில மாசின் ஞான யோகம்,**
**கோக னகனறி யாத கோயில் கோயில் -**
**கூறரியபெரு வாழ்வை யாவர் கூற.**

| | |
|---|---|
| [இ-ள்] யோகினிகள் கருணுதி ஆன மாதர் | யோக மாதர்கள் கருணை முதிதை உபேட்சை மைத்திரி யாய சற்குணங்களாம், |
| யோகு அமரும் நிலம் மாசுஇல்ஞானயோகம் | யோகத்தில்நிலைபெறும்பூமியானது குற்றமற்ற ஞான யோகம் எனப்படும், |
| கோகனகன் அறியாத கோயில் கோயில் | பிரம்ம தேவனுலும் காணப்படாத ஆலயமே ஆலயமாம், |
| கூற அரிய பெரு வாழ்வை யாவர் கூற | சொல்லுதற்கு அரிய பேரானந்த வாழ்வை எவர் கூற முடியும். 23 |

*[அ-கை] மான் ரிடபம் கருடன் அன்னம் வாகனம் எனலாமோ?! அந்தந்த வாகனங்களில் வந்து அருளிய ஞானமாகிய யானையே வாகனமாம் எனல்.*

123 **கலையே றுவணங் களியன் னமெனக் -**
**கற்பித் திடவோ சொற்பித் ததுவா,**
**மலையே றுவணங் கிளியன் புறவங் -**
**தருள்போ தகமே யவள்வா கனமே.**

| | |
|---|---|
| [இ-ள்] கலை ஏறு உவணம் களி அன்னம் என | மான் ரிடபம் கருடன் களியுற்ற அன்னம் வாகனம் என்று |
| கற்பித்திடவோ | - கற்பிக்கலாமோ, |
| சொற்பித்ததுவாம் | - அது மயக்கத்தால் உரைத்ததாம், |
| மலை ஏறு உவணம் கிளி அன்பு உற | மலை போன்ற ரிடபத்திலும், கருடன் மேலும், கிளியிலும் கிருபையினுல், |

வந்து அருள் போதக மே அவள் வாகனம் } எழுந்தருளி உபதேசித்தசிவப்பிரம்ம ஐக்கிய ஞானமே அத்தேவினுடைய வாகனமாகும் என்பதாம். 24

*[அ-கை] மும்மூர்த்திகளது ஆயுதங்களை ஆயுதம்என்று சொல்லாமல், சத்துருவாகிய பிறவித் துன்பத்தைக் கண்டு பயப்படாமல் வந்து பிரகாசிக்கும் பூததயையே அவளது அழகிய படையாகும் எனல்.*

124 பஞ்சா யுதமே திரிசூ லமழுப் -
படையே யெனவோ பகைவெம் பிறவிக்,
கஞ்சா முனெழுந் தருளா வெறியு -
மன்பே திருவா யுதமா வதுவே.

[இ-ள்] பஞ்சாயுதம் - சங்கு சக்கரம் கதை வில் வால்,

திரிசூலம் மழுப் படை எனவோ } முத்தலை வேலாயுதம் பரசாயுதம் என்று சொல்லக் கூடுமா,

பகை வெம் பிறவிக்கு அஞ்ச முன் எழுந்து } சத்துருவாகிய கொடிய பிறவித் துன்பத்திற்கு பயமுறுமல் எதிரே வந்திருந்து,

அருளா எறியும் - கிருபையினுற் பிரகாசிக்கின்ற,

அன்பே திரு ஆயுதம் ஆவது } தயையே அழகிய அவள் ஆயுதமாய் இருப்பது என்பதாம். 25

# 11. உட்பரிவாரம்.

*[அ-கை] சற்குருவை சரணடையும் அதிகாரிகளைக் கூறல்.*

125 அரணே யறிவே செறிவே யழகே -
யருளே வடிவா கவமைந் துவருஞ்,
சரணே யெனவந் தடையும் மடியார் -
தங்கோ லமெலா மிங்கோ துதுமே.

அரணே அறிவே செறிவே அழகே சரண் என வந்து அடையும் — இரட்சிப்பவரே ஞான வடிவே நிறைவே மைத்திரி முதலிய சற்குண சொரூபரே தேவரீருடைய சரணாரவிந்தங்களில் அடைக்கலம் என்று வந்து சரணம் அடையும்,

அடியார் தம் கோலம் எலாம் இங்கு ஓதுதும் — அடியார்களுடைய திருக்கோலம் யாவற்றையும் இங்குஎடுத்துக்கூறுவாம் 1

*[அ-கை] சரீரத்திற்கும் ஆத்மாவிற்கும் உள்ள சம்பந்தம், அகன்றுபிரிவற்றபிரம்மாத்மவின் அபேதஞானம் உற்றவர்களே தேவியின் பரிவாரங்களாம் எனல்.*

**126 புரம யோகமுற பேதமறு போத முடனே,**
**பரம யோகமுறு வாரிறைவி பயிர வர்களே.**

[இ-ள்] புரம் அயோகம் உற — மெய் ஞானத்தினுல் தேகத்திற்கும் ஆத்மாவிற்கும் உள்ள அகங்காரக் கிரந்தி யகல

பேதம் அறுபோதம் உடனே - பேதமற்றதத்துவஞானத்தினுல்

பரமயோகம் உறுவார் இறவி பயிரவர்களே — சீவப் பிரம்ம ஐக்கிய ஞானம் அடைபவரே தேவியின் உடைய பரிவாரங்களாம். 2

*[அ-கை] நிஷ்காம புண்ணியத்தால் உண்டாம் மைத்திரி முதலிய சற்குணங்களும், அதனுல் வரும் சீவன் முத்திச் சுகம் அநுபவிக்கும் தவத்தவர்களே யோகினிகளாம் எனல்.*

**127 புணரு மைத்ரிமுத லானபொரு ளுள்ளபரிசே,**
**யுணரு மார்க்கம்வரு மாதவர்கள் யோகினிகளே.**

[இ-ள்] புணரும் மைத்திரி முதல் ஆன — பொருந்திய மைத்ரி கருணை முதிதை உபேட்சை யாகிய சற்குணங்களும்,

பொருள் உள்ள பரிசே — வஸ்துவின் எதார்த்த சொருபத்தை உள்ளது உள்ள பிரகாரமே,

உணரும் மார்க்கம் - அறியத்தக்க மோட்ச வழியில்,

| | |
|---|---|
| வரும் மாதவர்கள் யோகினிகள் | வருகின்ற தவத்தவர்களே காளிகா தேவியின் உட் பரிவாரங்களாம். 3 |

*[அ-கை] சுழுத்தி முதலிய காலங்களைக் கடந்தவர் ஆவர். தியானஞ் செய்தல் இன்றி தனது சுபாவமே இயல்பாயினர் மதச் சின்னங்கள் அற்றவர். அறிவே தனது சொருபமாய் இருப்பவர். மோக்ஷ சொருபராய் பிறப்பற்றவர் எனல்,*

**128 நித்திரை சாகரத மற்றதொரு நீர்மை யினரே -**
**நிட்டை யாதுமில தானதொரு நீதி யினரே,**
**முத்திரை ஞானமெனு முத்திரையல தேது மிலரே -**
**முத்தி நாயகர்க ளானபவ மோச கர்களே.**

| | |
|---|---|
| [இ-ள்] நித்திரை சாகரதம் அற்றது ஒரு நீர்மை யினரே | சுழுத்தி சொப்பனம் சாக்கிரம் இன்றிய ஒரு தன்மையான துரியத்து இருப்பவர்களாம். |
| நிட்டை யாதும் இலது ஆனது ஒரு நீதியினரே | ஆறு ஆதாரங்களில் நிறுத்தலாகிய பாவனுமய தியானம் ஒன்றும் இன்றி தனது எதார்த்த சொருபம் எப்படியோ அப்படி யிருக்கும் முறைமை யினர், |
| முத்திரை பலது ஏதும் இலர் | அடையாளங்கள் பற்பலவாய் எதுவும் இன்றியவர்கள், |
| ஞானம் எனும் முத்திரை | அகம் பிரம்மாஸ்மி என்னும் ஞானமே அடையாளமாய் உள்ளவர், |
| முத்திநாயகர்கள் ஆன பவ மோசகர்கள் | மோட்சத்தில் முதன்மை யராயும் பிறப் பொழிப்பவராயும் உள்ளவர்களாம் (உட்பரிவாரம்) 4 |

*[அ-கை] பந்த மோட்சங்களைக் கடந்தவர்களாகி குருநாதன் திருவடிகளில் பிரேமை உள்ளவர்கள் பத்தியால் ஞானம் அடைய விரும்பும் தவம் உடையோர்கள், பத்தர்கள் துன்புற்றால் கருணை செய்கின்ற உட் பரிவாரங்கள் எனல்.*

129 பெத்த முத்தியில தானதொரு சாதகர்களே -
பித்து நற்கழலொ டானதொரு பாவகர்களே,
பத்தி சித்தியென் னாடிவரு தாபதர்களே -
பத்த ரெய்ப்பிலருள் கோலமிகு பைரவர்களே.

| | |
|---|---|
| [இ-ள்] பெத்த முத்தி இலது ஆன ஒரு சாதகர்களே | பந்த மோட்ச மற்ற பராபர வஸ்துவே தனது சொருபமாய் உள்ள ஒப்பற்ற சாதனை செய்கின்றவர்கள், |
| நல் கழலொடு பித்து ஆனது ஒரு பாவகர்களே | ஆனந்தமய சற்குருநாதன் திருவடித் தாமரைகளில் பிரேமையாய் ஒப்பற்ற பாவனை உள்ளவர்களாம், |
| பத்தி சித்தி என நாடி வரு தாபதர்களே | குரு பத்தியினால் ஞானசித்தி அடைய வேண்டும் என்று விரும்பி வரும் தபோதனர்கள், |
| பத்தர் எய்ப்பில் அருள் கோலமிகுபைரவர்கள் | அடியார்கள் துன்புறும் போது கிருபை மிகுந்தவர்களாய் இருக்கின்ற உட் பரிவாரங்களாம். 5 |

[அ-கை] வாக்கும் மனமுஞ் செல்லாத பரவஸ்துவைத் தானாய் அறிந்திருப்பவர், உண்டியை அழகிய கையில் ஏற்று உண்டு உகப்பர், அலையற்று அளவற்றுள பரமானந்த சமுத்திரத்தில் மூழ்கி இருப்பதான மனம் உடையோர்கள், உட்பரிவாரங்கள் எனல்.

130 உரையிறந் துணர்விறந் திடமுணர்ந் திடுவரே -
யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே,
திரையிறந் தளவிறந் துளபரங் கடலுளே -
செறிதரும் படிவருந் திருவகம் படியரே.

| | |
|---|---|
| [இ-ள்] உரை இறந்து, உணர்வு இறந்து, இடம் உணர்ந்திடுவர் | வாக்கை மவுனஞ் செய்து, மனத்தை சங்கற்பமறச் செய்து, மனோ வாக்கிற்கு எட்டாது இடமான வஸ்துவை அறிவர், |

திரை இறந்து - சங்கற்பவிகற்பமான அலைகள் அற்றதும்,

| | |
|---|---|
| அளவு இறந்து உள பரம் கடல் உளே செறி தரும் படி வரும் | எல்லையற்று இருப்பதுமான பரமானந்த சமுத்திரத்துள்ளே முழுகி இருக்கும் படியான. |

திரு அகம் படியரே - அழகிய சித்தமுடைய பரிவாரங்களாம். 6

*[அ-கை] அழுது கொண்டே இருப்போர்களுக்கு அருள் செய்பவர், உடம்பு எல்லாங் கண்களாய்க் காண்பவர், உதித்து ஒடுங்காத சூரியனுக்கு ஒத்த உருவம் உள்ளவர், விருப்பு வெறுப்பு அற்ற வுட் பரிவாரம் எனல்.*

**131** அழுதன்மா றுதலிலா விழியர்பா லருள்வரே -
யவர்களா கமுமெலாம் விழியதா மொழிவரே.
யெழுதன்மா றுதலிலா விரவியா முருவரே -
யிகலுமார் வமுமிலா திலகுபை ரவர்களே.

| | |
|---|---|
| அழுதல்மாறுதல் இலா விழியர் பால் அருள் வரே | அழுதல்மாறுமல் ஆனந்தக் கண்ணீர் சொரியும் அன்பர்களுக்கு அருள் செய்பவராம், |
| அவர்கள் ஆகமும் எலாம் விழியதாம் மொழிவரே | அவ்வடியார்களுடைய தேகம் எல்லாம் கண்கள் உடையதாக எண்ணிப் போற்றுவார்கள், |
| எழுதல் மாறுதல் இலா இரவி ஆம் உருவரே | உதயாஸ்தமானம் இல்லாத நித்திய சூரியனைப் போன்று விளங்குஞ் சொருபம் உடையவராம், |
| இகலும் ஆர்வமும் இலாது இலகு பைரவர்களே | துவேஷமும் இராகமும் இன்றி விளங்குகின்ற உட் பரிவாரங்களாம். 7 |

*[அ-கை] பூத பௌதிகங்கள் அணுவாய்க்காணும் பேருருவர் அணுவையும் மகா மேருவாய் மதிக்கும் மதி வல்லார் எவ்வுலகத்திற்கும் ஏகராய்ச் செல்லத் தக்கவர்கள், செல்வப் பிரகாசம் உள்ள தேவின் உட் பரிவாரங்களாம்.*

132 அவனிவா னடையவோ ரணுவதா நெடியரே -
யணுவுமே ருகிரியா யறவுநே ரியர்களே,
புவனிவா னடையவோர் பவனிபோ துவர்களே -
புகலுகோ மளவியா மஹாபுரா தனர்களே.

| | |
|---|---|
| அவனி வான் அடைய ஓர் அணுவதாம் நெடியர் | பூமி ஆகாயம் முதலிய யாவற்றையும் ஓர் அணுமாத்திரமாகக் கருதும்படி பெரிதுக்குஎல்லாம் பெரிதாவார்கள் |
| அணுவு மேரு கிரியாய் அறவும் நேரியர்கள் | அணுவையும் மகா மேருவாக மதிக்குங் குணம் உடையவராவர்கள், |
| புவனி வான் அடைய ஓர் பவனி போதுவர்களே | (செக்கு மாடு போல் ஓரிடத்திலே சுற்றுமல்) பூமி ஆகாயம் மற்று எல்லாவற்றிலும் ஏகராய் உலாவுவர்கள், |
| புகலு கோமள வியமலை புராதனர்களே | கூறும் இளமைச் செல்வியாம் சுயம் பிரகாசமான தேவியின் உடைய பழவடியார்கள். 9 |

*[அ கை] ஒரு கால்பிரவிருத்தியைவிட்டுநிவிருத்தியராய் இருப்பர், மிகுந்தஅன்பால் ஆனந்தக்கண்ணீர் சொரிவர். ஆடையின்றி கௌபீனரராய் இருப்பவர், கவலையற்று கை பிச்சை ஏற்று உண்பர் அடியரர் எனல்.*

133 அலைபொரு மலொருகா றலையெடா தமைவரே -
யருள்பொரு மலுருகா வருவிபாய் நயனரே,
கலைபொரு மலொருகோ வணராய் விடுவரே -
கவலைதீர் பலிகொணீள் கரகபா லிகர்களே.

| | |
|---|---|
| [இ-ள்] அலைபொருமல் ஒரு கால் தலை எடாது அடைவர் | அலைதலைச் சகிக்காமல் ஒரு சமயம் பிரவிருத்திக்காமல் அடக்கமாய் இருப்பர், |
| அருள் பொருமல் உருகா அருவிபாய்நயனரே | கருணைப் பெருக்கத்தால் மனமுருகி மலையருவி போல் நீர் சொரியும் கண்கள் உடையவர் ஆவர், |
| கலைபொருமல்ஒருகோவணர் ஆய் விடுவர் | வஸ்த்திரம் தரிக்காமல்ஓர் கௌபீன மாத்திரம்உடையவர்கள்ஆவார்கள் |

| | |
|---|---|
| கவலே தீர்பலி கொள் நீள் கரக பாலி கர்கள் | துன்பமற்ற பிச்சை ஏற்கின்றதான நீண்ட திருக்கரத்தை உடைய இறைவியின் அடியார்களாம். 9 |

*[அ-கை] சர்வ லோகங்களேயும் புசியாமற் புசிக்கும் வாய் உடையவர்கள், வலியிழந்து மயக்கம் உண்டாகும் படியான வடிவு உடையவர்கள், லோகங்கள் இருப்பையும் இல்லாததையும் அறியும் கண்கள் உடையர், கூறற்கு அரியதாள்கள் உடையர் எனல்.*

134 **சகலலோ கமுமெடா வயிலுவா யுடையரே -**
**சதிரெலா மழியமா றருவதா ளுடையரே,**
**புகலுலோ கமுமலோ கமுமெலாம் விழியரே -**
**புகலுமா றரியதாள் புணருபை ரவர்களே.**

| | |
|---|---|
| [இ-ள்] சகலலோகமும் எடா அயிலும் வாய் உடையர் | எல்லா உலகங்களேயும் எடுக்காமல் புசிக்குந் திருவாய் உடையவர்கள், |
| சதிர்எலாம்அடியமால் தருவது ஆள் உடையர் | திறம் எலாம் அழிந்து மயங்கும் படியான திருவுருவம் உடையவர்கள், |
| புகலு லோகமும் அலோகமும் எலாம் விழியர் | கூறு நின்ற பிரம்மாதி லோகங்களே யும், அல்லாத சூனியத்தையும் மற்ற எல்லாவற்றையும் அறியும் கண்கள் உடையவர்கள், |
| புகலும்ஆறு அரியதாள் புணரு பைரவர்கள் | சொல்லற்கரிய திருவடிகளே உடையவர்களாய் இருக்கின்ற தேவி பரிவாரங்கள். 10 |

*[அ-கை] மனம் உருகும் வாசகம் உள்ளவர், உயிரையும் கவரும் பார்வை உடையவர்கள், பேரானந்தம் உண்டு ஆடுவார்கள், பேசற்கரியதேவியின் அடியார்கள் எனல்.*

135 **உருகுவா சகமெலா முடையசா கினிகளே -**
**யுயிரெலாம் விழியினு லயில்வர்யோ கினிகளே,**
**பருகியா ரமிர்தையா டுவர்கண் மோகினிகளே -**
**பகருமா றரியநா யகிபதா கினிகளே.**

| | |
|---|---|
| [இ-ள்] எலாம் உருகு வாசகம் உடைய சாகினிகள் | உடம்பு எலாம் உருகுகின்ற திரு வார்த்தையை உடையவரான வுட் பரிவாரங்கள், |
| விழியினுல்உயிர்எலாம் அயில்வர் யோகினிகள் | கண்ணுல்பார்த்தமாத்திரத்தில்ஆவி முதலானவற்றையும் உண்ணத்தக்க வர்களான தேவியின் பரிவாரங்கள், |
| ஆர் அமுதைபருகிஆடு வார்கள் மோகினிகள் | கிடைத்தற்கரிய மோட்சாமிர்தம் உண்டுஆடிமோகித்துஇருப்பவர்கள் |
| பகரும் ஆறு அரிய நாயகி பதாகினிகள் | கூறற்கரிய தேவியினுடைய உட் பரிவாரங்களாம். 11 |

*[அ-கை] உற்ருர் வேற்ருேர் என்பதிலர் மதப்பற்றவர், உலகநடை யற்றவர், தன்னை மறக்காதவர்கள், இடம் பற்றி வாழாதவர், நல்வினைத் தீவினைகளைக் கடந்தவர் அறிவுஅறியாமைகளைக்கடந்தவர்தேவியினடியார்கள்*

136 தமர்பிற ரற்ருர் சமயமு மற்ருர் -
சகவியல் பற்ருர் தமையொழி பற்ருர்,
அமர்விட மற்ருர் அறமற மற்ரு -
ரறிவயர் வற்ரு ரவளடி யாரே.

| | |
|---|---|
| [இ-ள்] தமர் பிறர் அற்ருர் | உறவோர் அயலார் என்பது இன்றியவர் |
| சமயமும் அற்ருர் | மதாபிமானம் அற்றவர்கள், |
| சக இயல்பு அற்ருர் | உலக சுபாவத்தினின்றும் விலகியவர்கள் |
| தமை ஒழிபு அற்ருர் | சர்வ சாட்சியான தன்னை என்றும் மறவாதார்கள், |
| அமர்வு இடம் அற்ருர் | ஓரிடத்தில் திறமாய் வாசம் செய் யாதவர், |
| அறம் மறம் அற்ருர் | பாவ புண்ணியங்களைக் கடந்தவர்கள், |
| அறிவு அயர்வு அற்ருர் அவள் அடியார் | ஞான அஞ்ஞானங்களைக் கடந்திருப் பவர்கள் தேவியின் அடியவர்கள். 12 |

*[அ-கை] மயக்க மார்க்கத்திற் செல்லாதார், இம்மை மறுமைகளை நினையாதவர், உண்மை விளங்கும்படி ஒழு*

குபவர், உலகவிவகாரத்தைக்கடந்தவர் கருணைவழியிற் செல்பவர் நிலைபேறு உடையவர் சொருபஞானம் உடையவர் தேவியின் அடியவர் எனல்.

137 இருணெறி விட்டா ரிருமையும் விட்டார் -
இலகந டப்பா ருலகுக டப்பார்,
அருணெறி நிற்பா ரமரவி ருப்பா -
ரறிவுரு வுற்ரு ரவளடி யாரே.

[இ-ள்] அருள் நெறி விட்டார் } தீவினையால் அடைவுறும் நரகத்திற் கேதுவான செயலைவிட்டவர் ஆவர்,

இருமையும் விட்டார் } இந்த சென்மத்தைப் பற்றியோ இனி மேல்வரும்சென்மத்தைப் பற்றியோ நினையாதவர்கள்,

இலக நடப்பார் } இவரது செயல் மற்றவருக்கும் விளங்கும் படி செய்வர்,

உலகு கடப்பார் - உலகத்தில் இருந்தும் இலாதவர்கள்,

அருள் நெறி நிற்பர் - கிருபை முதலிய சற்குணத்தில் நிலைப்பர்

அமர இருப்பார் - இளைப்பற்று இருப்பர்,

அவள் அடியார் - தேவியினது உட் பரிவாரங்கள். 13

[அ-கை] புகழுந் திறத்தால் வஸ்துவை விரித்து உரைப்பர், உடல் புளகிதமுடையோர், பரவசத்தால் பூமியற் புரளுவோர், திருவருளின் செயலை ஆச்சரியத்தோடு அறியக் கூறுவர். அதிசயம் உற்ற வடியரர் எனல்.

138 பொருளைவி ரிப்பார் புகழுதி றத்தார் -
புளகித முற்ருர் புரளுத லுற்ருர்,
அருளைவி யப்பா லறியவு ரைப்பா -
ரதிசய மிக்கா ரவளடி யாரே.

[இ-ள்] புகழுந் திரத்தார் பொருளை விரிப்பர் } சகல சாஸ்திர பண்டிதத் தன்மையால் அர்த்தங்களை விரிவாய் எடுத்துக் கூறுவர்,

புளகிதம் உற்ருர் புரளுதல் உற்ருர் } மயிர் சிலிர்த்து தேக புள காங்கிதராய்ப் பரவசம் அடைந்து பூமியில் விழுந்து புரளுவர்,

| | |
|---|---|
| அருளை வியப்பால் அறிய உரைப்பார் | இறைவியின் திருவருளை அதிசயத் தால்தான் அறிந்ததைமெய்யடியார் களுக்கு எடுத்துக் கூறு நிற்பர், |
| அவள் அடியார் அதி சய மிக்கார் | தேவியின் அடியார்கள் வியக்குந்தன் மை உள்ளவர்கள். 14 |

*[அ-கை] சிலர் தெளிந்த மனத்தால் எடுத்து உரைப்பர், சிலர் ஆனந்தமாய் இருப்பர், சிலர் திகைத்து இருப்பர், சிலர் உருகு மனத்தால் அழுவர் சிரிப்பர், அடியார்கள் செயல் அரிதற்கு அரியது எனல்.*

**139 தெளியுமு ளத்தார் சிலவர்தெ ளிப்பார் -**
**சிலவர்க ளிப்பார் சிலவர்தி கைப்பார்,**
**அளியுமு ளத்தோ டழுதுசி ரிப்பார் -**
**அவர்கள் செயற்பா டறியவொ ணுதே.**

| | |
|---|---|
| [இ-ள்] சிலவர் தெளி யும் உளத்தார் தெளிப் பார் | சில பேர்கள் தெளிந்த புத்தியால் அறிந்ததை அதிகாரிகளுக்கு எடுத்து உரைப்பர், |
| சிலவர் திகைப்பார் | சிலபேரானந்த அநுபவத்தில் இருப்பர்கள் |
| சிலவர் திகைப்பர் | சிலபேர் திகைத்து நிற்பர், |
| அளியும் உளத்தோடு அழுது சிரிப்பர் | சிலர் மனம் உருகி ஆனந்தக்கண்ணீர் விட்டு அழுதும், அதிசயத்தால் சிரிக் கவும் செய்வர், |
| அவர்கள் செயப்பாடு அறிய ஒணுதே | அடியவர்கள் செய்யுந் திருவிளை யாடல்கள் இத்தகையது எனக் கூற முடியாதாம். 15 |

## 12. லீலை.

*[அ-கை] திருவிளையாடலை ஆரம்பித்தவரராய் வடிவற்ற பரம் பொருளே! கருணையால் மும் மூர்த்திகளாய் ஈசுவர கீதை, பகவற் கீதை, பிரம்ம கீதைகளால் உப நிட தார்த்தங்களைக் கூறினர் என்று கூறல்.*

140 ஆதி மூலமொரு கோலமுமி லாத வடிவிவ் -
வகில லோகமும றிந்தடையும் வண்ண மழகார்,
சோதி மூவடிவு கொண்டருளி யந்த மறைமுன் -
சொன்ன தன்மைதெரி யும்பரிசு சொன்ன துணிவும்.

| | |
|---|---|
| [இ-ள்] ஆதி மூலம் ஒரு கோலமும் இலாத வடிவு | முதற்காரணமான பரம்பொருள் ஒரு வித மூர்த்தி விசேடமும் இன்றி குணா தீத அசல சொருபமே, |
| இவ் வகில லோகமும் | இந் நாநாவிதமான சர்வ லோகங்களில் உள்ள அதிகாரிகளும், |
| அறிந்து அடையும் வண்ணம் | உள்ளது உள்ளபடி பூர்வ பட்ச சித்தாந்தங்களை யுணர்ந்து கதி அடையும் படியாக, |
| அழகு ஆர் சோதி மூவடிவு கொண்டருளி | திருக்கல்யாண குணங்களைப் பொருந்திய மாயையோடு கூடிய பரமாத்மாவே பிரம்மா விஷ்ணு உருத்திரராய் எழுந்தருளி |
| அந்த மறை முன் சொன்ன தன்மை | வேதாந்தங்களில் பூர்வம் சொல்லி இருக்கின்ற இரகசியார்த்தங்களை, |
| தெரியும் பரிசு சொன்ன துணிவும் | கீதாத்திரயங்களால்தெரிந்துகொள்ளும் படியாக உபதேசித்த தெளிவும் |

1

[அ-கை] கைலாச பதியாய் பிரம்மா முதலிய தேவர்களுக்கு உபதேசித்தனர் எனக் கூறல்.

141 கையிலை மாமலையின் மேலினிதி ருந்தருளியக் -
கமல யோனிமுத லெக்கடவு ளர்க்கு மருளான்,
மயிலை யேறிவரு மைந்தனுட னந்தி முதலா -
மற்றும் வந்தடைப வர்க்குமருள் செய்த வகையும்.

| | |
|---|---|
| [இ-ள்] கையிலை மா மலையின் மேல் இருந்தருளி | கைலாயம் என்னும் சிறந்த வெள்ளியங்கிரி மீது எழுந்தருளி இருந்து, |
| அக்கமல யோனிமுதல் எக் கடவுளர்க்கும் | அந்தப் பிரம்மா முதலிய சகலமான தேவதைகளுக்கும், |

அருளால் மயிலை ஏறி வரும் மைந்தன் உடன் } கருணையால் மயில்வாகனத்தில் எழுந்தருளிய முருகப் பெருமானாகிய புத்திரனுடன்

நந்தி முதலாம் மற்றும் வந்து அடைபவர்க்கும் } நந்தி தேவர் முதலிய வேறும் பலஅதிகாரிகளாக வந்தடைவர்களுக்கும்,

அருள் செய்த வகையும் - உபதேசித்த பெருந்தன்மையும். 2

*[அ-கை] கல்லால விருட்சத்தில் எழுந்தருளி சனகாதி மகரிஷிகளுக்கு உபதேசித்தனர் எனல்.*

142 **ஆல நீழலினி ருந்தருளி யன்று சுரரோ -**
**டசுரர் நெஞ்சினள விற்களவ றைந்த றிவுசேர்,**
**நாலு பேரறிய நாலுமறை சொன்ன பரிசே -**
**ஞான மானநய னந்தனைந யந்த நலனும்.**

[இ-ள்] ஆல நீழலில் அன்று இருந்தருளி } முன்னொரு காலத்தில் கல்லால விருக்ஷத்தின் நிழலில் எழுந்தருளிஇருந்து

சுரரோடு அசுரர் நெஞ்சின் அளவிற்கு அளவு அறைந்த } தேவர்களுடன் அசுரர்க்கும் அவர் அவர்களுடைய மனப் பரிபாகத்திற்குத் தக்கபடி உபதேசித்த வேதார்த்தங்களை,

அறிவு சேர் நாலுபேர் அறிய } சர்வ கலை ஞானமும் உள்ள சனகர், சனந்தனர், சனாதியர், சனற்குமாரர் ஆகிய நால்வரும் உணரும் படி,

நாலு மறை சொன்ன பரிசே } இருக்கு, எசுர், சாமம், அதர்வனம் நான்கு வேதவேதாந்தங்களைப் பிரதிபாதித்த பிரகாரமே,

ஞானம் ஆன நயனம் தனை நயந்த நலனும் } ஞானமாகிய கண்ணால் அபரோட்சமாய் அறியும் படி மௌனமாய் சின்முத்திரையால் அறிவித்த நற்செயலும். 3

*[அ-கை] கிருஷ்ண பகவானாய் வந்து பூமி பாரம் தீர்ப்பவர் பேரால் அதிகாரிகளின்பிறவித் துன்பம்நீங்கபகவற்*

*கீதையை உபதேசித்து நம்பும் பொருட்டு விஸ்வ ரூபத்தைக் காட்டினர் எனல்.*

143 இசைய வையனொரு பாரதமு டிப்பவர்கள்போ -
லிப்பிறப் புமுடி யும்பரிசி யம்புமியல்பும்,
விசைய னையமுறு நெஞ்சினைய றிந்தருளியே -
விசுவ ரூபவியல் காட்டிவெருள் வித்தவிரகும்.

| | |
|---|---|
| [இ-ள்] ஐயன் ஒரு பாரதம்முடிப்பவர்கள் | கிருஷ்ண பகவான் ஆனவர், பாரத யுத்தஞ்செய்துமுடிக்கின்றவர்களைப் போன்று, |
| இசையஇப்பிறப்புமுடியும் பரிசு இயம்பும் இயல்பும் | பொருத்தமாயிப் பிறப்பிறப் பொழியும் படியாக பகவற் கீதையை உபதேசித்த இயற் பெருந் தகைமையும் |
| விசயன் ஐயம் உறும் நெஞ்சினை அறிந்தருளி | அருஜ்ஜுனனுக்குச் சந்தேகம் உள்ளதை திருவுளத்து அறிந்து அருளால், |
| விசுவருபஇயல் காட்டி வெருள் வித்த விரகும் | விராட் சொருப மகிமையை ஞானக் கண்ணால் காணக் காண்பித்து பய பத்தி உண்டாக்கும் உபாயமும். 4 |

144 ஆயர் தம்மனையி னோர்வடிவு கொண்டுபதினா -
றாயி ரந்திரும டந்தையரு டன்புணரினுந்,
தூய பிரமச்சர்ய மத்தில்வழு வாமலொழுருஞ் -
சுத்த ஞானசரி தத்தியல்பு சொன்னதுணிவும். 5

*(இதன் பொருள் வெளி)*

*[அ-கை] திருப் பெருந்துறையில் மாணிக்க வாசக சுவாமிகளுக்கு உபதேசித்ததைக் கூறல்*

144 வாத வூரனையொ ழிந்தவர்கள் பொன்னடியிலே -
மன்ன வென்னுடலை மாற்றுகென வாற்றலிலனாய்,
ஓத வூறுமமிர் தஞ்செவிக ளார்வுறமுகந் -
துண்டி வையகமு முய்யும்வகை செய்தவுறவும்.

| | |
|---|---|
| [இ-ள்] வாத வூரனை ஒழிந்தவர்கள் பொன்னடியிலே மன்ன | மாணிக்கவாசகப் பெருமானை விடுத்து மற்றடியார்கள் யாவரும் திருவடியில் அமரவும், |

என் உடலை மாற்றுக என ஆற்றல் இலனாய் } வாதவூரடிகளும் விதேக மோட்சம் அடையவேண்டும்எனப்போற்றியும் விட்டுப் பிரியும் வலியற்றவராய்,

ஓத ஊறும் அமிர்தம் செவிகள் ஆர் உற முகந்து உண்டு } பாட உண்டாகும் திருவாசகம் திருக்கோவையார் ஆன அமிர்தத்தை தனது திருச்செவிகளில் விருப்போடு முகந்து திரு அமுது செய்து,

இவ்வையகமும் உய்யும் வகை செய்த உறவும் } இவ்வுலகம் கடைத்தேறும் படி தமது கையால் எழுதிவைத்த நேயமும் 6

*[அ-கை] அருவனாயினும் அன்பர்க்கு உருவனாய் வந்து அருள்வன் எனல்.*

146 தன்ப ராபரம தானதிரு மேனி நிலையிற் -
சலன மின்றியொரு தன்மையினி னின்ற ருளியே,
அன்ப ரானவர்க ணெஞ்சினிலு வந்த வடிவா -
யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்த வருளும்.

*[இ-ள்]* தன் பராபரமது ஆன திருமேனி நிலையில் } தனது மகிமையால் மேலான பிரம் மாதி பதங்களும் தாழ்ந்தனவோ அச் சச்சிதானந்த சொருப நிலைமையில்,

சலனம் இன்றி ஒரு தன்மையின் நின்று அருளி } அசலமாய் அத்வைத சொருபமாய் இருந்தபடி இருந்து கொண்டு,

அன்பர் ஆனவர்கள் நெஞ்சினில் உகந்த வடிவாய் அங்கு வந்து } மெய்யடியார்கள்உள்ளத்தில்எப்படி விரும்பி வழிபடுகின்றனரோ அப்படியே அவ்விடம் எழுந்தருளி வந்து,

அவர்கள் உய்யும்வகை செய்த அருளும் } அவ்வடியார்கள் கடை தேறுபடி செய்கின்ற கருணையும். 7

*[அ-கை] பகவான் பகவற்கீதையில் தர்மத்தையும் பத்தர்களையும் காக்கும் பொருட்டு உலகந்தோறும் அவதரிப்பேன் என்ற திருவார்த்தை உண்மை யாக்கும் பொருட்டுசொருபானந்தசுவாமிகள் அவதரித்தனர்என்று இது முதல் 7 செய்யுளால் வாழ்த்துகின்றனர்.*

**147 உலகமயக் குருவண்ண முகந்தோறு -
முகந்தோறு முதிப்ப னுனென்,
றிலகியமெய்த் திருவார்த்தை யாவர்க்கு -
மேறும்வகை யிக்கா லத்தே.**

| | |
|---|---|
| [இ-ள்] உலகம் மயக்கு உரு வண்ணம் | உலகத்திலுள்ள அதிகாரிகள் தர்மத்தில் அதர்ம புத்தியும், அனுத்மாவாகிய தேகத்தில் ஆத்ம புத்தியுமாக மயங்காத படி, |
| உகம் தோறும் உகம் தோறும் | அந்தந்த கால தேசத்திற்குத் தக்கபடி அந்தந்த மூர்த்தமாய் துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்ய, |
| நான் உதிப்பன் என்று இலகிய மெய்த்திரு வார்த்தை | நாமே பிறக்கின்றேம் என்று பகவற் கீதையில், 4-அ, 7, 8, சுலோகங்களில் பகவான் உடைய அழகிய வாக்கிய அமிர்தமானது, |
| ஏறும் வகை இக் காலத்தே | பொருந்தும் படியாக இந்தக் கலியுகத்தின் கண்ணும் (இது குளகம்) 8 |

**148 பெருமான்வந் தவதரித்துப் பீடுடைய -
தரணியுளோர் பிழைக்கும் வண்ணம்,
சொருபானந் தச்சுடர்தன் றுணைமலர்த்தா -
டரும்பரிசு சொல்லிச் சொல்லி.**

| | |
|---|---|
| [இ-ள்] பெருமான் வந்து அவதரித்து | எமது இறைவன் சகுணமாக எழுந்தருளி குருமூர்த்தமாக திரு அவதாரஞ் செய்து, |
| பீடு உடைய தரணி உளோர் பிழைக்கும் வண்ணம் | (பிறந்து இறவாத பெருவாழ்வு நல்கும்) பெருமையுற்ற பேறுலகிலுள்ள நல்லோர்களான அதிகாரிகள் எல்லாம் உய்யும் படிக்கு, |
| சொருபானந்த சுடர் தன் | சொருபானந்தர் என்னும் திருநாமத்தோடுற்ற சுயஞ்சோதியின் உடைய |

| | |
|---|---|
| துணை மலர்த்தாள் தரும் பரிசு சொல்லிச் சொல்லி | இரு திருவடித் தாமரைகள் தந்து அருள்வதற்காக (பெரும் புகழை) மேலும் மேலும் எடுத்துக் கூறி (இது குளகம்) 9 |

*[அ-கை] தேவர்கள் தியங்கி நிற்க சொருபானந்தர் அடியார்கள் மயக்கமற்று இன்புறவும் மலரடி சூட்டிய கருணையை மறுபடியும், மறுபடியும் வாழ்த்துவோம் எனல்.*

149 அண்டரெலா மலமாக்க வருட்சொரூபா -
னந்தன்றன் னடியார் வாழப்,
புண்டரிக மலர்ப்பாதம் பொறித்தருளுந் -
திருக்கருணை போற்றி போற்றி.

| | |
|---|---|
| [இ-ள்] அண்டர் எலாம் அலமாக்க | பிரம்மா முதலியதேவர்கள்எல்லாம் உண்மை உணராமல் மதி மயங்கி நிற்கவும், |
| அருள் சொரூபானந் தன் தன் அடியார் வாழ | கருணையே திருவுருவமான சொருபா னந்தசுவாமிகளின்சீடர்கள் பேரின்ப வாழ்வில் வாழ்ந்திருக்கவும், |
| புண்டரிக மலர்ப் பாதம் | செந்தாமரை மலர் போன்ற திருவடிகளை, |
| பொரித்து அருளும் திருக்கருணை | சிரசில் சூட்டுகின்ற அழகிய பெருங் கருணைக்கு, |
| போற்றி போற்றி - | நமஸ்காரம் நமஸ்காரம், 10 |

*[அ-கை] அச்சம் இல்லாமல் நாம் அணைவரும் போற்றும்படியாய் வாக்காதிகளுக்கு எட்டாதவன் துவேறு புவியல் வடிவெடுத்து வந்த கருணையைப் போற்றுவோம் எனல்.*

150 கூசாதே நாமுமெலாங் கொண்டாடும் -
படிக்கிந்த குவல யத்தே,
வாசாம கோசரனோர் வடிவாகி -
வந்தவருள் வாழ்த்தி வாழ்த்தி.

| | |
|---|---|
| [இ-ள்]கூசாதேநாமும் எலாம் கொண்டாடும் படி இந்த குவலயத்தே | பயமற்று நம்போன்றகடையேங்கள் எல்லாம் வாக்கால் வழுத்தவும், மனத்தால் மதிக்கவும், காயத்தால் வணங்கவும் இப் பூலோகத்தின்கண் |
| வாசா மகோசரன் ஓர் வடிவு ஆகி | மனோவாக்கிற்கு எட்டார்த பரம் பொருள் ஒப்பற்ற குருமூர்த்தமாக, |
| வந்த அருள் வாழ்த்தி வாழ்த்தி | எழுந்தருளிய பெருங்கருணையை வாயாரத் தோத்திரம் மேலும் மேலு செய்து (இது குளகம்) 11 |

*[அ-கை] துயரகல வந்து அவரித்த கிருபா வடிவத்தை பத்தியினால் வாழ்த்தி,வாழ்வதாகிய இந்திரஜிசயானந்தத்தை நீங்காதவர்கள் எனல்.*

**151 கரைத்தல் தீர வந்து தித்த - கருணை மேனி காதலோ,**
**டுரைத்து வாழு மிவ்வி நோத - மிடைவி டாம லுடையரே**

| | |
|---|---|
| [இ-ள்] கரைத்தல்தீர | - சர்வ துக்க நிவர்த்தியின் பொருட்டு, |
| வந்து உதித்த | - திரு அவதாரஞ் செய்து அருளிய, |
| கருணை மேனி | - கிருபா சொருபத்தை, |
| காதலோடு உரைத்து வாழும் | பத்தியோடு அவர் கீர்த்தியைப் பாடி வாழ்வதாகிய, |
| இவ் விநோதம் இடை விடாமல் உடையர் | இவ் வற்புத ஆனந்தத்தை விட்டு நீங்காமல் இருப்பவர்களாகும். 12 |

*[அ-கை] வாழ்வையும், மரணத்தையும், சயனத்திருப்பதையும், தரையில் இருப்பதையும், ராகத்துவேஷத்தையும கணமுங் கருத மாட்டார்கள் எனல்.*

**152 சாத லாதல் வாழ்த லாதல் - தரைய தாதல் சயனமாதல்,**
**காத லாதல் காய்த லாதல் - கருது ரூர்கள் கணமுமே,**

[இ-ள்] சாதல் ஆதல் - மரணம் வந்த காலத்தும்,
வாழ்தல் ஆதல் - சுகமாய் சீவித்த காலத்தும்,
தரையது ஆதல் - (வறுமையால்) தரையிற் படுத்த போதும்,

| | |
|---|---|
| சயனம் ஆதல் | (செல்வத்தால்) கட்டில் மெத்தை யாதிகளில் படுத்த போதும், |
| காதல் ஆதல் | - இராகம் உண்டான போதும், |
| காய்தல் ஆதல் | - துவேஷம் உண்டான போதும், |
| கணமும் கருதுமுர்கள் | இவற்றை எல்லாம் நிமிடமும் நினைக்க மாட்டார்கள். 13 |

[அ-கை] *கர்மத்தால் உலகம் உண்டான விதமும், அதை அழியும் படியாகச் செய்யும் மாயையும், காண்பீர் என உண்டான லீலை காட்டினர் எனல்.*

**153** வந்த விச்ச கத்து தித்து - வந்த வாறு மர்றுமா,
நிந்த விச்சை பாரு மென்றி - ருந்த விச்சை காட்டியே

| | |
|---|---|
| [இ-ள்] வந்த இச்ச கத்து உதித்து வந்த ஆறும் | கர்மத்திற்கு ஈடாய் உண்டான இவ் உலகத்தினது சிருஷ்டி உண்டான கிரமத்தையும், |
| மாறும் ஆறு | - இதன் லயக்கிரகத்தையும், |
| இந்த விச்சை பாரும் என்று | இவ் விந்திர சாலத்தை பாருங்கள் என்று, |
| இருந்த விச்சை காட்டியே | இருக்கின்ற அகடித கடனுசமர்த்தை உடைய மாயாவித்தையை அறிவித்தலே லீலையாம். 14 |

-:- -:- -:-

## 13. பேய் முறைப்பாடு.

[அ-கை] *முமுட்சுக்களாகிய பேய்கள் சிவப்பிரகாச சுவாமிகளாகிய தேவி யிடத்து முறையிடுதல்.*

**154** அண்ட முண்ட கண்டர் நிற்க - வடைய வுண்ண வாதரங்
கொண்ட பேய்க ளகல வந்து - குறைக ணின்று கூறுமே.

| | |
|---|---|
| [இ-ள்] அண்டம் உண்ட கண்டர் நிற்க | விஷ்ணு சிவன் முதலிய தேவ தேவர்களும் பேரானந்தத்தை அறியவும் சொல்லவும் முடியாதிருக்க, |

அடையஉண்ண ஆதர ரம்கொண்ட பேய்கள் } முழுவதும் அநுபவிக்க ஆசையுற் றிருக்கும் முமுட்சுகளான பேய்கள்,
அகல வந்து நின்று குறைகள் கூறும் } வேருய் வந்திருந்து குற்றங்கள் கூறு வதைக் கூறுவாம். 1

*[அ-கை] பூமியில் பிறந்து, வாழ்வற்று, ஆத்மாவை மறந்து,தேகத்தைத் தான் என்றுஎண்ணி ;பேய்போல அலைய வைத்தது ஏன்?! எனக் கூறல்.*

155 உலகி லேச னித்து நின்று ழைந்து நீர்பி ழைப்பிலா,
அலகை யாமி னெனவ குத்த தென்கொ லெம்மை யம்மையே

அம்மையே எம்மை } எங்களைத் தாயே!
உலகிலே சனித்து நின்று உழைத்து } பூவுலகின் கண் பிறந்திருந்து உண்டு உடுப்பதற்காக இரவும் பகலும் உழைப்பதனுலேயே
நீர் பிழைப்பு இலா அலகை ஆமின் } நீங்கள் உய்விலாத பேய்களாய் இருங்கள்,
என வகுத்தது என் கொல் } என்பதாகப் பிரித்து வைத்திருப்பது என்ன காரணம் எனவும். 2

*[அ-கை] மாணிக்கவாசகப் பெருந்தகை அவதரித்து உருக்கமான பாசுரங்களைப் பாடி மோட்சம் அடைந்த னர்; நாங்கள் ஓர் பயனும் அடையவில்லை எனல்.*

156 வாசகத்தா லாவியைநின் றுருக்கு ஞான -
மதயானை வாதவூர் வள்ள லோடு,
மாசகற்றி யாயிரம்பேர்க் கீச ஞர்நல் -
லமிர்தளித்தா ரெமக்கிரங்கி யருளா ரிந்நாள்.

[இ-ள்] வாசகத்தால் ஆவியை நின்று உருக்கும் } திருவாசகம்என்னும்திருப்பாடலால் உயிரையும்உருக்கும் படிசெய்கின்ற,
ஞான மதயானை வாத ஊர் வள்ளலோடும் மாசு அகற்றி } ஞான மதக்களிறுன திருவாத ஊரில் அவதரித்த மணிவாசகப் பெருமா னேடும் மலதோஷ மாற்றி,
ஆயிரம் பேர்க்கு - ஓராயிரம் அடியார்களுக்கு,

| | |
|---|---|
| ஈசனுர் நல்ல அமிர்து அளித்தார் | பரமேஸ்வரனே ஞான உபதேசமான மோட்சாமிர்தம் அளித்தார், |
| எமக்கு இரங்கி இந் நாள் அருளார் | எங்களுக்கு திருவுளம் இரங்கி இது நாள் வரை அளித்தார் இல்லை. 3 |

*[அ-கை] திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் அவதரித்த ஞான்றும் எங்களுக்கு ஒரு பயனும் இல்லை எனல்*

157 தலைப்பான்மை மிகப்பெரிய காழி ஞான -
சம்பந்தர் தாம்பிள்ளைத் தனத்தி னுலே,
முலைப்பாலைப் பகிராதே தாமே யுண்டு -
முத்தமிழும் பாடியற முதிய ரானுர்.

| | |
|---|---|
| [இ-ள்] தலைப்பான்மை மிகப் பெரிய காழி ஞான சம்பந்தர் | அடியார்களில் முதன்மையராயும், பத்தி ஞானங்களில் மிகவும் பெரியரான சீர்காழியின் கண் அவதரித்த திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் |
| தாம் பிள்ளை தனத்தி னுலே | தாங்கள் குழைந்தையின் சுபாவத்னுலே, |
| முலைப்பாலைப் பகிராதே | திரு முலைப்பாலை எம் போன்றவர்களுக்குப் பிரித்துக் கொடாமல், |
| தாமே உண்டு - | தாம்மாத்திரம் திரு அமுது செய்து, |
| முத்தமிழும் பாடி அற முதியர் ஆனுர் | இயலிசை நாடகம் என்னும் முத்தமிழாகிய பாசுரங்களைப் பாடி மிகப் பெரியர் ஆனுர். 4 |

*[அ-கை] அப்பர் சுவாமிகள் அவதரித்த காலத்தும் அவர் மட்டும் பாடி பணி செய்து மோட்சம் அடைந்தாரேயன்றி நாங்கள் ஏமாந்து போனேம் எனல்.*

158 திருநாவிற் கரசர்மிகத் தெள்ளத் தேறித் -
தெளிந்துதித் திக்குமருட் டேறன் முன்னம்,
ஒருநாளிற் பெற்றெம்மை யொழியப் போயுண் -
டொளியுருவா யினர்நாங்க ளுலர்ந்தே போனேம்.

| | |
|---|---|
| [இ-ள்] திருநாவிற்கு அரசர் மிகத்தெள்ளத் தேறி, தெளிந்து, தித்திக்கும் அருள் தேறல், முன்னம் ஒரு நாளில் பெற்று | அழகிய வாக்கிற்குத் தலைவராயஅப்பர் சுவாமிகள், நன்றாக அஞ்ஞான சந்தேக விபரீதங்களை மாற்றி, சுவாநுபவ நிலையிலிருந்து, ஒருமுறை அநுபவித்தால் உடல் உள்ளவரை தித்திக்கும் திருவருளாகிய தேன் அமுதை, முன்னொரு காலத்தில் தாம் அடைந்திருந்தும், |
| எம்மை ஒழிய போய் உண்டு ஒளி உருவு ஆயினர், நாங்கள் உலந்தே போனேம் | எம்போன்றவர்களுக்குக்கொடாமல் தாமே போய் அமுது செய்து பரஞ்சோதி வடிவாயினர். நாங்களோ அருள் மழையில்லாத பயிர் போல் வாடுகின்றோம். 5 |

*[அ-கை] சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவதரித்து உலக இயற்கையராய் இருந்தஅவரை வலிதில் வந்து தடுத்து ஆட்கொண்ட தியாக ராஜப் பெருமான் எம் பேய்களுக்கு ஆம் மோட்சத்தை கண்ணுக்குங் காட்டினர் இல்லை எனல்.*

159 அடுத்தனவே செய்துதிரிந் தற்ற நம்பி -
யாரூரிற் கிறைவர்திரு வருளி னாலே,
தடுத்தவரை யாட்கொண்டா ரமிர்த முன்னர்த் -
தாமளித்தா ரெம்மளவுந் தாயே காணேம்.

| | |
|---|---|
| [இ-ள்] அடுத்தனவே செய்து திரிந்து அற்ற நம்பி | உலகத்திற்கு ஒத்த காரியங்களை இயற்றி அலைந்து கஷ்டமுற்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளை, |
| ஆர் ஊரிற்கு இறைவர் | திருவாரூரின் கண் எழுந்தருளி இருக்கும் தியாகராஜப் பெருமான், |
| திருவருளினாலே தடுத்து அவரை ஆட்கொண்டார் | அழகிய பெருங் கருணையால் உலக நடையினின்று மாற்றிசுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தமது திருவடிகளாக்கிக் கொண்டு, |
| அமிர்தம் முன்னம் தாம் அளித்தார் | மோட்சாமிர்தத்தை பூர்வம் தமது அருளால் தந்தனர், |

| | |
|---|---|
| எம் அளவும் தாயே காணேம் | [எம்போன்றவர்க்குத்] தாயேகொஞ்சமும் காணவுங் கிடைக்கவில்லை. 6 |

[அ-கை] நம்மாழ்வார் அவதரித்த காலத்தும், திருவாய்மொழி முதலிய பாசுரங்கள்பாடி அணிவித்தும், மோட்சத்தை அடைந்தனர். அதனாலும் நாங்கள் தெளிவடையவில்லை எனல்.

160 சாந்தியினை நேராக வுடைய நல்ல -
சடகோபர் பராமிர்தைத் தாமே யுண்டு,
தீந்தமிழென் றொருகோடி வேத மாகச் -
செய்யதிரு வாய்மலர்ந்தார் தேர மாட்டேம்.

| | |
|---|---|
| [இ-ள்] சாந்தியினை நேர் ஆக உடைய நல்ல சடகோபர் | (ஆழ்வார் திருநகரின்கண்புளியமரத்தின் பொந்தில் சிறு குழந்தையாய் இருந்தே நிர்விகற்ப சமாதியில்எழுந்தருளி சுவாநுபவத்தராய்) விஸ்ராந்தியை அபரோட்சமாகப் பெற்றிருக்கின்றவருய்எல்லாம்சிறந்துவிளங்கியசடகோபர்என்னும்நம்மாழ்வார், |
| பராமிர்தை தாமே உண்டு | மேலான மோட்சாமிர்தத்தைத் தாங்களே திரு அமுது செய்து, |
| தீம் தமிழ் என்று | - இனிய திராவிட மொழி எனக் கூறும், |
| ஒருகோடிவேதம் ஆக, | கோடி கோடியாக சாம வேத சாரத்தை தமிழ் வேதமாக விளங்கும்படி, |
| செய்ய திருவாய் மலர்ந்தார் | அழகிய திருவாய் மொழி திரு ஆச்சிரியமாகிய திவ்விய பிரபந்தங்களை அருள் புரிந்தார், (அதனுலும்) |

தேர மாட்டேம் - எம் போலிகள் கடைத்தேறும் படி காணேம் 7

[அ-கை] சிவாக்ர யோகிகள் முதலான பெரியோர் தாம் செய்த புண்ணியத்தால் மோக்ஷம் அடைந்தனர்; எங்களுக்கு உமது கருணையால் துன்பம் நீங்கும் படி அருள் செய் எனல்.

161 சீபாக்கர் முதலாக முன்னர் தாந்தாஞ் -
செய்தபாக் கியத்தானித் தியக்கந் தீர்ந்தார்,

**நீபார்க்கப் பட்டவரே கண்டா யெங்க -**
**ணிர்ப்பாக்கி யத்தையினி நீங்கப் பாராய்.**

*[இ-ள்] சீபாக்கர் முதல் ஆக* } சிவாக்கர யோகிகள் முதலாய்க் கூறிய பெரியோர்கள்,

முன்னம் தாம்தாம் செய்த பாக்கியத்தால் } பூர்வ செனனங்களில் அவர் அவர்கள் செய்திருக்கின்ற பெரும் நிஷ்காம புண்ணிய வசத்தால்,

இத்தியக்கம் தீர்ந்தார் } இச்சம்சார சாகரத்தில் உள்ள சோக மோகங்களைக் கடந்தவர் ஆயினர்,

நீ பார்க்கப்பட்டவரே } தேவியே உன்னால் யாவரையும் அறிந்ததே

எங்கள் நிர்பாக்கியத்தை இனி நீங்கப்பாராய் (கண்டாய் முன்னிலை அசை) } எம்போலிகளின் பேய்த்தன்மைஆய துரதிஷ்டமானது இனிமேலாவது நீங்கும்படித் திருவுளம் பற்ற வேண்டும். 8

*[அ-கை] நிவிர்த்தி மார்க்கத்தை அடையாமல் பிரவிருத்தி மார்க்கத்தில் அலையும் படி செய்தாய் எனல்.*

**162 முத்திவரும் படியன்றி முற்றுடலம் விடுமளவுங்,**
**கத்திவரும் படியாகக் கற்பித்தா யெங்களையே.**

*[இ-ள்] முத்திவரும் படி அன்றி* } மோட்சம் அடைவதற்காக (வேதத்திற்கூறியகர்மம், பக்தி, ஞானமான) சாதனங்களை அநுஷ்டிக்காமல்,

முற்றுடலம் விடும் அளவும் } மனிதனாகப் பிறந்தது முதல் மரண கால பரியந்தம்,

கத்திவரும் படி ஆக கற்பித்தாய் எங்களை } எம் போலிகளை சிருஷ்டித்திருக்கின்றாய் (தேவியே இது நியாயமோ?) என்பதாம். 9

*[அ-கை] மோட்ச மார்க்கம் அறியாமல் ஊண் உண்பதும் அதைத் தேடவும் தொழிலாய் வைத்தனை எனல்.*

163 ஆராத வூணுண்டுன் னடியகலும் வகையெ மக்குத்-
தூராத குழிதூர்க்கை தொழிலாகச் செய்தனையே.

[இ-ள்] ஆராத ஊண் உண்டு உன்னடி அகலும் வகை } விடாது உணவு உண்ணுதலே முக்கியமாய்க் கொண்டுதேவி! உனது திருவடிகளை விட்டு நீங்கும் படியாக,

எமக்கு தூராத குழி தூர்க்கைத் தொழில் ஆக செய்தனை } எளியேங்களுக்கு நிறப்ப முடியாமல் இருக்கின்ற வயிறை நிறப்புகின்றதே வேலையாகக்கொடுத்துஇருக்கின்றாய் 10

*[அ-கை] உடம்பு உள்ள அளவும் உறுந்துயர் ஒழியாது எனல்.*

164 பாகாய மொழியாயிப் படுதுயர மொருகாலும்,
போகாத வுடலம்வெறும் பொய்யாலே செய்தனையே.

*[இ-ள்] பாகு ஆய மொழியாய்* } சர்க்கரைப் பாகு போன்ற வாக்காமிர்தம் உடையவளே,

*இப் படுதுயரம்* - இப்படிப் பட்ட துன்பமானது,

*ஒரு காலும் போகாத* - ஓர் போதும் விட்டு நீங்காத,

*உடலம் வெறும்பொய் யாலேசெய்தனையே* } (இத் தேகத்தைக் கலப்பில்லாத) மாயா மாத்திரமாக தேவியே) செய்திருக்கின்றாய். 11

*[அ-கை] உனது எதார்த்தவடிவத்தை உணர முடியாமல்சீவேசுரசெகத்தாகளங்களுக்குத்தோற்றினை எனல்*

165 உங்கட்குத் தகுமிதுவென் றுள்ளபடி யுனையுணரா,
வெங்கட்கு வடிவுவெறு மிடும்பையினு லெடுத்தனையே

*[இ-ள்] உங்கட்குத் தரும் இது வென்று* } பேய்களானஉங்களுக்குத்தகுதியாய் உள்ளது இதுவே என்பதாக,

*உள்ள படி உனை உணரா* } நாம ரூபங்கள் பொய் என்றும், சச்சிதானந்த வடிவமான உன்னை உண்மை என்றும், உள்ளதை உள்ளபடி

*எங்கட்கு, வடிவு வெறும் இடும்பையில் எடுத்தனை* } அறியாத எங்களுக்கு, ரூபம் துன்பத்தையே உண்டுபண்ணத் தக்கதான காளியாய்த் தோற்றம் அளிக்கிறாய்.

*[அ-கை] இப்படிச் சொன்ன பேயைப் பார்த்து தேவீ உனது உடம்பில் நற்குறிகளுண்டானதா? எனல்.*

**166 இப்பரிசே பலவியம்பி யிலகுமொரு பேயினையுன்,**
**மெய்ப்பரிசே விளைந்தகுறி விண்ணப்பஞ் செய்கெனவே**

| | |
|---|---|
| *[இ-ள்]* இப்பரிசு பல இயம்பி இலகும் ஒரு பேயினை | இந்தப் பிரகாரம் பற்பல விதமாய் முறையிட்டு விளங்கா நின்ற ஒரு பிசாசினை, |
| உன் மெய்ப் பரிசு | - உன்னுடை மனத்தின் கண், |
| விளைந்த குறி | - உண்டானதோர் அடையாளங்கள், |
| விண்ணப்பம் செய்க என | சந்நிதியின் முன்னெடுத்துக் கூற வேண்டும் எனவும். (குளகம்) 13 |

# 14. குறி.

*[அ-கை] கண்ணால் காணும் அடையாளம் இல்லை எனினும் பிறப்பறுக்கும் குறிகள் சில கண்டேன் எனல்.*

**166 அடியறிகின் றிலனடியே னறிவதொரு குறியல்ல,**
**குடிபறியும் படிவந்து தோன்றியதோர் குறியுண்டே.**

| | |
|---|---|
| *[இ-ள்]* அடியேன் அறிவது ஒரு குறி அல்ல | அடியேனால் அறியும் படியான காட்சிப் பிர மாணத்தால் அறியும் படிக்கில்லை, |
| அடி அறிகின்றிலன் | - காரணம் அறியாதவனாகிய எனக்கு, |
| குடி பறியும் படி வந்து தோன்றியது ஓர் குறி உண்டே | பிறப்புஇறப்பாகியசம்சாரமானதுக் அடியோடு அழியும் படியாக உண்டாயிருக்கின்ற ஒரு லிங்கம் இருக்கின்றது. 1 |

*[அ-கை] காணும் உலகெல்லாம் கனவு எனக் கண்டனன் எனல்.*

168 பூண்கின்ற வுடலாதி யாமிந்தப் புவனத்திற்,
காண்கின்ற பொருளெல்லாங் கனவாகக் கண்டனனே.

[இ-ள்] பூண்கின்ற உடல் ஆதி ஆம் இந்த புவனத்தில் } கர்மவசமாகப் பொருந்திய தேகாதி சராசரமாய்த் தோன்றும் பிரபஞ்சத்தில்,

காண்கிற பொருள் எல்லாம் கனவு ஆக கண்டனன் } காணப்படும் நாமரூப வஸ்துக்கள் எல்லாம் விழித்தவனுக்கு, கனவு பொய்யாவது போல பொய் என்று இருந்தனன். 2

[அ-கை] உடல் அழிவதைக் கண்டு உளம் நடுங்கும் எனல்.

169 உடலை யொன்றிய வுயிர்விடும்பொழு துணர்வ தன்றியிலே
நடலை கொண்டுட னழுவல் கண்டுள நடுநடுங் கிடுமே.

[இ-ள்] உடலைஒன்றிய உயிர் விடும் பொழுது } தேகத்தைக் கர்மத்தால்பொருந்திய சீவன் அத் தேகத்தை விட்டு நீங்கும் காலத்து,

உணர்வது அன்றியில் நடலை கொண்டு } யான் இன்னார் செய்யத்தக்கது இன்னதுஎனஅறியாமல்பெருந்துன்புற்று

உடல் நழுவல் கண்டு உளம் நடு நடுங்கிடும் } தேகம், பார்க்கும் போதே அழிந்து போவதைக் கண்டு மனம் அயர்ந்து உடல் நடுங்குவதாம். 3

[அ-கை] இகபர லோகங்கள் இன்பமல்ல எனல்.

170 அழியு மென்றம ருலகி லின்பமி தமையு மென்றிடுமே,
கழியு மென்றம ருலக மென்பது கருது கின்றிலமே.

[இ-ள்] அழியும் என்று அமர் உலகில் இன்பம் இது } பார்க்கும் போதே அழியும் படியான இவ்வுலக ஸ்திரீதன புத்ராதி சுகங்களானதும்,

அமையும் என்று இருக்கும் அமர் உலகம் என்பது } கற்ப பரியந்தம் அழியாது என்று இயம்பும் சொர்க்கம் முதல் பிரம்மாதி லோக பரியந்தம்,

| | |
|---|---|
| கழியும் என்று கருது கின்றிலம் | மகாப் பிரளயத்தில் அழிவது நிச்சயம் என்பதால் சுகம் என்று விரும்புகின்றிலம். 4 |

*[அ-கை] இந்திரிய மனோ நிக்கிரகம் உண்டாய் அதனுல் மனுபிமானங்கள் குறைந்தது எனல்.*

**171 சமத மங்களை முதல்வ ருஞ்சில தலைமை வந்திடுமே,**
**மமதை கொண்டிது நமதெ னும்பெரு மயன்ம டங்கிடுமே**

| | |
|---|---|
| [இ-ள்] சமதமங்கள் முதல் வரும் சில தலைமை வந்திடும் | மன அடக்கம் அதனுல் இந்திரியடக்க முதலாக ஒன்றைப் பற்றி ஒன்றாய் வருவதான சிற்சில முதன்மையான சாதனங்கள் வந்து அமையும். |
| மமதை கொண்டு இது நமது எனும் பெரும் மயல் மடங்கிடும் | யான் எனது என்னும் அபிமானத்தால் இத்தேகத்தை யான் என்பதும் தாரபுத்திராதிகளை எனது என்பதுமான பெரிய மயக்கம் அழிந்து வருவதாம். 5 |

*[அ-கை] நாம ரூபமான உலகம் அதிஷ்டான பிரம்மம் என்ற உறுதியும், ஆத்மாவை அறிவு சொரூபம் என்ற விவேகமும் வந்தது எனல்.*

**172 அழிவு றும்பொருள் பொருளெ னும்படி யறிதி வந்திடுமே**
**ஒழிவ றும்பொரு ளுணர்வ தென்றிடு முணர்வு வந்திடுமே**

| | |
|---|---|
| [இ-ள்] அழிவுறும் பொருள் பொருள் எனும்படி அறுதி வந்திடும் | அழியும் ஆரோபப் பிரபஞ்சம் அனைத்தும் அதிஷ்டான பிரம்ம சொருபமே என்னும் நிச்சயம் உண்டாவதாம். |
| ஒழிவு அறும் பொருள் உணர்வது என்றிடும் | நீக்கமின்றி நிறைந்திருக்கின்ற பரமாத்ம சொருபமே என்கின்ற. |
| உணர்வு வந்திடும் | சீவப் பிரம ஐயக்கிய ஞானம் உண்டாவதாம். 6 |

*[அ-கை] ஞான சாஸ்திரங்களால் சாந்தி உண்டா காமல் சற்குருநாதனைச் சரண் அடைய எண்ணும் எனல்.*

173 தெருளு றுங்கலை பலவு ணர்ந்தொரு சிறித லம்பிறவா,
அருளு றுங்குரு பரனி ருந்திட மறிய வென்றெழுமே.

[இ-ள்] தெருள் வுறும் கலை பல உணர்ந்து ஒரு சிறிதும் அலம் பிறவா — ஞானத்திற்கு ஏதுவான வேத சாஸ்திரங்கள் பலவற்றை கற்று உணர்ந்தும்மனத்திற் கொஞ்சம் ஏனும் விஸ்ராந்தி இல்லாததால்,

அருள் உறும் குருபரன் இருந்திடம் அறிய வென்று எழும் — அடைந்தவர்க்கு அருள்தரும்சற்குரு நாதன் எழுந்தருளும் இடத்தைக் கண்டு சரணடைய வேண்டும் என்று தலைமயிரில் தீ பிடித்தவன் தண்ணீர் தேடல் போல் மிகுந்த விருப்பு உண்டாகும். 7

*[அ-கை] திருவருள் பெற்றிருக்கும் அடையாளம் இது எனல்.*

174 அழுத கண்களு முருகு நெஞ்சமு மலரு மன்புவிடா,
தெழுத ரும்படி மொழித லிங்கரி திதுசெ யுங்குறியே.

[இ-ள்] அழுத கண்களும் — ஆனந்த பாஷ்ப நீரொழுகும் கண்களும்,

உருகு நெஞ்சமும் - நெக்கு நெக்காய் கரையும் மனமும்,

அலரும் அன்பு விடாது எழுதரும் படி மொழிதல் — மிகுந்த பக்தியால் எழுதல் இன்றி குழறிக் குழறி வாய் பேசவும்,

இங்கு அறிது இது செயும் குறியே — இவ்விடத்திற் கிடைத்தற்கு அரியது இத்திருவருள் செய்யும்அடையாளங் களாம். 8

*[அ-கை] இப்படி உரைத்ததை அதிகாரிகள் நற்குறி கள் என்றனர்; அதை அறியாத மற்றையோர் மயக்க முற்றனர் எனல்.*

175 அளியு நெஞ்சுடை யடிய ரிங்கிவை யழகி தென்றனரே,
தெளிவை யின்றிய வலகை யுஞ்சில திகைம யங்கினவே

| | |
|---|---|
| [இ-ள்] அளியும் நெஞ்சுடை அடியார் | அன்பு அகலாத மெய்யடியார்கள், |
| இங்கு இவை அழகு இது என்றனர் | இவ்விடத்தில் அடையாளங்கள் மிக்க சிறப்புஉடையன என்றுஉரைத்தனர் |
| தெளிவை இன்றிய அலகையும் சில திகை மயக்கின | விவேகமற்றிருக்கின்ற பிசாசங்கள் சிற்சில சொல்வது அறியாதனவாய் இருந்தன. 9 |

*[அ-கை] நன்று எனக்கேட்ட சில நன்று என்றது எனல்*

176 அழகி தென்றிடு மதுகொ டுஞ்சில வழகி தென்றனவே,
பழகி வந்ததொர் பரிச யங்கொடு பலப யந்தனவே.

| | |
|---|---|
| [இ-ள்] சில அழகு இது என்றிடும் அதுகொடும் சில அழகு இது என்றனவே | சில பேய்கள் இக் குறிகள் நல்லது என்று சொல்வதைப்பார்த்து (மற்றதும்) இவைநல்லது எனக்கூறினவாம் |
| பழகிவந்த ஓர்பரிசயம் கொடு பல பயந்தன | அப்பியசித்து வருமோர் பழக்கத்தைக் கண்டு சில கலக்கமுற்றன. 10 |



## 15. விசேஷப் பேய் வரவு.



*[அ-கை] இக் குறிகளைச் சொல்லி தேவியை வணங்கும் சமயம் அஞ்ஞானமழிந்து போனதைக் கண்ட விசேஷப் பேய் வந்தது எனல்.*

177 வெருவ ருந்திற னுரைசெய் தங்கடி வீழ்வுறும் பொழுதே
குருப ரன்பொரு களம றிந்தொரு குணலை வந்ததுவே.

| | |
|---|---|
| [இ-ள்] வெரு வரும் திறன் உரை செய்து அங்கு அடி வீழ் உறும் பொழுதே | பிறவித் துன்பத்தில் பயமுண்டாகும் தன்மையைக் கூறி தேவியின் சந்நிதானத்தில் நமஸ்கரித்திருக்கும் சமயத்தில், |
| குருபரன் பொருகளம் அறிந்து ஒரு குணலே வந்தது | மேலான குருநாதரது யுத்த களத்தைக் கண்டறிந்த ஓர் பேயானது வந்ததாம். 1 |

*[அ-கை] தேவி: வந்த பேயை, ஞான வேந்தனுக்கும் அஞ்ஞவேந்தனுக்கும் போர் நடந்த முறையைக் கூறு எனல்.*

178 கடுக வந்திடு மலகை வெம்பவங் கருவ றும்படிநீ,
பணடுக ளம்புக வினவி லைந்தமை பகரு கென்றலுமே.

| | |
|---|---|
| [இ-ள்] கடுக வந்திடும் அலகை வெம் பவம் கருவு அறும் படி | விரைவாக வந்திருக்கின்ற பிசாசினே கொடிய பிறவிக்குக் காரணம் ஆகும் அஞ்ஞானம் அழியும் படி, |
| நீ படுகளம் புகவினே விளைந்தமை பகருக என்றலும் | பேயாய நீ யுத்த பூமியுறும் போது அந்த யுத்தம் நடந்த முறையைக் கூறுவாய் எனத் தேவி கூறலும். 2 |

*[அ-கை] துக்கமற்ற மோட்சம் அளித்த அப் போரைக் கூற வேண்டும் என சில உதடு துடித்து நின்றன எனல்*

179 செயிரற மிக்கதி யங்குமு டற்றுயர் சிறிதுத
ணித்தெமதார்,
உயிரைய ளித்தம ருரையுமெ னச்சில வுதடுது டித்தனவே

| | |
|---|---|
| [இ-ள்] செயிர் அற மிக்க தியங்கும் உடல் துயர் | சர்வதுக்க நிவர்த்தி (பரமானந்தப் பிராப்தியான மோட்சம்அடையச்) சோர்ந்திருப்பவர்க்கு அத் துன்பம் |
| சிறிது தணித்து எமது ஆர் உயிரை அளித்த அமர் | கொஞ்சம் நீங்கி எங்களது நிறைந்த ஆத்ம சொருபத்தைக் கொடுத்த ஞானஞ்ஞான போர் முறையை, |

| | |
|---|---|
| உரையும் என சில உதடு துடித்தன | எடுத்துரைப்பாய்என்று சிற்சிலபேய்கள் வாய் உதடுதுடித்தவண்ணமாய் இருந்தன. 3 |

*[அ-கை] யுத்த களம் அறிந்து வந்தபேயை, பெரும் பேய் அறிந்ததை கூறு எனல்.*

180 அறுதிப டத்தெளி வளவுதெ ரித்திடு மடையவெ
ஞமுது பேய்,
யுறுதிப டத்தெளி வாலம ருற்றதை யுரையுமெ மக்கெனவே.

| | |
|---|---|
| [இ-ள்] அறுதி பட தெளி அளவு தெரிந்திடும் அடை எஞ | முடிவாக நானறிந்த மட்டும் கூறுவேன் யாவற்றையும் என்று (வநத பேய் கூற) |
| முது பேய் உறுதிபட தெளிவால், அமர் உற்றதை, எமக்கு உரையும் எனவே | நிச்சயமாய் அறிந்தபடிபெரியபேய், யுத்தம் நடந்ததை எங்களுக்கு உரைப்பாய் என்றவுடன். 4 |

*[அ-கை] ஞான வேந்தனல் அஞ்ஞானம் அழிந்தாலும் ஐயம் வேண்டாம் எனல்.*

181 ஐயப்பா டோகெடுவீ ரஞ்ஞனழிந் தமையின்னம்,
வையத்தே வந்ததுநான் மறைதேடும் பொருள்காணும்.

| | |
|---|---|
| [இ-ள்] ஐயப்பாடோ கெடுவீர் | சந்தேகமுற்றால் ஒருபோதும் உய்ய மாட்டீர், |
| அஞ்ஞன் அழிந்தமை | - அஞ்ஞானம் அழிந்து போனது, |
| இன்னம் வையத்தே வந்தது நான்மறைதேடும் பொருள் காணும் | மேலும் பூவுலகின் கண் குருவடிவமாய்எழுந்தருளியது. இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் எனும் நான்கு வேதங்களும்தேடிக்கொண்டிருக்கும் பரம்பொருள் என மதிப்பீர் 5 |

*[அ-கை] வேதாந்த சிரவணங் கேட்டலால் பெரும் பேறு உண்டாம் எனல்.*

**182** பசியும்போ முங்கள்பெரும் பாவமும்போ மிப்பத்துத்,
திசையும்போய் முடிந்தபடு களத்திெெரு தினைத்துணையில்

[இ-ள்] பசியும் போம் உங்கள் பெரும் பாவமும் போம் } உங்களுக்குப் பரமானந்தப் பிராப்தியும் சர்வ துக்க நிவர்த்தியும் உண்டாம்,

இப் பத்து திசையும் போய் முடிந்த படு களத்தில் ஒரு தினைத்துணையில் } இந்தப் பத்துத் திக்கையும் (கிழக்கு முதலிய நான்கு திசையும், ஈசானிய முதலியநான்குமூலையும்கீழ்மேலோடு நிறைந்து முடிந்ததான யுத்த வெற்றியை ஓர் தினையளவு விஷயத்தைக் கேட்பதனால் உண்டாம். 6

*[அ-கை] அஞ்ஞானழிந்த பின் எனது ஆத்ம சொருபத்தின் மகிமை கூறல்.*

**183** பல்லாயி ரத்தாண்டு பலகோடி யண்டத்தார்,
எல்லாரு முண்டாலு மித்தனையுங் குறையாது.

[இ-ள்] பலகோடிஅண்டத்தார் எல்லாரும் } கோடி கோடியாய் இருக்கின்ற சீவ கோடிகளான நால்வகை யோனி எழுவகைத் தோற்றம் 84-இலட்சம் வகை சீவர்களாலும்.

பல்லாயிரத்து ஆண்டு உண்டாலும் } பல ஆயிரங்கோடி வருடங்கள் எல்லாம் புசித்துப் பார்த்தாலும்.

இத்தனையும் குறையாது } சிறிது மாத்திரையும் குறையுந் தன்மையிலவாம். 7

*[அ-கை] ஞானத்தால் அடையப் பெற்ற மோட்ச ஆனந்தமானது, திரி மூர்த்திகள் முதலாக எல்லாரும் அநுபவித்தாலும் குறையாது எனல்.*

**184** பாருண்ட மாலுண்டென் படைப்பவனே டரனுண்டென்,
ஆருண்டெ ஞரொழிந்தெ னருகாது பெருகாது.

[இ-ள்] பார் உண்ட மால் உண்டு என் } உலகத்தைத்திருஅமுதுசெய்தருளிய மகாவிஷ்ணு புசித்தாலும் என்ன,

படைப்பவனோடு - சிருஷ்டிக்கின்ற பிரம்மாவுடன்,
அரன் உண்டு என் - சிவபெருமானும் சேர்ந்து புசித்தாலும் என்ன,
ஆர் உண்டு என் - வேறுஆர் புசித்தாலும் என்ன,
ஆர் ஒழிந்து என் - மற்றுஎவர் புசிக்கா விட்டாலும் என்ன,
அருகாது பெருகாது } அப்பேரானந்தங் குறைவதும் இல்லை அதிகமாவதும் இல்லை. 8

*[அ-கை] அஞ்ஞனழிந்தான் எனக் கூறியதைக் கேட்ட சிலர் ஓடி வந்து அவ்வாயை முத்தமிட்டு மகிழ்ந்து நின்றனர் எனர்.*

**185 ஒழிந்து போன காணு மஞ்ஞனும மென்று ரைக்கவே,**
**மொழிந்த வாயை யோடி வந்து முத்தமுண்டு நிற்குமே.**

[இ-ள்] அஞ்ஞன்நாமம் ஒழிந்துபோன காணும் என்று } அஞ்ஞனது பெயரும் அழிந்து போனது நீங்கள் இதை அறியுங்கள் என்று உரைத்த மாத்திரத்தில்,
மொழிந்த வாயை - அப்படி உரை செய்த திருவாயை,
ஓடி வந்து முத்தம் உண்டு நிற்கவே } வேகமாய் ஓடிவந்ததும் சிலபேய்கள் முத்தங்கொடுத்து நிற்கவும். 9

*[அ-கை] உள்ளதைக் கூறிய வுபநிடதங்களை புகழ்ந்தும் அதை யுண்மையல்ல என்றதை வெறுத்துக் கூறின எனல்.*

**186 தொல்லை யுள்ள பரிசு சொன்ன சுருதி யைகொண் டாடுமே**
**இல்லை யென்ற பேயின் வாயி னெரியை வையு மென்னுமே**

[இ-ள்] தொல்லைஉள்ள பரிசு சொன்ன சுருதியை கொண்டாடும் } அஞ்ஞான மதன்காரியங்களும்உண்மையில் பழைமையாய் இல்லை என்று கூறிய உபநிஷதங்களை மிகவும் மெச்சுவதாகும்,

இல்லை என்ற பேயின் வாயில்எரியை வையும் என்னும் — அஞ்ஞன் அழியவில்லை என்று உரைத்த பேயினது வாயினில் நெருப்பு இடுங்கள் எனக் கூறும். 10

*[அ-கை] மாயைஅவித்தையாகியஇரண்டுஉபாதிகளை யும், நமது குருநாதன் வந்து நாசஞ் செய்ததைக் கூற வேண்டும் எனல்.*

187 மாயை நாம மஞ்ஞ ஞம மாளு மாறு வந்துநம்,
நாய ஞர ழித்த வாறு நவிலு கென்ன நவிலுமே.

*[இ-ள்] மாயை நாமம்* - மாயையின் உடைய பெயரும்,

அஞ்ஞன் நாமம் - அஞ்ஞனுடைய பெயரும்,

மாளும் ஆறு வந்து நம் நாயனார் — அழிந்து போகும் படியாக எழுந்தருளிய நம்முடைய சற்குருநாதர்,

அழித்த ஆறு நவிலுக என்ன நவிலும் — நாசஞ்செய்தபிரகாரத்தைஉரைத்தருள வேண்டும் என்று உரைத்த மாத்திரத்தில் சொல்ல ஆரம்பித்தது. 11

*[அ-கை] கோடி வாய்கள் பெற்று சிருஷ்டி முதல் பிரளயம் வரை கோடாகோடி வேத சாகைகளால் சொன்னாலும் சொல்ல முடியாது எனல்,*

188 வாயொரு கோடி கொண்டு மலரோனு தித்த -
முதலாக விற்றை வரையா,
ஆயிரங் கோடி கோடி மறையோதி யோதி -
முடியாது காணு மளவே.

*[இ-ள்] ஒருகோடிவாய் கொண்டு மலரோன்* — ஒப்பற்ற கோடி கோடியான வாய்களைத் திறந்து பிரம்ம தேவரானவர்,

உதித்த முதல் ஆக இற்றை வரையா — சிருஷ்டியான காலந் தொடங்கி இது கால பரியந்தம்,

ஆயிரம் கோடி கோடி மறை ஓதி ஓதி — ஆயிரம் கோடி வருடங்களாக கோடி கோடி கோடியாக வேத வேதாந்தங்களால் சொல்லிச் சொல்லி,

காணும் அளவு முடியாது } இன்னமும் முடிவு கண்டறிவதற்கு முடியாததாகும். 12

*[அ-கை] கல்லால நீழலில் குருமூர்த்தமான பரமேஸ்வரனே, சனகாதிகளுக்குச் சங்கை யுத்தரமாகக் கூறும் போது, கர்மோபாசனத்திற்குப் பதிலளித்து ஞானபாகத்தைக் கூறும் போது மோனம் அடைந்தனர் எனல்.*

**189 ஞானம லாத பாத முரையாடி ஞான -**
**முரையாடு காலே யரனுர்,**
**மோனம லாது கூற முடியாம லியாது -**
**மொழியாரி தியாவர் மொழிவார்.**

[இ-ள்] ஞானம் அலாத பாதம் உரை ஆடி } ஞான காண்டத்தைத் தவிர கர்ம உபாசனைகளான பூர்வ பட்சங்களுக்கு எலாம் விடையளித்து,

ஞானம் உரை ஆடு காலே அரனுர் } ஞான காண்டமான உபநிஷதங்களின் சித்தாந்த பட்சத்தை மூன்றரைக் கோடி வருட காலம் தெட்சஞமூர்த்தமாயிருந்துஉபதேசித்தபோது

மோனம் அலாது கூற முடியாமல் } மௌனமாய் இருந்து சின் முத்திரையைப் பிடித்துக் காட்டினுரே யல்லாமல்,

இயாதும் மொழியார் இது யாவர் மொழிவார் } வாக்கால் எதுவும்கூருமல்இருந்தால் இவ் விஷயத்தை வேருர் தான் கூற வல்லவர் ஆவர். 13

*[அ-கை] சொல்வதைக் கேட்டுச் சொல்வதல்ல என் குருநாதனுல் வந்த சுவானுபவம் எனக் கருதீ; என்னுரையைப் பேய் உரை என்று இகழாதீர் எனல்.*

**190 வாயுரை யாடு மெல்லே யலநாய ஞரென் -**
**மனமே புகுந்த மொழியிப்,**
**பேயுரை யாடு கின்ற தெனநீர்கொ ளாது -**
**பெரிதாக வுன்னு மிதுவே.**

| | |
|---|---|
| [இ-ள்] வாய் உரை ஆடும் எல்லை அல இது வேபெரிதாக உன்னும் | வாக்கால் பேசிமுடிவு சொல்வதல்ல இதை மகத் விஷயமாகக் கருதுவீர் களாக. |
| நாயனுர் என் மனமே புகுந்த மொழி | எனது குருநாதன் உபதேசத்தால் சுவானுபவமாய் இருக்கின்ற வாக்கி யார்த்தங்களாகும், |
| இப்பேய் உரை ஆடு கின்றது என நீர் கொளாது | இப்பிசாசின் வாக்கால் வர்ணித்துக் கொண்டிருப்பது என நீங்கள் இழந்து விடாமல். (நினையுங்கள்) 14 |

* *

# 16. அஞ்ஞன் சரிதை.

191 நாயக ஞளு கோல வருள் மேவநீரு -
நலனேடு கேண்மி னெடுநாள்,
ஆயக ஞவென் மாயா புரமேவி நாளு -
மரசாளு மஞ்ஞ னளவே.

| | |
|---|---|
| [இ-ள்] நாயகன் ஆளு கோல அருள் மேவ நீரும் நலனேடு கேள் மின் | சற்குருநாதன் ஆட்கொள்ளுந் திருக் கோலத்தின் திருவருட்பிரகாசத்தை அடையும்பொருட்டுநீங்கள் எல்லோ ரும்நலன்உண்டாகும்படி கேளுங்கள் |
| நெடுநாள் ஆய கனு வென், மாயா புரம் மேவி நாளும் அரசு ஆளும் அஞ்ஞன்அளவு | நெடுங்காலமாய் இருக்கின்ற சொப் பனம் என்னும் பொய் ஊரான தூல தேகத்தை அடைந்து தினமும் அர சாட்சி செய்கின்றஅஞ்ஞவேந்தனது அளவு கூறும் போது. (இது குளகம்) 1 |

[அ-கை] நரன் என்று அபிமானித்த தேகமாகிய பட் டணத்திற்குத் தாரபுத்திராதிபந்துக்களே அகம்எனல்

192 மாயாபு ரத்துள்ள வலிகூறு மளவே -
மாதாபி தாமாது லன்ரூர மகவென்,
ருயாவ ருஞ்சுற்றம் வீழ்வோர்க ளேறற் -
காதார மேபோல வமிழ்விக்கு மகழே.

[இ-ள்] மாயா புரத்து உள்ளவலிகூறும்அளவு — பொய் ஊரான அஞ்ஞனது பட்டத்தினது வலிமையான அரணைச் சொல்லும் போது,

மாத பிதா மாதுலன் தாரம் மகவு என்று — தாய், தந்தை, தாய்மாமன், மனைவி மக்கள் எனக் கருதும் படியாக,

ஆயா வரும் சுற்றம் வீழ்வோர்கள், ஏறற்கு ஆதாரம் போல — (உள்ளபடி) ஆராயாமல் வருகின்ற பந்துக்களிடத்து ஆசை வைப்பவர்கள், நன்மை அடைவதற்கு, நல்ல சாதனம் போன்றிருந்து,

அமிழ்விக்கும் அகழ் — (முடிவில்) மூழ்குவிப்பதான அகழாய் இருப்பதாம். 2

*[அ-கை] ஆத்மாவை யான் என்பது அறியாமல் தேகாதிகளை யான் எனது என்னும் சங்கற்பமே கோட்டையாம்.*

193 இன்னனி யானின்ன னிவனென்று யர்த்தா -
தியானென்ன தென்கின்ற பதனஞ்செய் தீசன்,
றன்னலு மிதுபோக விடுமாறு முடியாச் -
சங்கற்ப மாமென்பர் சலியாத மதிளே.

[இ-ள்] இயான் இன்னன் இவன் இன்னவன் என்று உயர்த்தாது — தேகாதிகளுக்கு வேறயிருக்கும் ஆத்மா சச்சிதானந்தம் பஞ்ச கோசாபிமான சிதாபாசன், அசத்து சடதுக்க வடிவம் என்று அறிந்து தான் உயர் நிலை பெறுமல்,

இயான் என்னது என்கின்ற பதனம் செய்து — தேகத்தில் யான் என்றும், தார புத்திராதிகள் இடத்தில், எனது என்னும் அபிமானஞ் செய்து,

ஈசன் தன்னலும் இது போக விடுமாறு முடியா — பரமேஸ்வரனய் இருந்தாலும் இவ் அபிமானத்தை விட்டுநீங்கமுடியாத

சங்கற்பம்ஆம்சலியாத மதிள் என்பர் — மனே கற்பனையாய் அசைக்க முடியாத தான கோட்டை மதிள் எனக் கூறு நிற்பர். 3

*[அ-கை] ஞான மார்க்கத்திற் செல்லாமல் மறைக்கின்ற பாவத் தொழிலே படை வீட்டைச் சுற்றியுள்ள முட் புதர்க் காடு எனல்.*

194 ஓராத வாமூடி யுணர்வென்கு டார -
முள்ளூடொ றுத்தற்கு மொண்ணும லியாரும்,
பாராத பொல்லாவொ ழுக்காமி ழுக்கே -
படைவீடு சூழப்ப டுங்காடு தானே.

*[இ-ள்] உணர்வு என் குடாரம் ஓராத வா மூடிமுள்ஊடுஒறுத்தற் கும் ஒண்ணுமல்* — ஞானம் என்கின்ற கோடாலியை உணராதபடிமறைத்து, முள் போன் றிருப்பதின் மத்தியிற் சென்று அழித்தற்கு முடியாமல்,

இயாரும் பாராத - எப்படிப்பட்டவர்களும்ஆராய்ந்தறியாத

பொல்லா ஒழுக்காம் இழுக்கு படை வீடு சூழப்படும் காடு — பஞ்சமா பாதங்களாகிய குற்றங் களேபடைவீட்டினைச்சூழ்ந்திருக்குங் காடாய் இருப்பதாம். 4

*[அ-கை] சன்மார்க்க விரோதிகளைப் படை வீரராகக் கொண்டு, மூன்று லோகத்தையும் அரசாள்வது அஞ்ஞ வேந்தன் எனல்.*

195 அலகற்ற விபரீதம் விளைவிக்க வுரியா -
ரளவற்ற படைவீர ரவர்சுற்ற முடனே,
உலகத்தை முழுதாளு முணர்வற்ற கெடுவா -
னுருவத்தை யிருள்வேரு டுவமிக்க வரிதே.

*[இ-ள்] அலகு அற்ற விபரீதம் விளைவிக்க உரியார்* — எண்ணில்லாத வேறுபாடுகளை (பரம் பொருளை சீவேசுவர செகத்தாக)த் தோற்றுவிக்கத் தக்கவர்கள்,

அளவு அற்ற படை வீரர் - எண்ணில்லாத சேனு சூரர்களாம்

அவர் சுற்றமுடனே - அவர்களுடைய பந்துக்களோடு,

உலகத்தை முழுது ஆளும் - லோகத்தை எல்லாம் அரசு புரிகின்ற,

உணர்வு அற்ற கெடுவான் — உண்மை உணர்வில்லாத கெட்டவ னுடைய,

உருவத்தை உருமிக்க இருள் வேறொடு அரிது — வடிவத்தைத் உவமானங்கூற அந்தகாரத்திற்கு அன்னியமாய் இல்லை என்பதாம். 5

*[அ-கை] அஞ்ஞன் நினைத்த பொருள் அடைதற்கு கணத்தில் விடயங்களாகிய இரதத்தில் மனமாகிய குதிரையைப் பூட்டி அடைவன் எனல்.*

196 கருதுமொரு பொருளையொரு கணமளவி -
லடையவிகல் கடவுமவன் விடயரதமே,
வருதிசைகள் முழுதுமொரு நொடியளவில் -
வலிசுழல வருகமன மனதுரகமே,

[இ-ள்] கருதும் ஒரு பொருளை — தான் எண்ணும் ஒரு வஸ்துவை,
ஒரு கணம் அளவில் - ஒரு க்ஷண நேரத்தில்,
அடையஇகல்கடவும் - அடைவதற்குவலிமையாய்செலுத்தும்
அவன் விடய ரதம் - அஞ்ஞனது சப்தாதி விடயங்களாகிய இரதமும்,
வருதிசைகள்முழுதும் - வாராநின்றதிக்குகள்எல்லாவற்றிலும்
ஒரு நொடி அளவில் - ஒரு நொடிப் போதில்,
வலி சுழல வரு கமன மன துரகம் — வலிமை சுழலும் படி வேகமாய்ச் செல்லா நின்ற மனமாகிய குதிரையுமாம். 6

*[அ-கை]வேதங்கள்போற்றும்இறைவனைப்போற்றுவது மட்டுமல்ல, மும்மூர்த்திகளாதி தெய்வங்கள் என்பது முக்காலத்தும் இல்லை என்பது அஞ்ஞனது ஆணையாம்.*

197 பரனொளிசெ யருமறைகள் பகருமல -
ரடியிணைகள் பரவநினை கிலர்களெனவோ,
அரனொடரி யயனெனு மிலதகில -
மடையவெறு மஞ்ஞகுலபதி யாணையே.

[இ-ள்] பரன்ஒளிசெய் அரு மறைகள் பகரும் மலர் அடியிணைகள் — சிரத்திற் பரமாத்மா விளங்குவதும் அறிதற்கு அரியதுமான வேதவேதாந்தங்களால் போற்று கின்ற தாமரை மலர் போன்ற திருவடிகளை

| | |
|---|---|
| பரவ நினைகிலர்கள் எனவோ | வாழ்த்தி வணங்க மாட்டார்கள் என்பது மாத்திரமா! |
| அரனொடு அரி அயன் இலது எனும் | சிவபெருமானோடு விஷ்ணு பிரம்மா ஆகிய திரிமூர்த்திகளும் இல்லை எனும் படி, |
| அகிலம் அடைய வெறும் அஞ்ஞகுலபதி ஆணையே | சர்வ லோகங்களுக்கும் சூனிய ரூப ஞன அஞ்ஞ வேந்தனுடைய கட்டளையாம். 7 |

*[அ-கை] நன்றி மறத்தல், தீத்தொழில் புரிதல், பிறர் குற்றம் காண்பதே சுதர்மம் எனல்.*

**198** அந்தக னுகுஞ் செய்நன்றிக் - காகாப் பழிநல் வழியளவில்,
இந்திர னுகும் பிறரொருவ - ரேதங் காணுமி டத்திலே.

| | |
|---|---|
| [இ-ள்] செய் நன்றிக்கு அந்தகன் ஆகும் | பிறர் செய்த நன்மைக்கு பிறவிக்குருடன் போல் அறியாதவனுகும், |
| ஆகாப்பழி நல்வழி | - பஞ்சமா பாதகங்களைச் சுதர்மமாகச் செய்வன், |
| பிறர் ஒருவர் ஏதம் காணும் இடத்தில் அளவு இல் இந்திரன் ஆகும் | அன்னியருடைய குற்றங்களை கண்டு அறிவதில் எண்ணற்ற கண்களுடைய இந்திரராக காணப்படுவான். 8 |

*[அ-கை] தேகத்தையும் பெண்களுரையும் உண்மை எனவும், தெய்வத்தையும், நல்லோர் வார்த்தையும் பொய் என்று இருப்பன் எனல்.*

199 மெய்யென் றிருப்பது டம்பினையும் - விளங்கிழை யார்தம் வார்த்தையுமே,
பொய்யென் றிருபப் தீனைசயும் - புரையற் ரோர்கள் புகல்வதுமே.

| | |
|---|---|
| [இ-ள்] மெய்யென்று இருப்பது | உண்மை என்று நினைந்திருப்பது, |
| உடம்பினையும், இழையார் தம்விளங்கு வார்த்தையும் | தேகத்தையும், பிரகாசிக்கும் ஆபரணங்களுடைய பெண்களது வாக்குகளையும், |

பொய்யென்று இருப்பது - பொய் என்பதாக நினைந்திருப்பது

ஈசனையும், புரை அற்றோர்கள் புகழ்வதும் — பரமேஸ்வரனையும், குற்றமற்ற பெரியோர்கள் சொல்லும் உரைகளையே.

9

*[அ-கை] நல்லது பேச நாக்கு இல்லை, தீயது பேச நாக்குகள் அனந்தம் எனல்.*

**200** நசையு ரைக்கிலவ னூம னுகுமே,
வசையு ரைக்கிலவன் வாய்கோடி யாகுமே.

[இ-ள்] நசை உரைக்கில் அவன் நா ஊமன் ஆகும் — ஒழுக்கத்தை எடுத்துப் பேசினால் அவனது வாக்கானது (ஒன்றும்) ஊமையாய் விடும்,

வசைஉரைக்கில்அவன் வாய் கோடி ஆகும் — குற்றத்தை எடுத்துப் பேசினால் அவனது வாக்கானது(ஒன்று)கோடியாக பேச முற்படும்.

10

*[அ-கை] ஈவதற்குக் கையில்லை: ஏற்பதற்குக் கை அனந்தம் எனல்.*

**201** எவ்வத் தேற்பவர்க் கீயக்கை யில்லனே,
கௌவத் தேடினொ ருகோடி கையனே.

[இ-ள்] எவ்வத்து ஏற்பவர்க்கு - யாதொரு வஸ்துவை யாசிப்பவர்களுக்கு,

ஈயக்கை இல்லனே - கொடுக்குங் கரம் அற்றவன் ஆகின்றான்,

கௌவத் தேடின் ஒரு கோடி கையன் — யாருங் கொடுக்கும் படியாய் இருந்தால் வாங்குவதற்கு, கோடி கோடியாய் கைகள் உடையன்.

11

*[அ-கை] செல்வத்தையும் யௌவனத்தையும் நிலை என்று இருப்பவன் எனல்.*

**202** இளமை யும்மிடும் பைக்கிட மாகிய,
வளமை யும்பெரி தென்றேம திக்குமே.

[இ-ள்] இளமையும் இடும்பைக்கு இடம் ஆகிய வளமையும் } யௌவன பருவத்தையும், துன்பத்துக்கு ஸ்தானமாய் இருக்கின்ற செல்வத்தையும்,
பெரிது என்று மதிக்கும் - பெரிதாகவே எண்ணியிருப்பான் 12

*[அ-கை] நிழலும், சக்கரமும் போன்ற பொய் வாழ்வை உண்மை என்று இருப்பவன் எனல்.*

**203** சாயை போலுஞ்ச கட்டுருள் போலுமா,
மாய வாழ்க்கைநி லையாய்ம திக்குமே.

[இ-ள்] சாயை போலும் சகட்டுஉருள் போலும் ஆம் } நிழல் போன்றதும், சக்கரம் உருளுவதும் போன்றதாகிய,
மாய வாழ்க்கை நிலையாய் மதிக்கும் } பொய்யாகியவாழ்நாளை நிலைபெற்றதாக நினைத்துக் கொண்டிருக்கும். 13

*[அ-கை] மின்னல் போல் அழியும் உடம்பை நிலை என்று எண்ணுவன் எனல்.*

**204** மின்ற னெல்லைவி தியற்ற யாக்கைகொண்,
டென்று மிங்கிருப் பார்போலி ருக்குமே,

[இ-ள்] மின் தன் எல்லை விதி அற்ற ஆக்கை கொண்டு } மின்னலுக்குச்சமமான நிலையில்லாத இத் தேகத்தோடு கூடி,
என்றும் இங்கு இருப்பர் போல் இருக்கும் } எப்பொழுதும் இவ் வுலகத்திலே சாஸ்வதமாய் இருப்பவர் போன்று இருப்பன். 14

*[அ-கை] புண்ணியத்தையும், புகழையுங் குறைப்பன். புறங்கூறலும், புன்தொழிலும் பெருக்குவன் எனல்.*

**205** அறஞ்சு ருக்கும வலம்பெ ருக்குமே,
புறம்பெ ருக்கும்பு கழுஞ்சு ருக்குமே.

[இ-ள்] அறம் சுருக்கும் - தர்மங்கள் அனைத்தையும் குறைப்பர்

அவலம் பெருக்கும் - பாவ கர்மங்களைக் கூட்டிச் செய்வர்,
புறம் பெருக்கும் - புறங்கூறுவதில் அதிகமாய் இருப்பர்,
புகழும் சுருக்கும் - புகழை இழந்து விடுவர். 15

*[அ-கை] புண்ணியத்தால் சொர்க்கத்திற்கும், பாவத்தால் நரகத்திற்கும், பாவபுண்ணிய கலப்பால் மனித லோகத்திற்குமாக ஊஞ்சலாடுவன் எனல்.*

**206** நிரயத் தோடுநெ டுவான்மு கட்டொடுந்,
தரையத் தோடுந்த னியூச லாடுமே.

[இ-ள்] நிரயத்தோடும் - பாவகர்மத்தால்நரகலோகத்திற்கும்
நெடுவான் முகட்டொடும் - காமிய புண்ணியத்தால் தேவ லோகத்திற்கும்,
தரையத்தோடும் தனி ஊசல் ஆடும் } பாவ புண்ணிய கலப்பால் மண்ணுலகத்தில் மனிதராதி பிறப்பும் ஆக மூவுலத்திலும் ஊசல் ஆடுவன். 16

*[அ-கை] கற்பதும், உபதேசிப்பதும், உணவுக்கு அல்லாமல் மோட்சம் அடைவதற்கு அல்ல எனல்.*

**207** ஓதலு முணர்த்தலு முணவு சுட்டியே,
சாதலும் பிறத்தலுந் தவிர்க்க வல்லவே.

[இ-ள்] ஓதலும் - பிறரிடத்தில் கற்றலும், கேட்டலும்
உணர்த்தலும் - பிறர் உணர உபதேசஞ் செய்தலும்,
உணவு சுட்டியே - உணவு உண்பதைக் கருதியேயாம்,
சாதலும் பிறத்தலும் தவிர்க்க அல்ல } பிறப்பு இறப்பு இற்ற பேரானந்தத்தை யடைதற் பொருட்டு அல்ல என்பதாம். 17

*[அ-கை] அஞ்ஞனது பிறப்பொழியாதிருக்க துற்புத்தியாகிய மந்திரி காரணம் எனல்.*

**208** இந்த மன்னனுக் கென்றும் பவங்கொள,
வந்த துன்மதி மந்திரி யாகுமே.

[இ-ள்] இந்த மன்னனுக்கு - இவ் வஞ்ஞ வேந்தனுக்கு,

என்றும் பவம் கொள - எப்போதும் பிறவி நீங்காது,

வந்த துன்மதி மந்திரி ஆகும் } வரச் செய்யும் துர்புத்தியாகிய அமைச்சனை உடையவனுகும். 18

*[அ-கை] ஆண்களால் செய்யும் தவமும் இல்லை, பெண்களால் காக்கும் கற்பும் இல்லை எனல்.*

**209** அற்ப மில்லைய ருந்தவ மாதரார்,
கற்பு மில்லைக ழிந்தாளெ ழுக்கமே.

[இ-ள்] அரும் தவம் அற்பம் இல்லை } அருமையான தவமானது (ஆண்களிடம்) சிறிதும் இல்லை,

மாதரார்கற்பும்இல்லை - பெண்கள் இடத்தில் கற்பு என்பதும் இல்லையாம்.

ஒழுக்கம்கழிந்தான்-ஆசாரம்அற்றஅஞ்ஞவேந்தன் உரைப்பன் 19

*[அ-கை] தேகமே தான் என்று இருக்கின்ற அஞ்ஞனது ஆட்சி இவ்விதம் எனல்.*

**210** ஆக மேவடி வாகிய மைந்துள,
மூக னீதிமு டியாமொ ழியவே.

[இ-ள்] ஆகமே வடிவு ஆகி அமைந்து உள மூகன் } தேகமே தனது சொருபமாய்க் கருதி இருக்கின்ற அஞ்ஞ வேந்தனுடைய,

நீதி முடியா மொழியவே } முறைமை நிலை பெற்றிருப்பதை கூறிய மாத்திரத்தில். 20

*[அ-கை] மூவுலகத்தும் முறையற்றதை முதல்வற்கு உரைப்பார் இல்லை எனல்,*

**211** முறைமை யற்றமை மூவுல கத்தினு,
மிறைய வர்க்கறி விப்பாரு மில்லையே.

[இ-ள்]மூவுலகத்தினும் முறைமை அற்றமை } சுவர்க்கம், மத்திம, பாதாளம் என்னும் திரிலோகங்களிலும் அஞ்ஞனால் ஒழுக்கம் அழிந்திருப்பதை,

இறையவர்க்கு அறி விப்பாரும் இல்லையே } பரமேஸ்வரனுக்கு விண்ணப்பம் செய்பவர்கள் ஒருவராயினும் இல்லையாம். 21

# 17. திரு அவதாரம்.

*[அ-கை] நரர் படும் நலந்தீங்குகளை நாதனே அறிவன் எனல்.*

**212** உண்மை யன்றியு லகத்து ளோர்படுந்,
தன்மை தம்பிரான் றனேய றியுமே.

[இ-ள்] உண்மை அன்றி உலகத்து உளோர் படும் தன்மை } எதார்த்தமின்றி உலகத்திலுள்ள அதிகாரிகள் அநுபவிக்குந் துன்பம் எல்லாம்,

தம்பிரான் தானே அறியும் – தலைவனை பரமேஸ்வரன் இயல்பாய் அறிபவனாகும், 1

*[அ-கை] அறம் அழிந்து மறம் பெருத்ததை, செகத் காரணரான சிவப்பிரகாசர் திருவுளம்பற்றியது எனல்.*

**213** அவப்பிர காசவ வலம்பெ ருத்தமை,
சிவப்பிர காசன்றி ருவுளஞ் சென்றதே.

[இ-ள்] அவப்பிரகாச அவலம் பெருத்தமை } பாவச் செயல் விரிந்து அனுசாரம் மிகுந்திருத்தலை,

சிவப்பிரகாசன் திரு உளம் சென்றது } பரமேஸ்வரர் (தமது) திருவுளத்தில் உணர்வதானார். 2

*[அ-கை] அஞ்ஞனுக்கு அருள் புரிய திருவருளே வந்தது எனல்.*

**214** வன்பே யனையான்மேல் வரமெய்ப் பரனுக்கு,
தன்பே ருண்முற்றுந் தானேர் வடிவாயே.

| | |
|---|---|
| [இ-ள்] வன்பேய் அனை யான்மேல் வரமெய்ப் பரனுக்கு | கொடிய பேய்க்குச் சமனான அஞ்ஞ வேந்தனிடத்தில் மேலான பரம் பொருள் |
| தன்பேர்அருள்முற்றும் தான் ஓர் வடிவாய் | தனது பெருங்கருணையால் பரிபூரண மானதானே ஒப்பற்றதிருவுருவமாய் |

*[அ-கை] இறைவன் அடியார்களும் உடன் அவதரித் தனர் எனல்.*

**215** ஆரா வமிர்தின்சே வடியைப் பிரியாவச்,
சீரா ரடியாருந் திருமே னிகள்கொண்டே.

| | |
|---|---|
| [இ-ள்] ஆரா அமிர் தின் சேவடியை | தெவிட்டா அமிர்தமாகிய குருநாதன் திருவடிகளை, |
| பிரியா அச்சீர் ஆர்அடி யாரும் திருமேனிகள் கொண்டு | விட்டு நீங்காது அந்தச் சிறப்புற்ற அடியார்களும் அழகிய திருவுருவந் தாங்கி. 4 |

*[அ-கை] அவதாரத்தின் மகிமையை வேதங்களே விளம்பாதெனில், வேறு எவர் கூற வல்லார் எனல்.*

**216** குருநா யகனார்தங் கோலங் கூறப்பண்,
டருநான் மறைகாணு தறிவா ரினியாரே.

| | |
|---|---|
| [இ-ள்] குருநாயகனார் தம் கோலம் | சற்குருநாதருடைய அழகிய சொரு பத்தை, |
| கூற பண்டு அருநான மறை காணாது | சொல்வதற்கு பழைமையும் அறிதற் கரியதுமான வேத வேதாந்தங்களும் அறியாது எனின், |
| இனி யார் அறிவார் - | இதற்கு மேல் அறிபவர் யாவர். 5 |

*[அ-கை] பிறவு ஒழித்தற்குத் தத்துவ ஞானமே உபாயம் எனல்.*

**217** பிறவிப் பகைவெல்வார் பிறிதற் றொருநானு,
யறிவுற் றவரென்றே யறையுங் கழலிட்டே.

[இ-ள்] பிறவிப் பகை வெல்வார் - பிறப்பாகிய சத்துருவை நாசஞ் செய்பவர்கள்,

பிறிது அற்று ஒரு தானய் - இரண்டற்ற அத்வைத சொருப மாய்,

அறிவு உற்றவர் என்று அறையும் கழல் இட்டு } தன்னையறிந்த தத்துவ ஞானத்தை உடையவர்கள் என்பதாக திருவடி தீட்சை செய்து திருவாய்மலர்வர் 6

[அ-கை] ஆபரண முதலியன யாவும் சொருபமே என்று அருளல்.

218 ஞான மேதிரு வாபர ணங்களு -
ஞான மேதிரு மாலையுஞ் சாந்தமு,
ஞான மேதிரு வானவக் கோலமு -
ஞான மேயருண் மேனியு ஞானமே.

[இ-ள்] ஞானமே திரு ஆபரணங்களும் } சொருப ஞானமே அழகிய அணிகலங்களாம்,

ஞானமே திருமாலையும் சாந்தமும் } அறிவே அழகிய புட்பமாலைகளும் சந்தனுதிகளுமாம்,

ஞானமே திரு ஆன அக்கோலம் } அறிவே அழகிய பல வேடங்களாம்,

ஞானமே அருள் ஞானமே மேனியும் } அறிவேஅவர் அநுக்கிரகமும் அறிவே அவர் அழகிய திருமேனியுமாம். 7

219 ஞான மேயுடை யாடையுங் கூரிய -
ஞான மேயுடை வாளுந லம்புனே,
ஞான மேவரு மூர்த்தியு மியாவையு -
ஞான மேபிற வுஞ்சில நல்கியே.

[இ-ள்] ஞானமே உடை ஆடையும் } அறிவே கீழ்வஸ்திரமும் மேல் வஸ்திரமும்,

கூறிய ஞானமே உடைவாளும் - தகுந்த ஞானமே வாள் ஆயுதமும்,

நலம்புனே ஞானமே வரு மூர்த்தியும் } நன்மையோடு உற்ற அறிவே வாரா நின்ற வடிவமும்,

இயாவையும் ஞானமே - மற்றெல்லாமும் அறிவே யாம்,
பிறவும் சில நல்கி - வேருய் இருக்கின்ற சிலவற்றை கொடுத்து. 8

*[அ-கை] சர்வ லோகத்தையுங் காக்குந் தனது வெற்றிக் குடையில் அமர்ந்தனர் எனல்.*

220 **கமல நான்முக ஞர்தங்க ருத்தையுங் -**
**கடந்து லோகம டங்கக்க விப்பதோர்,**
**விமல மாகிவி ரிந்தொடுங் காமலே -**
**விளங்கு தண்கொற்ற வெண்குடை காப்பவே.**

| | |
|---|---|
| [இ-ள்] கமல நான் முகனுர் கருத்தையும் கடந்து லோகம் அடங்கக் கவிப்பது ஓர் விமலம் ஆகி | ஆயிரத்து எட்டு இதழோடு உள்ள தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரம்ம தேவருடைய சிந்தனைக்கும் எட்டாததும் சர்வ லோகங்களையும் தன்னிழலில் வைப்பதும் ஒப்பற்று பரிசுத்தமாய், |
| விரிந்து ஒடுங்காமல் - | விரிதலும் குவிதலும் இல்லாததாய் |
| விளங்கு தன் கொற்ற வெண்குடைகாப்பவே | பிரகாசிக்கின்றகுளிர்ந்தவெண்ணிற வெற்றிக் குடையே காவலாய் இருப்பதாம். 9 |

*[அ-கை] பிரம்மா முதலிய தேவர்கள் தம் தம் வாகனங்களில வந்து தரிசித்தனர் எனல்.*

221 **பூவி லேறியும் போதக மேறியும் -**
**புள்ளி லேறியும் போர்மயி லேறியுஞ்,**
**சேவி லேறியும் தேரினி லேறியுஞ்,**
**செய்ய பொன்னடி சேரச்சே விக்கவே.**

| | |
|---|---|
| [இ-ள்] பூவில் ஏறியும் போதகம் ஏறியும் | தாமரை மலர் மேலும் யானையின் மேலும் அமர்ந்தும், |
| புள்ளில் ஏறியும் போர் மயில் ஏறியும் | கருட வாகத்தின் மேலும், போர் செயும் சிகிவாகனத்தும் அமர்ந்தும், |
| சேவில் ஏறியும் தேரினில் ஏறியும் | இடப வாகனத்தின் மேலும் இரதத்தின் மேலும் அமர்ந்ததும், |

செய்ய பொன்னடி சேர சேவிக்க } சிவந்த திருவடிகளை ஒன்று சேர்ந்து வழிபட வந்தனர். 10

*[அ-கை] தேவர்க்கு அரிதாய தேவன், இவ் அஞ்ஞனை ஓர் பொருளாகக் கருதி அவனியில் வந்தனர் எனல்.*

**222 உம்பர் தானவர்க் கரிய தாணுவிவ் -**
**வுணர்வி லானையொன் றுக வுன்னியே,**
**தம்பி ரானருட் கருணை யாலையன் -**
**றானும் வந்தனன் றரணி தன்னிலே.**

[இ-ள்] உம்பர் தான வர்க்கும் அரிய தாணு } தேவர்களும் அசுரர்களும் காண்பதற்கரிய சிவபெருமானே,
இவ் வுணர்வு இலானை ஒன்று ஆக உன்னியே } இந்த அஞ்ஞ புருஷனையும் ஒரு பொருளாக மதித்து,
தம்பிரான் அருள் கரு ணையால்ஐயன் தானும் } அக் கடவுள் அருள் புரிய கிருபையி னால் சற்குரு நாதனாக,
தரணி தன்னிலே வந்தனன் } மண்ணுலகின் கண்ணோர் வடிவமாய் எழுந்தருளினார். 11

*[அ-கை] தேவர்கள் தேடப் பெறாத தேவன் மண்ணோர் வாழ்த்தும்படி அமர்ந்தனன் எனல்.*

**223 மம்ம ரங்குழந் தமரர் தேடவும் -**
**மண்ணின் வந்ததா ளிணைவ ழுத்தியே,**
**எம்ம ருங்குநின் றடியர் போற்றவே -**
**யெம்பி ரானிருந் தருளு மெல்லையே.**

[இ-ள்] மம்மர் அங்கு உழந்து அமரர் தேட } மயக்கமாய் அவ்விடத்து வருத்த முற்று தேவர்கள் தேடிக் கொண்டு இருக்க,
இம்மண்ணில் வந்த தாள்இணை வழுத்தியே } இப் பூவுலகத்தில் எழுந்தருளிய இரு திருவடிகளைப் போற்றி செய்து,
எம்மருங்கும் நின்று அடியார் போற்ற } எல்லா திக்குகளில் இருந்து அடியவர் கள் வணங்கவும், (இவ்வண்ணம்)
எம்பிரான் இருந்து அருள் எல்லை } எமது தலைவனிருக்கின்ற சமயத்தில். 12

## 18. காமாதி படைச் செருக்கு.

*[அ-கை] புசித்தல் புணரல் தொழிலாயுள்ள அஞ்ஞன் இடத்தில் ஒற்றர் அடைந்தனர் எனல்.*

**224** புணர்விஞே டருந்த லென்றும் போற்றுத லன்றி வேருேர்,
உணர்வறு மரசன் றன்பா லொற்றரு மோடிச் சென்றே.

| | |
|---|---|
| [இ-ள்] புனர்விஞேடு அருந்தல் என்றும் போற்றுதல் அன்றி | பெண்களோடு சேர்ந்திருப்பதுடன் கிடைத்ததைஎல்லாம்புசிப்பதையும் எப்பொழுதும் வளர்ப்பதே அல்லாமல், |
| வேறு ஓர் உணர்வு அறும் அரசன் தன்பால் ஒற்றரும் ஓடிச் சென்றி | மற்ருேர்வித உணர்ச்சியும் இன்றிய அஞ்ஞனுடைய சன்னிதியில் தூதர்கள் விரைவிற் போய் (குளகம்) 1 |

*[அ-கை] கடவுளர்க்குங் கருத முடியாத வேதப் பொருளானது மனிதனுக வருவன் என்பது உண்மை ஆயிற்று எனல்.*

**225** மதித்தல்விண் ணவர்க்கு மொண்ணு மறைப்பொருள் மநுட ஞய்வந்,
துதித்தன னென்னும் வார்த்தை யுண்டென வுரைத்த போதே.

| | |
|---|---|
| [இ-ள்] விண்ணவர்க்கும்மதித்தல் ஒண்ணு | பிரம்மாதிதேவர்களாலும்உருவமா அருவமா உருவாருவமா கர்த்தாவா அகர்த்தாவா என அறிய முடியாத, |

மறைப் பொருள் - வேதார்த்தமான உண்மைப் பொருளே,

| | |
|---|---|
| மநுடன் ஆய் வந்து உதித்தனன் என்னும் | மனித தேகந் தாங்கி புலோகத்தின் கண் வந்து திரு அவதாரஞ் செய்தனர் எனக் கூறும், |

வார்த்தை உண்டு - வாக்கியங் கேட்டிருக்கின்ருேம்,
என உரைத்த போது - என்பதாகக் கூறுகின்ற சமயத்தில். 2

*[அ-கை] அஞ்ஞனை வெல்ல பரமேஸ்வரனே மனிதனாக வந்தனன் என்னில் இது பொருந்துமா எனல்.*

**226** இனிதினால் வாழு மென்னை யீசனென் றொருவன் வெல்ல,
மனிதனாய் வந்தா னென்னும் வார்த்தையும் வார்த்தையாமே

[இ-ள்] இனிதினால் வாழும் என்னை - சுகமாகவே வாழ்கின்ற அஞ்ஞானாய என்னை,
ஈசன் என்று ஒருவன் - பரமேஸ்வரன் என்று ஒருவனை,
வெல்ல மனிதன் ஆய் - வெல்வதற்கு மானுட வடிவமாய்,
வந்தான் என்னும் வார்த்தையும் வார்த்தை ஆம் } வந்திருக்கின்றான் என்று பேசுகின்ற பேச்சும் ஒரு பேச்சுஆகுமா? 3

*[அ-கை] தனக்கு அன்னியமாய் ஒன்றும் இல்லை என்ற நீங்களே மனிதனாகவந்ததுஎன்றீர் என்ற அஞ்ஞனைத் தூதர்கள். இன்றைய நிலை அப்படி இல்லை எனல்.*

227 ஒன்றில்லை யெனுநீரு மொன்றுண்டு -
போலேயு ரைத்தீர்க ளெனவொற்றர்தாம்,
இன்றில்லை யென்னாதி ரோமிந்த -
உலகத்தி னியல்கூறி னோமென்னவே.

[இ-ள்] ஒன்று இல்லை எனும் நீரும் } தேகத்திற்கு அன்னியமாகஓர் வஸ்து இல்லை என்று உரைத்த நீங்களும்,
ஒன்று உண்டு போல் - ஒரு பொருள் விரோதமாக வந்திருக்கிறது என்று,
உரைத்தீர்கள் என - கூறினீர்கள் என்ற அஞ்ஞனை,
ஒற்றர் இன்று இல்லை என்னாது இரோம் } தூதர்கள்இக்காலத்தில்ஓர் பொருள் இருக்கின்றது என்று சொல்லாமல் இருக்க மாட்டோம்,
இந்த உலகத்தின்இயல் கூறினோம் என்ன } இப்போதுள்ள உலக இயற்கையைத் தங்களிடத்து தெரிவித்தோம் என்று உரைக்க. 4

*[அ-கை] சைவ முதலிய சமயங்களைக் கேட்டால் தெரியு மென வினவ அவர்கள் முன்னோர்கள் சொன்னதைச் சொன்னோம் எனல்.*

**228 அளவில்லை சமயங்க ளவரேயு -**
**ரைப்பார்க ளழையென்ன வவர்வந்துமெய்,**
**உளவில்லை வேறென்று மறியோமு -**
**ரைப்பார்க ளுரையோதி னோமென்னவே.**

*[இ-ள்] சமயங்கள் அளவு இல்லை* - சைவ முதலிய மார்க்கங்கள் மிகுந்திருக்கின்றன,
அவரே உரைப்பார்கள் - அம்மத வாதியர்களே கூறுவார்கள்
அழை என்ன - அழைப்பீர்கள் என்றவுடன்,
அவர் வந்து மெய் உளவு இல்லை - அம்மத வாதியர் வந்து இவ் ஒற்றர்கள் சொன்னது உண்மை அல்ல,
வேறு ஒன்றும் அறியோம் - பிறிதொன்று வந்ததாக நாங்கள் அறியோம்,
உரைப்பார்கள் உரை ஓதினோம் என்ன - சொன்னவர்களிடங் கேட்டு நாம் இதைச் சொன்னோம் என்று உரைக்கவும். 5

*[அ-கை] காமன் கூறல்.*

**229 சொன்னார்கள் சொன்னத்தை மெய்யென்று -**
**றுரைத்தார்கள் சுற்றஞ்சி றைச்செய்யவே,**
**என்னாதன் முன்னேவர் பொருளாக -**
**விக்காவ லெனமார னிகல்கூறுமே.**

*[இ-ள்] சொன்னார்கள் சொன்னத்தை* - உலகோர் உரைத்ததைக் கேட்டு,
மெய் என்று உரைத்தார்கள் - உண்மை என்று தூதர்கள் கூறினர்,
சுற்றம்சிறைசெய்யவே - (அவர்களின்) பந்துக்களைச் சிறையில் வைக்கவும்,
என் நாதன் முன் ஏவர் பொருள் ஆக - என் தலைவனை அஞ்ஞ வேந்தனது முன்னர் எவரேனும்ஒருபொருளாக வர முடியுமா?

| | |
|---|---|
| இக்காவல் என மாறன் இகல் கூறும் | இப்படிப் பட்ட காவலுக்குள் என்பதாக மன்மதன் தன்னுடைய வீரப் பிரதாபத்தைக் கூறலானுன். 6 |

*[அ-கை] காமன்: மனி தரில் எனை வெல்வோர் யாவர்? மும் மூர்த்திகளும் தப்பிப் பிழைக்க ஓடினர் எனல்.*

230 மண்ணோரி னெனையேவர் மலைவார்கள் -
முத்தேவர் மாருகி யானபடிபோய்,
விண்ணேறி ளுெருவன் மலையேறி -
ளுெருவன் வேலைக்குளா னுெருவனே.

| | |
|---|---|
| [இ-ள்] மண்ணோரில் எனைஏவர்மலைவார்கள் | பூமியில் உள்ள மனிதர்களில் என்னை யாவர் வெல்வார்கள், |
| முத்தேவர் மாறு ஆகி ஆனபடி போய் | திரிமூர்த்திகளான அயனரியரன் என்ற மூவரும் வேறுபாடுற்று அவரவர்க்குஉரியஸ்தானமாய்ச்சென்று |

ஒருவன் விண் ஏறினன் - பிரம்மா சத்திய லோகத்தையும்,
ஒருவன் மலை ஏறினன் - சிவபெருமான் வெள்ளி மலையையும்,
ஒருவன் வேலைக்கு உளான் – விஷ்ணு திருப்பாற் கடலும்
அடைந்திருக்கின்றனர், 7

*[அ-கை] எனது புட்ப பாணங்கள் பட்டு சிவ பெருமானுடைய இடது பாகம் இன்னும் கறுத்திருப்பது எனல்.*

231 பண்டொர் நாண்மலர்ப் பட்டின்று மக்கறைக்,
கண்டர் மேனிசெம் பாகங்க றுத்ததே.

| | |
|---|---|
| [இ-ள்] பண்டுஓர்நாள் மலர் பட்டு இன்றும் அக்கறை | முன்னெருகால் எனதுபுட்பபாணங்கள் பட்டதினல் இப்பவும் அந்நிறமே |
| கண்டர் மேனி செம் பாகம் கறுத்தது | திருநீலகண்டர் திருவுருவம் செந்நிறமான இடது பாகமானது நீல நிறமானது. 8 |

*[அ-கை] கடல் சூழ்ந்த காசினியோர் கடப்பரோ காமர்!*

*வண்ணன் திருமார்பில் கமலையை வைக்கும் படி செய்தேன் எனல்,*

**232** வேலை ஞாலத்தவ ரென்னை மீறவோ,
மாலின் மார்பின்வ டுக்கண்டு வைத்துமே.

[இ-ள்] வேலை ஞாலத்தவர் — கடல் சூழும் பூலோகத்தில் உள்ள மனிதர்கள்,
என்னை மீரவோ - என்து வலியை கடப்பார்களா,
மாலின் மார்பின் - திருமாலின் திருமார்பில்,
வடுக் கண்டு வைத்தும் — இலட்சுமி தேவியைப் பார்த்துக் கொண்டிருக்கும் படியாக வைத்து இருக்கிறேன். 9

*[அ-கை] பிரம்மாவும் என்னை வெல்ல மாட்டாமல் பெற்ற பெண்ணைக் கூடத் தொடர்ந்தனர் எனல்.*

**233** விதியு மென்றன்வி தியினை வெல்லுமோ,
மதிய ழிந்தும கட்கும யங்குமே,

[இ-ள்] விதியும் என்தன் விதியினை — யாவர்க்கும் விதிக்கும் பிரம்மாவும் மதனுய வென்னியமத்தைச்செயிக்க முடியுமோ?
மதி அழிந்து மகட்கு மயங்கும் — திலோர்த்தமையை சிருஷ்டித்தவர் காமத்தால் மனம் கெட்டு மகள் என்பதை மறந்து சேர நினைந்து ஓடினர் என்பதாம். 10

*[அ-கை] அருவக் கடவுளைத் தவிர உருவமுடன் வரும் யாவராயினும் எனை வெல்ல மாட்டார் எனல்.*

234 மலரோனு மாலு மதிசூடு வானும் -
வடிவோடு கூடி வருமி யாருமோர்,
அலரோடு போத மழியாவொ ரோர்வு -
மணுகாமல் மாத ரடிதாழ்வரே.

[இ-ள்] மலரோனும் மாலும் — தாமரை மலரோனுய பிரம்மாவும் விஷ்ணுவும்,

மதிசூடு வானும் - சந்திரசேகரனாகிய சிவபெருமானும்,
வடிவோடு கூடிவரும் யாரும் } ஒருருவமாய் வருமவர்யாராய் இருந்தாலும்,
ஓர் அலரோடு போதம் அழியா } முல்லை, அசோகு, வனசம், மா, நீலம் என்ற பஞ்ச பாணங்களில் ஒரு மலர் பாணத்தினல் உண்மை ஞானம் அழிய,
ஓர் ஓர்வும்அணுகாமல் மாதர் அடி தாழ்வர் } ஒருவித விவேக ஞானமும் இல்லாத வர்களாய் பெண்களுடைய கால் களைப் பற்றிக் கெஞ்சுவார்கள். 11

*[அ-கை] மகா வீரனாயினும் எனது மலர் வாளியால் அழிவன் எனல்.*

235 பரியேறும் வீரர் பலகோடி யோட -
மலைபோல யானை பலமோதியே,
அரியேறு நூறு மதிசூர ரேனு -
அலர்வாளி காணி னறமாய்வரே.

*[இ-ள்]* பரி ஏறும்வீரர் பல கோடி ஓட } குதிரை மேல் ஏறி கொடுஞ் சமர் புரியும் வீராதி வீரர்கள் கோடி கோடியாய் வந்தாலும் ஓடும் படியும்,
மலை போல யானை பல மோதி, அரி ஏறு நூறும் அதிசூரர் ஏனும் } பருவதம் போன்ற பல கோடி யானைகளை அடிக்கும், ஆண் சிங்கங்களை நாசம் பண்ணக்கூடிய, அதிரத மகா ரதனான சூரனாய் இருந்தாலும்,
அலர் வாளி காணின் அற மாய்வர் } எனது மலர் பாணத்தைக் கண்ட மாத்திரத்தில் அடியோடு அழிவார்கள். 12

*[அ-கை] வில், கரும்பு, நாண், வண்டு, பாணம், மலர் களாயினும் என்னை எதிர்த்தவர் அழிவர் எனல்.*

236 கரும்பெனினு மென்னுடைய கைச்சிலைய சோகங் -
கமலநறு முல்லைகழு நீரினொடு சூதத்,
தரும்பெனினு மென்கணைசு ரும்பெனினு நாணோ -
ராவியுடை யார்களென தேவல்பிழை யாரே.

| | |
|---|---|
| [இ-ள்] என்னுடைய கைச்சிலை கரும்பு எனினும் | மதனாய எனது கையிலிருக்கும் வில்லானது கரும்பாய் இருந்தாலும் |
| என் கணை அசோகம் கமலம் நறு முல்லை கழு நீரினொடு சூதத்து அரும்பு எனினும் | என் பாணமானது அசோகமலர், தாமரைமலர், வாச முல்லை மலர், கழுநீர் மலர், மா மலராகிய புட்பங் களாய் இருந்தாலும், |
| நாணே சுரும்பு எனினும் | என் வில்லிலுள்ள நாண் தேன் வண்டுகளாயினும், |
| ஓர் ஆவி உடையார்கள் எனது ஏவல்பிழையார் | ஓர் உயிரோடு கூடி சீவிக்கின்றவர்க ளாய் இருந்தால் எனது ஏவலில் இருந்து தப்ப மாட்டார்கள். 13 |

*[அ-கை] தென்றலைத் தேராகக் கொண்டு என் சேனை களுடன் உலாவும் வரை, ஒருவருக்கும் ஞானம் உதியாதுஎனல்.*

237 தேனிலவு பூகவன முந்தடமு மாறுஞ் -
செய்யவிசை யேழுமுயி ருய்யவரு காலும்,
வானிலவு மாளிகையும் வான்நிலவு மென்கை -
மாமலரு முள்ளளவும் வந்துணர்வு றுதே.

| | |
|---|---|
| [இ-ள்] தேன்நிலவுபூக வனமும் | மது நிறைந்த கமுகு மரச் சோலையும் |

தடமும் ஆறும் - தடாகங்களும் கங்கை முதலிய ஆறுகளும்,
செய்ய இசை ஏழும் - அழகிய ச ரி க ம ப த நி ச என்ற இசை ஏழும்,

| | |
|---|---|
| உயிர் உய்யவருகாலும் | சீவர்கள் பிழைக்கும்படி வாரா நின்ற தென்றல் காற்றும், |
| வான் நிலவு மாளிகையும் | ஆகாயம் அளவுஉயர்ந்து இருக்கின்ற ஏழுமாட உப்பரிகைகளும், |
| வான் நிலவும் | - ஒளி பொருந்திய சந்திரனும், |
| என் கை மாமலரும் | - எனது கரத்தில் உள்ள சிறந்த மலர் வாளியும், |

| | |
|---|---|
| உள்ள அளவும் உணர்வு வந்து உறுதே | என்னிடத்தில் இருக்கும் வரைக்கும் ஒருவருக்கும் உண்மை ஞானம் உதயம் ஆகாதாம். 14 |

*[அ-கை] மாதர் வாய் மொழி மகிழ்ந்து கேட்கும்வரை மதனுகிய என் வல்லமை உண்டு, அதுவரை மயக்கமும் நீங்காது மனிதர்களுக்கு ஞானமும் உதயம் ஆகாது.*

**238 தூமனனும் வாய்மையுமு ருதுமட வார்தஞ் -**
**சொன்னவில வுள்ளளவு மென்னுமள வேயோ,**
**காமனெனு நாமமுள தாமளவு மாயைக் -**
**கங்குல்கழி யாதொருவர் கண்ணும்விழி யாரே.**

| | |
|---|---|
| [இ-ள்] மடவார்தம் சொல் நவில உள்ள அளவும் | பெண்களது வார்த்தை ஆடல்களை சுகம் என்று கேட்கும் பரியந்தமும், |
| தூமனனும் வாய்மையும் உறுது என்னும் அளவேயோ | சித்த சுத்தியும் சத்தியமும் (பிரம்ம சரியமும்) யாரும் மடையர்கள் என்பது மட்டுமா? |
| காமம் எனும் நாமமும் உளது ஆம், அளவும் | மன்மதன் என்றபெயரும்உள்ளதாம் (மாதரும், மன்மதன் என்னும் இருவரும்) உள்ளளவும், |
| மாயை கங்குல் கழியாது ஒருவர் கண்ணும் விழியார் | அஞ்ஞான அந்த காரம் நீங்கமாட்டாது ஒருவரேனும் தத்வ ஞானம் அடைய மாட்டார்கள். 15 |

*[அ-கை] உடம்போடு உள்ளவன் பெண்ணாசையை விடுவது என்பதில்லை எனல்.*

**239 அனிச்ச மஞ்சு மடியிஞரை யார்ம றப்ப ரறிவிஞன்,**
**மனிச்சர் முன்பி ருந்து தான்வ டிக்கும் வார்த்தை**
**வார்த்தையே.**

| | |
|---|---|
| [இ-ள்] அனிச்சம் அஞ்சும் அடியிஞரை | தொட்டால் சுருங்கியும் அஞ்சும் படியான கால்களையுடைய பெண்களை, |
| யார் மறப்பர் அறிவிஞல் | யாரால் மறக்கமுடியும், பஞ்சேந்திரிகளாலும் பஞ்ச விஷயங்களைப் பகுத்து அநுபவிக்கும் அறிவிஞல், |

மனிச்சர் முன்பு - மனிதர் முன்னிலையில்,
இருந்து தான் வடிக்கும் - வந்திருந்து யான் கூறுகின்ற,
வார்த்தை வார்த்தையே - வார்த்தைதான் உறுதியான வார்த்தையாகும். 16

*[அ-கை] கோபன்—கோபமுற்றால் உலகம் நடுங்கும் எனல்.*

240 பாவ மேவு கொலையி னோடு -
படுக னற்செய் கொடுவிழிக்,
கோப னேயெ ழுந்தபோதிவ் -
வுலகு நின்று குலையுமே.

[இ-ள்] பாவம் மேவு கொலையினோடு } பாவத்தினாற் பொருந்திய உயிரைக் கொல்வதோடு,
படு கனல் செய் கொடு விழி } வெப்பமான அக்கினியைப் போற் கொடிய பார்வையை உடைய,
கோபன் எழுந்த போது - கோபன் ஆனவன் வந்த காலத்தில்,
இவ்வுலகு நின்று குலையும் - இந்தஉலகிருந்து நடு நடுங்கும். 17

*[அ-கை] கோபம் வந்தால் வீவேகிகளையும் நிலை கலங்கும் படி செய்யும் எனல்.*

241 குலைகுலைந் துளநினைந் திடுநினைந் திடுதொறும் -
குடர்கரிந் துலகடங் கலுநடுங் குதலுறத்,
தலைகுலைந் துடைகுலைந் தறிஞரும் பெரியதந் -
தலைமைகுன் றிடவெழுஞ் சலமெனுந் தழலதே.

[இ-ள்] அறிஞரும் பெரியதம் தலைமைகுன்றிட } முனிவரும் உயர்ந்த தனது முதன்மை அழியும் படியாய்,
குலை குலைந்து உளம் நினைந்திடும் நினைந்திடும் தொறும் } நடு நடுங்கி மனமானது நினைக்குந் நினைக்கும் போதெல்லாம்,
குடர் கரிந்து உலகு அடங்கலும் நடுங்குதல் உற } குடல் எரிந்து உலகம் எல்லாமும் நடுக்கம் அடையவும்,

| | |
|---|---|
| தலை குலைந்து உடை குலைந்து | தலைமுடி அவிழ்ந்து உடை அவிழும் படி, |
| எழும் சலம் எனும் தழல் அது | உண்டாகும் தணியாத கோபம் என்னும் அக்கினி அதுவாம். 18 |

*[அ-கை] தத்வ ஞானமுற்று சாந்தி பெற்று, மற்றவரையும் ஞானமும் சாந்தியும் பெறச் செய்யும் பெரியோர்களையும் சினம் வந்து சீர் குலைக்கும் எனல்.*

242 தெருடரப் பொருள்விரித் தருடரத் திரிதருந் -
தெளிஞரைத் தெளிவறத் திசைமயக் குறவெறுங்,
குருடெனச் செவிடெனக் கொலைசிலக் கனலெழுங் -
கொதிபொறுப் பவர்களெக் குவலயத் தவர்களே.

| | |
|---|---|
| [இ-ள்] தெருள் தர பொருள் விரித்து அருள் தர திரி தரும் தெளிஞரை | ஞானத்தை உண்டு பண்ணும் அத்தியான்ம சாஸ்த்திரங்களை உபதேசித்து அனுக்கிரகம் செய்து கொண்டு சஞ்சரிக்கின்ற தத்துவ ஞானிகளையும் |
| தெளிவு அற திசை மயக்கு உற வெறுங் குருடு என கொலை சில கனல் எழும் | விசார ஞானம் அழிய ஆத்ம அனாத்ம விவேகமற்று பிறவிக்குருடனைப்போலும் செவிடனைப்போலும் கொலைக்கு எதுவான கோபாக்கினி உண்டாகுமானால், |
| கொதி பொறுப்பவர்கள் | தகிக்கும் போது சகித்துக் கொண்டு இருப்பவர், |

எக் குவலயத்தவர்கள் - எந்த லோகத்தில் இருப்பவர்களாகும். 19

*[அ-கை] கல்லாலின் கீழ் சினம் விடவேண்டும் என சின் முத்திரை பிடித்துக் காட்டிய சிவ பெருமானும் சினம் உற்றுத் திரிபுரம் எரித்தனர் எனல்.*

243 வருசெ ருச்செயா வகைய றத்தையே -
வடநி ழற்கணே மதிபெ றச்சொனோன்,
ஒருச ரத்திலே யொருக ணத்திலே -
யுழல்பு ரத்தைநீ றெழவொ ருக்குமே.

[இ-ள்] செருச் செயா வருவகை அறத்தையே — போர் முதலிய துர்ச்செயல்கள் உண்டாகாத படியாய் தர்ம மார்க்கத்தையே,

வட நிழற் கணே மதி பெறச்செ சானேன் — கல்லால விருட்சத்தின்கண் சனகாதிகளுக்குத் தத்துவ ஞானத்தை உபதேசித்த தெட்சணு மூர்த்தியும்,

ஒரு சரத்திலே ஒரு கணத்தில் — ஒப்பற்ற நாராயணுஸ்திரம் போட நினைத்தவர் ஒரு க்ஷண நேரத்தில்,

உழல் புரத்தை - நினைத்தபடி செல்கின்ற திரிபுரங்களை

நீறு எழ ஒருக்கும் — சாம்பலாகும் படியாய் அழித்ததும் கோபத்தோடு கூடிய புன்னகை செய்தது கோபத்திஞல் அல்லவா 20

[அ-கை] திருமாலாகிய ஸ்ரீ இராமனும் இலங்கையில் இராசவஞதிகளை அழித்ததும் கோபமுற்று எனல்.

244 மறுக வுக்கிரத் தொழில ரக்கர்தம் -
மனமும் வாரியு மதிலி லங்கையுந்,
தெறுக னற்கொளச் சிலைவ ளைத்ததுஞ் -
சிரமு திர்த்ததுஞ் சினமி குத்தலே.

[இ-ள்] மறுக உக்கிர தொழில் அரக்கர்தம் மனமும் — மயங்கும்படி பயங்கரமான செயலுடையஇராக்கதருடையநெஞ்சமும்,

வாரியும், மதில் இலங்கையும் - சமுத்திரமும் மதிள்கள் சூழ்ந்த இலங்கா பட்டிணமும்,

தெறுகனல் கொளசிலை வளைத்ததும் — அழிய அக்கினி உண்டாகும் படிகோதண்டமாகிய வில்லை வளையும்படி செய்ததும்,

சிரம் உதிர்த்ததும் சின மிகுத்தலே — தலைகள் கோடி கோடியாக உதிரும் படியாகச் செய்ததும் கோபம் மிகுந்து உண்டானதிஞல் ஆம். 21

*[அ-கை] கோபமுற்றவர் ஆதி வியாதிகள் அடைய வந்தும் சாபமிட்டுத் தவம் இழப்பதுமாம் எனல்.*

**245 கோப மிக்கபோ தேவ ராறுவார் -**
**குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகுஞ்,**
**சாப மிட்டுமா தவர்க ளாயினர் -**
**தலைமை மிக்கதந் தவமி ழப்பரே.**

*[இ-ள்]* கோபம் மிக்க போது } கோபமானது மிகுந்து உண்டான காலத்து,
ஏவர் ஆறுவார் - யாவராய் இருப்பினும் சாந்தம் வருமா,
குறுகுவோர் தமை கொடிய நோய் புகும் } ஆதியை அடைந்தவர்களுக்குக் கொடும் வியாதிகள் உண்டாகும்,
சாபம் இட்டு மாதவர்கள் ஆயினர் தலைமை மிக்க தம் தவம் இழப்பர் } கோபத்தாற் சாபங் கொடுத்து, சிறந்த தவம் உடையோர்கள் முதன்மை மிகுந்த தங்களது தவங்களை இழந்து போவார்கள். 22

*[அ-கை] கடல் மலைகளை தாண்டினால் பதிதனுவரன் என்பது அறிந்தும் உலோபம் உற்றவன் தாண்டிச் செல்வன் என உலோபன் கூறல்.*

**246 அடலோப னெழிலேவ ரமைவார்க ளடையக்,**
**கடலோடு மலையோடு தடுமாறல் காணே.**

*[இ-ள்]* அடல்லோபன் எழில் ஏவர்அமைவார்கள் } வலிய லோபனுடைய வல்லமை யாவர் பொருந்துவார்கள்,
அடைய கடலோடு மலை யோடு தடுமாறல் காணே } உலோபமுற்றவர்கள் எல்லாம் மலையைக் கடந்தும் கடலைக் கடந்தும் நிலை கெட்டு இருப்பதை காண்பீர்களாக. 23

*[அ-கை] உலோபமுற்றவனுக்கு இயாரிடத்தும் அன்பு உண்டாகாது எனல்.*

**247** பேரோத நேரான பேராசை கூர்போ,
தாரோடு முண்டோவொ ரன்பென்ப தங்கே.

[இ-ள்] பேர் ஓத நேர் ஆன } அதன் பெருமைக்கு உவமை இல்லாத,
பேர் ஆசை கூர் போது - பேராசையான உலோபம் மிகும் போது,
அங்கு ஆரோடும் ஓர் அன்பு என்பது உண்டோ } அவ்விடத்தில் எவர் இடத்திலாவது ஒருவிதமான தயை என்பது இருக்குமா? 24

[அ-கை] உலோபத்தால் சிவனுர் பிச்சை எடுக்கவும் திருமால் மூவடி மண்ணை யாசிக்கவும் திரியவில்லையா எனல்

**248** ஆலஞ்சேர் மிடற்றுனு மையத்திற் குழன்றிலனே,
மாலும்போய் மாவலிபான் மண்வேண்டி நின்றிலனே,

[இ-ள்] ஆலம் சேர் மிடற்றுனும் ஐயத்திற்கு உழன்றிலனே } திருநீலகண்டராகிய சிவபெருமானும் பிச்சைஏற்றுத்திரியவில்லையா?
மாலும் போய் மாவலி பால் மண் வேண்டி நின்றிலனே } மகாவிஷ்ணுவும் மகாபலிச் சக்கரவர்த்தியின் இடஞ்சென்று மூவடி நிலம் யாசித்து நிற்கவில்லையா? 25

[அ-கை] உலோபமுற்றுல் சொல்லாத பொய்யும் உண்டோ? தருமனும் அஸ்வத்தாமன்இறந்தான் எனப் பொய் கூறவில்லையா? எனல்.

**249** உரையாத பொய்யுண்டோ வுலோபனே யுற்றக்கால்,
தரையாளும் பொருட்டன்றோ தருமனும்பொய் சாற்றியதே

[இ-ள்] உலோபனே உற்றக் கால் - உலோபம் வந்து விட்டால்
உரையாத பொய்யுண்டோ - சொல்லாத பொய் வார்த்தை இருக்குமா!

தரை ஆளும் பொருட்டு அன்றோ தருமனும் பொய் சாற்றியது } ஏக சக்ராதிபதியாய்ப் பூமியை முழுதும் ஆட்சி புரியலாம் என்ற லோபத்தினுல் அல்லவா தரும புத்திரரும் பொய்வார்த்தையைகூறலானுர். 26

*[அ-கை] அத்வைத ஞானத்தை அடையாமற் செய்கின்ற உலோபனாகிய சேனாதிபதியே அஞ்ஞனது சிறந்தபடை வீரர் எனல்.*

**250** ஈசனொளி யோரிடத்து நிகழா வண்ண -
மெவ்வுருவுந் தன்னுருவா யெங்குந் தானும்,
ஆசையவ னோர்சேனா பதியின் றேலிவ் -
வஞ்ஞகுல பதிபெருமை யறிவா ரியாரே.

| | |
|---|---|
| [இ-ள்] எவ்வுரும் தன்னுருவாய் எங்கும் தானும், ஈசன் ஒளி, ஓர் இடத்தும், நிகழா வண்ணம் | நாமரூபப் பிரபஞ்சம்முழுவதும் தன் சொரூபமாயும், சர்வத்ர பரிபூரண மான, பிரம்மசொரூபத்தின்விளக்க மானது, எவ்விடத்தும், விளங்காத படி செய்கின்ற, |
| ஆசையவன் ஓர் சேனாபதி இன்றேல் | பேராசையான உலோபன் என்றஒப் பற்ற படைத்தலைவன் இல்லை எனில் |
| இவ்வஞ்ஞ குலபதி பெருமையார் அறிவார் | இந்த அஞ்ஞ வேந்தனுடையபெருஞ் சிறப்பு யாருக்குத் தெரியும், 27 |

*[அ-கை] கானல் நீர் போன்ற விடய சுகங்களை மெய் என்று அலைந்து உலகோர் துன்புறும்படி செய்யும் மோகன் அஞ்ஞனுக்குச் சமம் எனல்.*

**251** புகர்வெண்டேர் புனலென்று புலன்க ளாரப் -
போயலையத் திளைத்திளைத்துப் பொய்யே யார்ந்து,
சகர்திண்டா டச்செய்யு மோக னஞ்ஞன் -
றனனை சமன்வேறோர் தன்மை யின்றே.

| | |
|---|---|
| [இ-ள்] புகர் வெண் தேர் புனல் என்று | கானல் நீரை தண்ணீர் எனச் செல் வார் போல், |
| புலன்கள் ஆர போய் அலைய திளைத்து இளைத்து | பஞ்சேந்திரியங்களின் வழியாக சத் தாதி விஷயங்களிற்சென்று அலைந்து அழுந்தி மெலிந்து, |
| பொய்யே ஆர்ந்து சகர் திண்டாடச் செய்யும் | பொய்மையைமெய்என்றுஅடைந்து செகத்தோரைக் கஷ்டப்படும்படி செய்கின்ற, |

| | |
|---|---|
| மோகன் அஞ்ஞன் தான் ஆனை | மோகனே அஞ்ஞ வேந்தனாய் இருக்கின்றவனும், |
| சமன் வேறு ஓர் தன்மை இன்று | மோகனுக்கு சமமாய் மற்றொன்று இல்லை என்பதாம். 28 |

*[அ-கை] மும்மூர்த்திகள் முதல் யாவராயினும் மோகம் அடைந்தால் யான் எனது என்னும் அபிமானம் நீங்காது எனல்.*

252 மோக முற வேமுனிவர் மூவர்முதற் -
றேவர்நர ரியாவர்களு மியாவை யுமெலாம்,
ஆகமது யானெனது தந்தைதமர் -
தாரமக வென்பதுமொ ழிந்திலரே.

| | |
|---|---|
| [இ-ள்] மோகம்உறவே முனிவர் மூவர் முதல் | மோகம் அடைந்த மாத்திரத்தில் மனன சீலர்களான மகான்களும் பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலாக, |
| தேவர் நரர் இயாவர் களும், இயாவையும் | இந்திராதிதேவர்களும்மனிதர்களும் ஆய எல்லோரும், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, |

எலாம் ஆகம்அது யான் - யாவும் தேகத்தை யானென்றும்,
தந்தை தமர் தாரம் மகவு - பிதா சுற்றம் மனைவி மக்கள் முதலியவைகளில்,

| | |
|---|---|
| எனது என்பது ஒழிந்து இலர் | எனதுஎன்னும்அபிமானத்தைவிடாதவர்களாய் இருக்கின்றனர். 29 |

*[அ-கை] மோகத்தால் விடயங்களை அடையும் போதும் அநுபவிக்கும் போதும், அவை பிரியும் போதும் துன்பம் எனல்.*

253 மோகமுற வேயெவரு மோகமத -
னுலிடரின் முந்துவர்மு டிந்தவிடமுஞ்,
சோகமுற வேதுயர முந்துவத -
லாலதுது றந்துணர்வு கூறவிலரே.

மோகம் உறவே - மோகம்உற்ற மாத்திரத்தில்,

எவரும் - மனதோடு கூடிய சர்வ சீவர்களும்,
மோகம்அதனுல் - தேகத்தில்யான்எனதுஎன்னும்மயக்கத்தால்
இடரின் முந்துவர் - துயரமாகிய விஷயங்களில் வேகமாய்ச் செல்வர்,
முடிந்த இடமும் - விஷய அநுபவத்தின் முடிவிலும்,
சோகம் உறவே துயர் அழுந்துவது அலால் } சோர்வுற்றுத் துன்பக்கடலில் முழ்குவதே யல்லாமல்,
அது துறந்து உணர்வு கூற இலர் } அப்பிறவித்துன்பத்தைநீக்கிதத்துவ ஞானத்தை அடைய மாட்டார்கள். 30

*[அ-கை] குலத்தில் குணத்தில் நலம் முதலியவைகளில் எனக்கு மேலோர் இலர்எனும் அகங்காரத்தைக்கூறல்,*

254 ஓசையி னிற்பெரியே னோதின்மி கப்பெரியே -
னுங்களி னெண்மடிநான் வங்கிசமெ னிற்பெரியேன்,
ஈசனெ னக்கெதிரோ வேவரெ னக்கெதிர்வே -
றென்னும கங்காரத் தெவரெதி ரேறுவரே.

[இ-ள்] ஓசையினில் பெரியேன் } புகழ் அடைந்தவர்களில் யானே பெரியவன்,
ஓதில் மிகப் பெரியேன் } கல்வி கேள்வி ஞானங்களில் மிக உயர்ந்தவன்,
உங்களில் எண் மடி நான் வங்கிசம் தனில் பெரியேன் } உங்களைப் பார்க்கிலும் எண் மடங்கு யானே வம்முசத்தினில் உயர்ந்தவனுவேன்,
ஈசன் எனக்கு எதிரே - ஈசுவரனுயினும் எனக்குச் சமனுகார்,
எவர் எனக்கு எதிர் வேறு - மற்றெவர் எனக்குச் சமமாக வேறுள்ளார்,
என்னும்அகங்காரத்து எவர் எதிர் ஏறுவர் } என்கின்ற அகங்காரத்தை யாவர் தான் எதிர்த்து வெல்ல முடியும். 31

*[அ-கை] திரிமூர்த்திகள் இந்திராதி தேவர்கள் மற்று எவரையும் அற்பம் என மதிக்கும் அகங்காரமே நம் படையாய் இருக்கும் எனல்.*

255 என்னள வீசனும்வந் தேற்றொழி யும்பலிசென் -
றேற்றில ஞகினயன் றோற்றமி லன்றிருமா,
றன்னள வோரவியுஞ் சந்திர னிந்திரனுஞ் -
சற்றரெ னப்பகருந் தம்படை நம்படையே.

| | |
|---|---|
| [இ-ள்] என்னளவு ஈச னும் வந்து ஏற்று ஒழியும் | என்னிடத்தில் பரமேஸ்வரனும் வந்து பிச்சை எடுத்துச் செல்வன், |
| பலி சென்று ஏற்று இலன் ஆகில் அயன் தோற்றம் இலன் | பிச்சையை வந்து யாசித்து செல்ல வில்லை எனில் பிரம்மாவும் சிருஷ்டி யும் இருக்க மாட்டாது, |

திருமால் தன்னளவோ - விஷ்ணுவும் எனக்குச் சமன் ஆகார்,

| | |
|---|---|
| ரவியும் சந்திரன் இந்தி ரனும், சற்று எனப் பக ரும் தம் படை நம் படையே | சூரியனும், சந்திரனும், இந்திரனும், அற்பமென்று கூறும் தமது சேனை யான அகங்காரம் நமது படைத் துணையாக உள்ளது. 32 |

*[அ-கை] யானையின் மதத்தை மாற்றினும் மதமாகிய செருக்கை மாற்றல் அரிது எனக் கூறல்.*

256 கதத்த யானை யைத்த ணிப்பர் களிமி குத்தெ ழுந்தமா,
மதத்தை யார்த ணிக்க வல்லர் மண்ணி னன்றி
விண்ணிலே.

[இ-ள்] கதத்த யானையை - வலிய யானையையும் (மதத்தை)
தணிப்பர் - தணித்து விடுவார்கள்,

| | |
|---|---|
| களி மிகுத்து எழுந்த மா மதத்தை | வெறி மிகுந்து உண்டாகின்ற பெரிய செருக்கை, |

மண்ணில் அன்றி விண்ணில் - இகலோகத்தில் அல்லது பர லோகத்தில்,

யார் தணிக்க வல்லார் - யாவர் மாற்றுதற்குச் சமர்த்தர் ஆவர், 33

*[அ-கை] அவரவர்கள் தவப் பயனை அவரவர்கள் அநுபவிப்பதைக் கண்டு சகியாத பொறாமையை வெல் வோர் இயாவர் எனல்.*

**257** எச்சரங் களும்த மக்கெ திர்ந்து ளோர்களைப் படு -
மச்சரன்ற னுவி தன்னை வவ்வு தற்கு வல்லரே.

| | |
|---|---|
| [இ-ள்] எச் சரங்களும் தமக்கு எதிந்து உளோர்களைப் படும் | எவ்வித அஸ்திரங்கள் உடையோர்களை எதிர்த்து நாசப்படுத்தும், |
| மச்சரன் தன் ஆவி தன்னை வவ்வுதற்கு வல்லரே | மச்சரன் தனதுடன் போர் செய்து வெல்வார் யார் உளர். 34 |

**258** தந்த வப்ப யன்பு சித்தல் கண்டு நெஞ்சு தன்னுளே
வெந்த வப்பொ ருமை தன்னை வெல்ல யாவர் வல்லரே.

| | |
|---|---|
| [இ-ள்] தம்தவப்பயன் புசித்தல் கண்டு நெஞ்சு தன்னுளே | தமது புண்ணிய பலத்தை அநுபவிப்பதைப் பார்த்தும் தம் மனதிற்கு உள்ளே, |
| வெந்த அப் பொருமை தன்னை வெல்ல யாவர் வல்லர் | எரிந்து கொண்டிருக்கின்ற அந்தப் பொருமையை செயிப்பதற்கு எவர் தான் சமர்த்தர் ஆவார்கள். 35 |

*[அ-கை] தர்மார்த்த காம மோட்சத்தை அழிக்க வல்ல காமாதி படையின் அளவை யாவர் கூற வல்லார் எனல்*

**259** ஞான மாசில் தன்ம வித்த காம நாம நாலையும்,
ஈன மாக்கு நம்ப டைக்கொ ரெல்லை சொல்வ தெங்ஙனே,

| | |
|---|---|
| [இ-ள்] ஞானம் மாசு இல் தன்ம வித்தம் காமம் நர்மம் நாலையும் ஈன மாக்கும் | ஞானத்தால்வரும் மோக்ஷத்தையும் குற்றமற்ற தருமத்தையும் தனத்தையும் இன்பத்தையும் பெயருடன் நாலையும் அழிக்கும், |
| நம் படைக்குஒர்எல்லை சொல்வது எங்ஙன் | நமது சேனைகளுக்கு ஒரு முடிவு கூறுவது எப்படி? 36 |

*[அ-கை] மன்மதன் படை பலத்தை எடுத்துக் கூறக் கேட்ட அஞ்ஞனும் படையும் மகிழ்ந்து இருந்தனர் எனல்*

260 இங்கி யாது மிவனி யம்ப வின்ப மெய்தி யிறைவனைச்,
சங்கி யாம லஞ்ஞ சேனை - தாம கிழ்ந்தி ருக்குமே,

[இ-ள்] இங்கு யாதும் இவன் இயம்ப } இவ்விடம் யாவும் மன்மதன் கூறவும்,

இன்பம் எய்தி இறைவனை - ஆனந்தம் அடைந்து இறைவன் அவதரிப்பதை,

சங்கியாமல் அஞ்ஞ சேனை - (பற்றி) சங்கை செய்யாமல் அஞ்ஞன் படைகள்,

தாம் மகிழ்ந்து இருக்கும் - தாமே சந்தோஷம் அடைந்து இருந்தன. 37



# 19. ஞான விநோதன் படைச் செருக்கு.

*[அ-கை] தபசிகள் வாழ்த்தி வணங்கி முறையிடல்.*

261 எவ்வுயிர்க்கு முயிராய விறைவன் பொற்ரு -
ளெய்தவிருந்த வஞ்செய்தோ ரிறைஞ்சிப் போற்றி,
வெவ்வுயிர்க்க வருமறியா வேந்தன் றன்னல் -
விளைந்ததெல்லாம் விண்ணப்பஞ் செய்த போதே.

[இ-ள்] எவ்வுயிர்க்கும் உயிர்ஆய இறைவன் பொற்ருள் } சகலசீவர்களுக்கு ஆத்மாவாய்இருக்கும் பரமேஸ்வரன் திருவடிகளை,

எய்த இரும் தவம் செய்தோர்இறைஞ்சிப் போற்றி } அடையும் பெருமையுள்ள தவஞ் செய்பவர் வாழ்த்தி வணங்கி,

வெவ்வுயிர் கவரும் அறியா வேந்தன் தன்னல் } கொடியோரை அடைந்திருக்கும் அஞ்ஞானமாகிய அரசனல்,

விளைந்தது எல்லாம் விண்ணப்பம் செய்த போது } உண்டான தீமைகள் எல்லாம் தெரிவித்த சமயத்தில்

*[அ-கை] அஞ்ஞனால் உற்ற துன்பங்களை அறிந்த சொருபானந்த சுவாமிகள் அடியார்களை கிருபையால் நோக்கி திருவடி சூட்டினர் எனல்.*

**262 போராரு மஞ்ஞனவன் றன்னால் வையம் -**
**புகுந்தபிழை கேட்டருளிப் போத மூர்த்தி,**
**சீராரு மடியவரைத் திருக்கண் சாத்தித் -**
**திருவடித்தா மரையவர்தஞ் சென்னி கொண்டே.**

[இ-ள்] போர் ஆரும் அஞ்ஞன் அவன் தன்னால், வையம் புகுந்த பிழை, கேட்டு அருளி போத மூர்த்தி } போர் தொழிலுற்ற அஞ்ஞ வேந்தனால், இவ்வுலகமானது அடைவுற்ற பேராபத்தை செவிசாய்த்து அறிந்த ஞான விநோதர் ஆனவர்.

சீர் ஆரும் அடியவரை திருக்கண் சாத்தி } சிறந்த மெய்யடியார்களை அழகிய கிருபா திருஷ்டியை வைத்து நோக்கி

திருவடி தாமரை அவர் தம் சென்னி கொண்டு } அழகிய தாமரைமலர் போன்ற திருவடிகளை அடியார்களது சிரசிற் சூட்டினர். 2

*[அ-கை] குருநாதன் திருவருள் உடையார்க்கே மாயாபுரத்தை அழிப்பதற்கு எளிதல்லாமல் தேவர்களும் அஞ்சத் தக்க ஆதலின மற்றவர் அழித்தல் அரிது எனல்.*

**263 எம்பிரான் றிருக்கடைக்கண் பட்டார்க் கன்றோ -**
**வெளிதாகி யிருப்பதுதா னேற்ற மிக்க,**
**உம்பருமா யாபுரத்திற் கஞ்சா நிற்ப -**
**ரொழிந்தவரோ வினியொழிப்பா ருலகத் துள்ளே.**

[இ-ள்] எம்பிரான் திருக் கடைக்கண் பட்டார்க்கு அன்றோ } எனது சற்குரு நாதனுடைய அழகிய கடைக்கண் திருஷ்டியை அடைந்தவர்க்கு அல்லவோ,

எளிது ஆகி இருப்பது - (மாயாபுரத்தை வெல்வது) சுலபமானதாம்,

ஏற்றம் மிக்க உம்பரும் - மேன்மை மிகுந்த தேவர்களும்,

மாயாபுரத்திற்கு - அஞ்ஞனது பட்டினத்திற்கு,

அஞ்சா நிற்பர் – பயந்து இருப்பர்களானால்,
உலகத்து உள் - இவ்வுலகத்தின் கண்,
ஒழிந்தவரே - மற்றவர்களா,
இனி ஒழிப்பார் – இனிமேல் அழிப்பவர்கள். 3

*[அ-கை] நமது குருபரனைச் சரணடைந்து மனோவாக்கு காயத்தால் வழிபடுவோர் அஞ்ஞான மதன் காரியங்கள் அனைத்தும் அழித்து உண்மை அறிவார்கள் மற்றவரால் ஆகாது எனல்.*

**264 வருபாசக் கட்டறுத்து மாமாயா புரமழித்து மயக்கந் தீர்வார்,**
**சொருபானந் தாவுனக்குத் தொழில்செய்வார் பிறராலுந் தொலைக்க லாமோ,**

[இ-ள்] சொருபானந் தா உனக்கு தொழில் செய்வார் – சொருபானந்தர்என்னும் திருநாமம் உடைய குருநாதராகிய தேவரீருக்கு முக்கரணங்களாலும் பணி புரிவார்,
வருபாசக் கட்டு அறுத்து - அனாதியாய் வரும் அஞ்ஞான பந்தத்தை அழித்து,
மா மாயாபுரம் அழித்து - அழியும் தேகத்தில் நான் என்கின்ற அபிமானம் அழித்து,
மயக்கம் தீர்வார் - மோகம் அழிப்பார்கள்,
பிறராலும் தொலைக் கலாமோ – மற்றவர்களால் நீக்குதற்குக் கூடுமோ. 4

*[அ-கை] தேவரீரை வந்து அடைந்தவர்களே பெண் ஆசையின் பேதமை ஒழிப்பாரன்றி மற்றவர்களால் ஆகாது எனல்.*

**265 கச்சொருவும் கனதனத்தார் கலவியினும் .**
**புலவியினும் கலக்கந் தீர்வார்,**
**மெய்ச்சொருபா னந்தனை மெய்ப்படத்தாம் -**
**பெற்றவரே வேறார் வல்லார்,**

[இ-ள்] கச்சு ஒருவும் கனதனத்தார் - கட்டைத் தகர்க்கும் பெருந்தன பாரங்களை உடைய,
கலவியினும் புலவியினும் - பெண்களின் சேர்க்கையாலும் ஊடலினாலும் உண்டாம்,
கலக்கம் தீர்வார் - மனக்கலக்கம் அற்று இருப்பார்கள்,
மெய் சொருபானந்த நினை மெய்ப்பட்டாம் பெற்றவர் - சச்சிதானந்த சொருபராகிய தேவரீரை உள்ளபடி சரண் அடைந்து இருப்பவரே அடையத் தக்கதை அடைந்தவர் ஆவர்,
வேறு ஆர் வல்லார் - மற்றவர் அடைவதற்கு யார் சமர்த்தர் ஆவர். 5

*[அ-கை] அடியவர் வந்து போற்றும் போது சொருபானந்த சுவாமிகள் ஞான விநோதனைப் போய் அஞ்ஞன் உயிரை அழிப்பாய் எனல்.*

266 என்று நின்றுரை செய்த வெல்லையி -
னெந்தை ஞானவி விநோதனை,
சென்ற வன்றன தாவி யுண்டுதி -
ரிந்தி டென்றருள் செய்யவே.

[இ-ள்] என்று நின்று உரைசெய்த எல்லையில் எந்தை - இவ்விதமாகச் சந்நிதியில் இருந்து விண்ணப்பஞ் செய்த சமயத்தில் இறைவனாய சற்குருநாதன்,
ஞான விநோதனை சென்று - ஞான வேந்தனை நீ போய்,
அவன் தனது ஆவி உண்டு - அஞ்ஞ வேந்தனுடைய உயிரை அழித்து,
திரிந்திடு என்று - சஞ்சரிப்பாய் என்பதாக,
அருள் செய்யவே - திருவருள் புரிந்த மாத்திரத்தில், 6

*[அ-கை] குருநாதரால் திருவடி தீட்சை பெற்ற ஞான வேந்தன் விடை பெற்று தன் படைகளுடன் செல்வது எவர் இயம்புவர் எனல்.*

267 தம்பி ரானிருப தங்க ளுந்தனது -
சென்னி கொண்டறிஞர் தம்பிரான்,
எம்பி ரானைவிடை கொண்ட வன்படையெ -
ழுந்த வாறெவரி யம்புவார்.

| | |
|---|---|
| [இ-ள்] தம்பிரான் இருபதங்களும் தனது சென்னி கொண்டு | திருக்கூட்டத்தலைவராகிய குருநாதர் இரண்டு திருவடிகளையும் தனது சிரசின் மேல் சூட்டிக் கொண்டு, |
| அறிஞர் தம்பிரான் | ஞான விநோதன் இரு கரம் கூப்பி வணங்கி |
| எம்பிரானை விடை கொண்டு | எமது சற்குருநாதரிடத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு |
| அவன் படை எழுந்த ஆறு எவர் இயம்புவர் | ஞான விநோதன் சேனையானது புறப்படுந்தன்மையை மூவர் தேவர்களாலு மெடுத்துக்கூற முடியுமா? 7 |

*[அ-கை] கடல் போசன்றெழுங்காமக் குரோதாதி துர்க்குணங்கள் அழிந்து கருணை முதலான சற்குணங்கள் மிகுந்திருப்பன பிறப்பெனும் பேரையுமொழிப்பதற்கு ஒழுங்காய்ச் செல்வன கலகமற்ற மௌன முறுவன காயத்தைக் காய்வன அநுபவமற்ற வேஷத்தை வெறுப்பன உலோக வாசனையைப் பக்கமும் வரப்பொறுக்காதனவாகிய ஞான யானைகள்கோடி கோடியாமெனல்*

268 கடலென காம கோப லோப மாறுவ -
கருணைநி ஷாதி யாய்விடாது பாய்வன -
கருவெனு நாமமாள வீதி போவன -
உடலொடு கோபமேலு மேலு மூள்வன -
வுணர்வறி யாத வேட கூட மோதுவ -
வுலகிய லூார நாற வேபொ ருதன -
வொளிமத யானை கோடி கோடி கோடியே.

| | |
|---|---|
| [இ-ள்] கடல் என காம கோப லோபம் ஆறுவ | சமுத்திரம் போலுள்ள ராகம், துவேஷம், லோபம் முதலியன (ஒழியச்செய்து சாந்தமுற்றிருப்பன, |

| | |
|---|---|
| கருணை நிஷாதி ஆய்வி டாது பாய்வன | கிருபையானது இரக்கமின்மையைத் தப்பாது நாச மர்க்குவதாம், |
| கருவு எனும் நாமம் மாள வீதி போவன | பிறப்பென்னும் பெயருமழிப்பதற்கு நன்மார்க்கத்தைப்பற்றிச்செல்வன, |
| கலகம் அருத ஒசை மீள மீள் வன | கலகங்களை விட்டு நீங்காத பெருங் கூச்சலை நீக்குகின்ற மௌனத்தைப் பெறுவன, |
| உடலோடு கோபம் மே லும் மேலும் மூள்வன | தேகத்துடன் கோபிப்பதை மறுபடி யும் அதிகமாக்குவன, |
| உணர்வு அறியாத வேட கூட மோதுவ | உண்மை ஞானத்தையுணராத வேஷத்தை மாத்திரம் சேர்வதை நீக்கிவன, |
| உலகு இயல் தூர நாற வே பொருதன | லோகசுபாவமான அருந்தல் பொருந்தலை விட்டு நீக்கி அதன் வாசனையையும், வெறுப்பன, |
| ஒளிமத யானை கோடி கோடி கோடியே | (இப்படிப்பிரகாசம்பொருந்திய) ஞானமத யானைகள் கோடி கோடியிருப் பனவாம். 8 |

*[அ-கை] பகையற்ற நேயமாகிய பரிமேற் செல்வன. லோகங்களுக்கு அப்பாலும் போவன, சூரிய சந்திரர் களாலும் காணப்பட்டாதன தனக் கன்னியமாய் உயர்வில்லா தன துறவோடுற்ற ஞான வீரர்கள்சூழ்ந் திருப்பன வேதத்தில் விதித்ததையே அநுஷ்டிப்பன உறுதியாக சங்கற்பங்களை அழிப்பனவாய் பிரகாசி கின்ற ஞானமாகிசக்கிரங்கள் கோடிகோடியாமெனல்*

269 உறவொடு வேறி லாத வாசி யூர்வன -
உலதிரு நாலு மாறு மேலு மாவன
வுடுபதி சூரியாதி காணெ ணுதன -
வுயர்வது வேறு தான் லாதி லாதனா -
துறவொடு சாலு ஞான வீரர் சூழ்வன -
சுருதிகள் போன நீதி வீதி போவன -
துணிவுற வேறுபாடு சாடி யோடுவ -
சுடர்விடு ஞான வாழி கோடி கோடியே,

| [இ-ள்] உறவொடு வேறு இலாத வாசி ஊர்வன | மைத்திரியாதி சற்குணங்களோடு மாறுபாடில்லாத குதிரை மேலேறிச் செல்வன |
|---|---|
| உலகு இரு நாலும் ஆறும் மேலும் ஆவன | பதி நான்கு லோகங்களிலும் அதற்கு மேலும் நிறைந்திருப்பனவாம், |
| உடுபதி சூரியாதி காண ஒண்ணாதன | சூரியன் சந்திரன் அக்கினி நட்சத்திரம் மின்னல் சீவன் புத்தி கண்ணாகிய அஷ்டப்பிரகாசத் தாலுமறியாதன |
| தான் அலாது உயர்வது வேறு இலாதன | தனக்கன்னிய மாய்உயர் உடையது மற்றொன்று இல்லாதனவாம். |
| துறவொடுசாலும் ஞான வீரர் சூழ்வன | சர்வ சங்கப் பரித்தியா கஞ்செய்த திடஞானிகளான வீரர்களால் சூழ்ந்திருப்பதாம், |
| சுருதிகள் போன நீதி வீதி போவன | வேத வேதாந்தங்களில் கூறிய சன்மார்க்கத்தை அநுஷ்டிப்பனவாம் |
| துணிவு உற்வேறுபாடு சாடி ஓடுவ | தெளிவு உண்டாய் சங்கற்ப விகற்பங்களை அடித்துச் செல்வதான |
| சுடர்விடு ஞான ஆழி கோடி கோடியே | பிரகாசிக்கின்ற பிரம்மாகாரவிருத்தி ஞானமான சக்கராயுதங்கள் கோடானு கோடியாம். 9 |

*[அ-கை] விடாமல் அஞானத்தையும் அழிக்கும் ஞானமாகிய பாணங்கள் பாய்வதாம் துர்ச் சங்கத்தை விட்டு சற் சங்கத்தைச் சேர்வதாம் துன்பமுற்ற கர்மத்தைப், பரமாகக் கூறும் பேத வாதிகள் கதறும் வாய் திறக்காமல் செய்வதாம் முக் குணங்களின் வசமாகாததாம் குருசேவை செய்வதான குதிரைகள் கோடிகோடியாம்*

270 சிதறவிடாம லியாது மாய நூறுவ -
செறிய வொணாத ஞான வாளி பாய்வன -
திருகுதல் தீருமாறு மாறி சேர்வன -
சிலுகொழி யாது காதி யோதும் வாதிகள் -

குதறிய கூர்மை வாய்கண் மூட வேறுவ -
குணமொரு காலி லாத தான நீர்மைய -
குருபர ஞூர்த ஏவல் வீதி போவன -
குரகத ராசி கோடி கோடி கோடியே.

| | |
|---|---|
| [இ-ள்] சிதற விடாமல் யாதும் மாய நூறுவ | சிந்தாமற் சங்கற்ப விகற்பங்களனைத்தையும் கெடும்படி நாசமாக்குவதாம், |
| செறிய ஒண்ணாத ஞான வாளி பாய்வன | நெருங்குவதற்கு முடியாத ஞானமாகிய பாணங்கள் பாய்வதாகும், |
| திருகுதல் தீரும் ஆறு மாறு சேர்வன | துர்ச் சங்கமாகிய வஞ்சகத்தை நீக்கும் பொருட்டு, கள்ளமற்ற சத் சங்கத்தைச் சேர்வதாம், |
| சிலுகு ஒழியாது காதி ஓதும் வாதிகள் | துன்பம் நீங்காத கர்மபரத்தைக் கூறும் பேத வாதிகள், |
| குதறிய கூர்மை வாய் கள் மூட ஏறுவ | உதறிச் சிக்கலாக்கிய கூரிய வாய்களை மூடும்படியாய் உயர்ந்திருப்பதாம், |
| குணம் ஒருகால் இலாதது ஆனநீர்மைய | முக் குணத்தின் வசம் ஓர் போதும் ஆகாமல் நிலை பரமாவன, |
| குருபரனூர் ஏவல் வீதி போவனகுரகதராசி கோடி கோடியே | சற்குருநாதன் ஏவுகின்ற மார்க்கத்திற் செல்கின்றகுதிரைக்கூட்டங்கள் கோடி கோடியா யுள்ளனவாம். 10 |

[அ-கை] இன்சொல்லும் மெய்மையும், தாழ்ந்தாலும் வாழ்ந்தாலும் விதிதவறாத ஞானதீரமும்விளங்கும்ஞானமாகிய வாளாயுதமும் மௌன வீரமும் முறையாயுணவு கொள்ளும். புருடத் தன்மையும், வருணாச் சிரமத்திற்குத் தக்கப்படி வாழும் உறுதியும் அளவற்றிருப்பதே இயல்பாயும், அதிபயங்கரமான மகா வீரர்கள் கோடி கோடியாமெனல்.

271 இனியன கூறும் வாயும் ஆய வாய்மையு -
மிறுதிய தான போதும் வாழு போதினு -

மியல்வழு வாத ஞான தீர பாவமும் -
இலகிய ஞான வாளு மோன வீரமும் -
அனியத வூண லாதி லாத வாண்மையு -
மவரவர் சீல மோடு வாழு நீர்மையு -
மளவுய டாமை யேசு பாவ மாகையு -
மதிபய மான வீரர் கோடி கோடியே.

| | |
|---|---|
| [இ-ள்] இனியன கூறும் வாயும் வாய்மையும் | இனிமையான வார்த்தைகளைப் பேசும் வாக்கினையும், சத்தியமும், |
| இறுதியது ஆன போதும் வாழு போதினும் இயல் | மரணம் வந்த காலத்தும் வாழுதல் வந்த காலத்தும் ஒழுங்கு தவறாத இருக்கின்ற திடமான |
| வழுவாத ஞான தீர பாவமும் இலகிய ஞானவாளும் | ஞான சுபாவமாய் விளங்கா நின்ற அறிவாகிய வாளாயுதமும், |
| மோன வீரமும் | - மௌன மாயிருக்கும் தைரியமும், |
| அறியத ஊண் அலாது இலாத ஆண்மையும் | முயற்சியின்றி வினைப் பிரகாரம் வந்த உணவைக் கொள்ளும் மனவலியும், |
| அவர் அவர் சீலமோடு வாழும் நீர்மையும் | அந்தந்த வருணத்திற்கு உரிய வொழுக்கத்தோடு வாழ்ந்திருக்கும் உறுதியும், |
| அளவு படாமையே சுபாவம் ஆகையும் | காலதேச வஸ்துக்களால் எல்லையற்றிருப்பதே யியல் பாயிப்பதும், |
| அதிபயம் ஆன வீரர் கோடி கோடியே | மிகவும் பயம் தரும்படியான வீரர்கள் கோடி கோடியாயுள்ளனர். 11 |

[அ-கை] உலகழியும் படியாய் கடலுந்திக்கு களுங் கலங்கும்படி எட்டு குலாசல பர்வதங்கள் மேல் வந்து வீழும்போதும் கலங்காமல் வீணைவழி வருமென்றிருப்ப ரெனல்.

**272** இந்தவுல கந்தரஞ் செய் தெழுகட -
லெண்டிசைக லங்கிநின்ற குலமலை -
வந்துவிழு மன்றுமொன்று மசைவிலர் -
வந்தபடி கண்டிருந்து மகிழ்வரே.

| | |
|---|---|
| *[இ-ள்] இந்த உலகு அந்தரம் செய்து* | *இப் பூலோகத்தை யழியும்படி செய்து,* |
| *ஏழு கடல் எண் திசை கலங்கி நின்ற குலமலை* | *ஏழு சமுத்திரங்களும் எட்டுத் திக்களும் கலங்கும் படியாக எட்டு குல கிரிகளும்,* |
| *வந்து விழும் அன்று* | *தன் மேல் வந்து விழுந்த காலத்திலும்* |
| *ஒன்றும் அசைவு இலர்* | *ஒருவித கலக்கத்தையும் அடையமாட்டார்கள்,* |
| *வந்தபடி கண்டு இருந்து மகிழ்வர்* | *வினைப் பிரகாரம் வந்ததென்று உணர்ந்து அநுபவித்து சந்தோஷ மாயிருப்பர்.* **12** |

*[அ-கை] சந்தன முதலிய வாசனை திரவியங்களால் தனக் கபிஷேகம் செய்ததால் சந்தோஷப்படாமலும். ஆயுதங்களால் அறுத்தனுபவி யென்றால் நோவாமலும் வினைப்பயன் என்று மகிழ்வரெனல்.*

**273** சந்தன குங்கு மங்கள் புழுககில் -
தண்பளி தஞ்சொரிந்து மகிழ்விலர் -
நொந்தன கொண்டரிந்து நுகரென -
நொந்திலர் முந்தையென்று நகுவரே -

| | |
|---|---|
| *இ-ள்] சந்தன குங்கு மங்கள் புழுகு அகில் தண்பளிதம் சொரிந்து மகிழ்விலர்* | *சந்தனம், குங்குமம், புனுகு, அகிற் சாந்து, குளிர்ந்த கற்பூரம், ஆகிய எல்லா வற்றையும் தன் மேல் அபி ஷேகஞ் செய்தாலும் மகிழார்கள்,* |
| *நொந்தன கொண்டு அரிந்து நுகர் என* | *வருந்தும் ஆயுதங்களால் அறுத்து அநுபவிப்பாய் என்று வருத்தினாலும்* |

| | |
|---|---|
| நொந்திலர்[1] முந்தை என்று நகுவர் | வருந்தாமல் பூர்வத்திற் செய்த வினைப்பயனெனச் சந்தோஷமாய் அநுபவிப்பார்கள் 13 |

*[அ-கை] வருத்த முற்றோர் வந்து கோபித்துத் துன்புறுத்தினும், உமது சுற்றமென வந்து உபசரித்தாலும், துன்ப வின்பந்தருமிருவரிடத்திலும்வாட்ட மகிழ்வின்றி சமமாய் அநுபவிப்பரெனல்.*

**274 நொந்தனர் கன்றிவந்து நலிபவர் -**
**நுந்தன ரென்ற மைந்த கடனற -**
**வந்தன வென்றி டும்பை வரமகிழ் -**
**வந்தன ரங்கிரண்டு முடையரே.**

| | |
|---|---|
| [இ-ள்] நொந்தனர் கன்றி வந்து நலிபவர் நுந்தனர் என்று | துன்புற்றோர் கோபித்து வந்து துன்பஞ் செய்பவர்களும் உமது பந்துக்களெனக் கூறி உபசரிக்கின்றவர்களுமாக, |
| அமைந்த கடன் அற | - இருக்கின்ற முறையை விடுத்து, |
| வந்தன என்று | — கருமத்தால் வந்த தென்றெண்ணி, |
| இடும்பை மகிழ்வு வர அங்கு வந்தனர் இரண்டும் உடையர் | துன்ப வின்பங்கள் வந்த விடத்தில் வந்து அநுபவிக்கும்போதுஇருவிதத்தையும் சமமாய் அநுபவிப்பர் 14 |

*[அ-கை] செயலற்றிருக்கும் தத்துவ ஞானிகள் சொரூபத்தை யறியாமல் மறைக்கும் ஆவரணத்தோடு சஞ்சித கர்மத்தை ஞானத்தாலழித்து அகர்த்தாவென்னும் புத்தியால் ஆகாமிய கர்மத்தைப் பற்றுமலும் உடலிலுண்டாம் சுக துக்கானுபவத்தால் பிராரத்தகர்மத்தை யொழிப்பரெனல்,*

**275 செயலினை யற்றிருக்கு முனிவர்கள் -**
**செறிவினை யைக்கெடுக்கும் வகையினின் -**
**முயல்வினை யைக்கெடுப்ப ரறிவினின் -**
**முன்வினை ளுயப்புசிப்ப ரடையவே.**

[இ-ள்] செயலினை அற்று இருக்கும் முனிவர்கள் — செய்யத்தக்கதை யெல்லாம் செய்து முடித்திருக்கின்ற தவத்தவராய தத்துவ ஞானிகள்,

செறிவினையைக்கெடுக்கும் வகையினின் — நெருங்கியிருக்கும் சஞ்சித கர்மத்தை அபரோட்ச ஞானத்தால் அழித்த முறையால்,

அறிவினின் முயல் வினையைக் கெடுப்பர் — அகர்த்தாஅ போக்தாவென்னும் ஞானத்தால் அகங்கார கிரந்தியற்றதால் ஆகாமிய கர்மத்தையழிப்பர்,

முன் வினையை அடைவே புசிப்பர் — பிராரத்த கர்மத்தை முற்றிலும் அநுபவித் தொழிப்பர், 15

*[அ-கை] அளவற்ற ஞான வீரரை யெண்ணிப் பார்ப்பது எவ் விதம் உண்ணல் முதலியவைகளால் பேதமின்மையால் யாருப் அறிவதரிதெனல்.*

276 எண்ணி லாதவியல் ஞான வீரர் தமை -
யெண்ண லாகுமள வெங்ஙனே -
கண்ணில் வேறுபட வின்மை யாலொருவர் -
காணு மாறரிய காணுமே.

[இ-ள்] எண்ணிலாத இயல் ஞான வீரர் தமை — எண்ணி அளவிட முடியாத சொருப ஞானமாகிய சௌரிய முடையோர்களை,

எண்ணல் ஆகும் அளவு எங்ஙனே — கணக்கிட்டறிந்து எல்லை சொல்வது எவ்விதமாகும் (ஏனெனில்)

கண்ணில் வேறுபட வின்மையால் — பார்ப்பவர்க்கு உண்ணல் உறங்கலாதிகளில் மாறுபாடு காணப்படாமையால்,

ஒருவர் காணும் ஆறு அரிய காணும் — யார்க்குமறிந்து கொள்ளுந் தன்மை அறிதற்கரிய தென்பதறியுங்கள் 16

*[அ-கை] கீழும் மேலும் மற்றெங்கனும் நிறைந்திருக்கும் நம்படை அளவு இலது எனல்.*

**277 கீழி லாதபடி கீழு மேலுமதின் மேலி லாதபடி கெழுமியே,**
**சூழி லாதபடி சூழு தானை நிலை சொல்ல லாகுமள வல்லவே.**

| | |
|---|---|
| *[இ-ள்]* கீழ் இலாத படி கீழும் மேலும் அதின் மேல் இலாதபடி கெழுமியே | கீழுக்கெல்லாம் கீழுமிருப்பதும் மேலுக் கெல்லாம் மேலாய் நிறைந் தும் அதற்கு மேலிடமில்லாமல் நெருங்கியும், |
| சூழ் இலாத படி சூழு தானை நிலை சொல்லல் ஆகும் அளவு அல்லவே | சூழ்வதற்கிடமின்றி சூழ்ந்திருக் கின்ற படைகளின் நிலையினை சொல்லும் அளவு இல்லா தனவாம் 17 |

*[அ-கை] ஞான விநோதன் தம் படைகளைப் பார்த்து காமாதி படைகளை எப்படி வெல்வீ ரென்ன நிருபகன் வணங்கிக் கூறுவனெனல்.*

**278 நிறைந்த பெரும் படைநோக்கி நீரழிக்கும் பரிசெமக்கிங்**
**கறைந்திடு மென்றருள் செய்ய வரிய நிருபகன் றொழுதே**

| | |
|---|---|
| *[இ-ள்]* நிறைந்த பெரும் படை நோக்கி நீர் அழிக்கும் பரிசு எமக்கு இங்கு அறைந்திடும் என்று | மிகுந்திருக்கின்ற பெரிய சேனைகளைப் பார்த்து ஞான விநோதன் பகை வரை நீங்கள் அழிக்குந் தன்மையை யெனக்கிவ்விடத்துரையுங்களென்ன |
| அருள் செய்ய அறிய நிருபகன் தொழுதே | திருவாய் மலரவும் அரியவனுன ஆராய்வோன் வாழ்த்தி வணங்கி (இது குளகம்) 18 |

*[அ-கை] விவேகமின்றி யவர்க்கு அல்லவோ பெண் களென்றவுடன் சுகமென்ற மயக்க முண்டாம். குறும்பி பெரும்பி யென்றுராயு மறிஞர்களுக்கு அரு வருப்புண்டா மெனல்.*

**279 தேராதா ரல்லரோ சேயிழையா ரெனத்திகைப்பார் –**
**ஆராயு மறிவுடையார்க் கருவருப்பே யல்லவோ.**

[இ-ள்] தேராதார் அல்லரோ சேயிழையார் எனத் திகைப்பர் } பகுத்தறிவு அற்றவர்கள் அல்லவா பெண்களென்றவுடன் ஏங்குவார்கள்
ஆராயும் அறிவு உடையர்க்கு அருவருப்பு அல்லவோ } தீர விசாரித்தறிந்த தத்துவ ஞானிகளுக்கு, வெறுத்து தள்ளத் தக்கதல்லவோ, 19

*[அ-கை] மங்கையர்களால் உண்டாம் சுகபோகங்களை மதியற்ருர் விரும்புவாரன்றி மதிமான்கள் ஒரு பொருளாக மதிப்பார்களா எனல்.*

**279 மாலாய வவரன்றி மாசற்ருர் மாணிழையார் - கோலாக லங்களையு மொன்ருகக் கொள்ளுவரே.**

[இ-ள்] மால்ஆய அவர் அன்றி } மயக்க முற்றிருக்கின்ற அம்மனிதர்கள் அல்லாமல்,
மாசு அற்ருர் - குற்றமற்ற பெரியோர்கள்,
மாண் இழையார் கோலா கலங்களையும் } அழகிய வாபரண முடைய பெண்களிடத்திலுண்டாகின்ற சுகபோகங்களை
ஒன்ருக கொள்ளுவரோ - ஒரு பொருளாக நினைப்பார்களா. 20

*[அ-கை] தோல் முதலிய ஆறு தத்துவத்தால் அமைந்த பெண்கள் உடம்பை பெரும் புலவர்களும் புகழ்வதும் எதனுல் என்பது அறியோமெனல்.*

**280 நரம்பெலும்பு மூளை தசை நவை தருதோ லாற்பொதிந்த குரம்பையினைக் கற்ருேருங் கொண்டாட லென்கொண்டோ**

[இ-ள்] நரம்புஎலும்பு மூளை தசை நவைதரு தோலால் பொதிந்த } நாடிகளாலும் என்புகளாலும் மூளை மாமிசங்களாலும் குற்றந்தருந் தோலால் அமைந்திருக்கின்ற,
இரம்பையினை கற்ருேரும் கொண்டாடல் என் கொண்டோ } பெண்களுடைய தேகத்தைப் பண்டிதர்களும் புகழ்ந்து பேசிக் கொண்டிருப்பது எதனு லென்பதறியோம் 21

*[அ-கை] மாமிச முகத்தை மதியெனவும் கூந்தலைக் கொண்டலெனவும் கூறுவ ரெனல்.*

282 தசைய ருதமு கத்தை வந்தெழு -
சந்ர மண்டல மென்பரே -
வசைய ருமயிர் தன்னை யுங்குழல் -
மங்கு லென்றும திப்பரே.

[இ-ள்] தசை அருத முகத்தை } புலாலை நீங்காது இருக்கின்ற முகத்தினை
வந்து எழு சந்ர மண்டலம் என்பர் } புறப்பட்டு வாரா நின்ற பூரணச் சந்திர னென்று புகலா நிற்பர்,
வசை அருத மயிர் தன்னையும் குழல் மங்குல் என்று மதிப்பர் } இகழ்ச்சி நீங்காத தலை ரோமத்தையும் தூக்கி, முடிந்த மேக மண்டல மென்பதா யெடுத் துரைப்பர், 22

[அ-கை] வாசனை மிகுந்த குங்குமம் முதலியவைகளையும் உடம்பிலணிய அவைகளும் நாறும்படி செய்கின்ற இவ் உடம்பைச் சுகந்த மென்று உரைப்ப ரெனல்.

283 கற்க நாறிம ணந்த குங்கும -
களப வண்டலு மளவிலாத் -
துற்க நாறுதல் கண்டி ருந்துஞ்சு -
கந்த மென்றுது திப்பரே.

[இ-ள்] கற்கம் நாறி மணந்த குங்கும களப வண்டலும் } கடைச் சரக்குகளால் வாசனை யுண்டாகி வீசுகின்ற குங்குமமும் கலவைச் சாந்து முதலியவைகளா லுண்டாகும் குப்பைகள்,
அளவு இலா துற்க நாறுதல் கண்டு சுகந்தம் என்று துதிப்பர் } முடிவுஇலா துற்கந்தம் வீசுவதைப் பார்த்திருந்தும் நல்ல வாசனை யுடையது என்பதாக வுடம்பைக் கொண்டாடா நிற்பர் 23

[அ-கை] வேசியர்களை மதித்தவர்கள், கண்களை மான் முதலானவையை ஒப்பிட்டுக் கூறுவோர் அற்பரெனல்

284 பீளையாகிய கண்களைச் சில -
பிணைக ளென்றுபி தற்றுவர் -
சூளை யாரையு மொன்றெ னச்சிலர் -
சொல்லு வாரவர் புல்லரே.

| | |
|---|---|
| [இ-ள்] பீளை ஆகிய கண்களை சில பிணைகள் என்று பிதற்றிவர் | அழுக்கு மாறாத நேத்திரங்களை சில மான்களென்பதாக மயக்க வார்த்தைகளைக் கூறுவர், |
| சிலர் சொல்லுவர் சூளையாரையும் ஒன்று என அவர் புல்லரே | சில பேர்கள் வேசிமார்களையும் ஓர் பொருளென்று கருதி பேசுவார்கள் அவர்கள் அற்பத்தன்மையர்களே 24 |

[அ-கை] என் கொடி சத்தியம், காமன் கொடி மீன் அவன் படை பெண்களே, எனது ஆயுதந் தைரிய சக்கரமெனல்.

285 மெய்ம்மை யேகொடி யெனது வேள்கொடி -
மீன்வி டும்படை மாதரார் -
தம்மை யேயென தவர்த மைத்துணி -
செய்த தைரிய சக்ரமே.

| | |
|---|---|
| [இ-ள்] எனது கொடி மெய்மையே வேள் கொடி மீன் | என்னுடைய வெற்றிக் கொடியானது சத்தியமே, மதன் கொடி மச்சமாம், |
| விடும் படையே மாதரார் தம்மையே | காமன் விடக்கூடிய வாயுதம் ஸ்திரீசுடலோசை சந்திரன் தென்றல் முதலியவைகள், |
| எனது தைரிய சக்ரமே அவரை துணி செய்த | என் தைரியமாகிய சக்ரமே மாதர் முதலிய சேனைகளையறுத்தெரியுமாம் ஆயுதமாம் 25 |

[அ-கை] பெண்களுடலை வெற்றிலைப் பை திருப்பிப் பார்ப்பது போல் பகுத்தறிவோர்க்கு ஆசையற்றுப் போம். போகவே, மன்மதனுமழிவா னெனல்.

286 பாவை மாருடல் பைம றிப்பதோர் -
பார்வை யிற்பொடி பட்டறும் -
பூவை மார்பொடி யாக வேபொடி -
யாகி வேளுயிர் போகுமே -

| | |
|---|---|
| [இ-ள்] பாவை மார் உடல் பை மறிப்ப தோர் பார்வையில் பொடி பட்டு அறும் | பெண்களுடலிலுள்ள அழகும் அதனுல் வரும் ஆசையும், வெற்றிலப் பையை திருப்பிப் பார்ப்பது போல், ஒப்பற்ற விசாரத்தினுல் தூளாய் நாச முற்றெழியும். |
| பூவைமார் பொடி ஆகவே | பெண்களாசை நாசமானவுடன் |
| வேள் உயிர் பொடி ஆகிப் போகும் | மன்மதனுடைய ஆவியுமழிந்து போவதாம். 26 |

*[அ-கை] நிருபகன் உரைத்த பின் பொறுமை கூறுமெனல்.*

287 **இறைவன் முன்புற நிருப கன்றெழு -**
**திவைவி ளம்பிய வெல்லேயிற் -**
**பொறைவ லஞ்செய்து தொழுது றும்பகை -**
**பொடிப டும்படி புகலுமே.**

| | |
|---|---|
| [இ-ள்] இறைவன் முன்பு உற | ஞானவிநோதன் சந்நிதானத்திலிருந்து. |

நிருபகன் தொழுது - ஆராய்ந்தறிந்தோன் வணங்கி நின்று
இவைவிளம்பிய எல்லேயில் – இந்தப் பிரகாரங் கூறிய போது

| | |
|---|---|
| பொறைவலம் செய்து தொழுது | பொறுமையானது பிரதட்சணம் வந்து வாழ்த்தி வணங்கி |
| உறும்பகை பொடி படும்படி புகலுமே | குரோதமா யிருக்குஞ் சத்ருவை நாசஞ் செய்யும் விதத்தைக் கூறுவதாம். 27 |

*[அ-கை.] துஷ்டர்கள் வாய் திறந்தால் மௌனமாய் இருப்பதே நல்லவர்க்குச் சிறப்பெனல்.*

288 **மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்களுடன் -**
**பேசாம லிருந்துவிடு மதுவன்றே பெருந்தகைமை.**

[இ-ள்] மாசாய நாவுடையார் – குற்றம் உற்ற வாக்கு உடையவர்கள்,
வாய் திறந்தால் - வார்த்தைகள் ஆடுவார்களானுல்,

| | |
|---|---|
| என்றும் அறக்கொடுமை செய்தாரை அறியாத செயல் அன்றோ செயல் ஆதல் | எப்போதும் மிக வன் செயலைச் செய்தவர்களையும் கொடிது செய்தார்களென்று நினையாத செய்கையல்லவா தகுந்த செயலும். 29 |

*[அ-கை] எண்ணுவோர் எண்ணம் பேசலிருக்கும் ஈசனென அவரவர் மனம்போல் நடந்து கொள்வது அவிரோதமெனல்.*

**289 பொதுவதுவாய்நிறைந்தபரம்பொருளேபோல்-யாவர்க்கும் அதுவதுவா யிருந்துவிடு மதுவன்றோ வவிரோதம்.**

[இ-ள்] பொதுவு அதுவாய்-யாரார் எப்படியெப்படி நினைப்பரோ அவரவர்க்கப் படியிருக்கும்

| | |
|---|---|
| நிறைந்த பரம் பொருள் போல் | பரிபூரணமாயிருக்கின்ற பரப்பிரஹ்ம வஸ்துவைப் போன்று. |
| யாவர்க்கும் அது அது ஆய் இருந்து விடும் அதுவன்றோ அவிரோதம் | சர்வத்ராளுக்கும் அவரவர்களெண்ணம் போலிருந்து விடுவ தல்லவோ அவிரோதம் என்பதாகும். 30 |

*[அ-கை] புகழ் இகழ் இரண்டும் வாக்கு மாத்திரமே. இன்ப துன்ப நிமித்தம், நமது கன்ம பலமே யெனல்.*

**290 இகழாவ தேது புகழேது தேரி-**
**லிவையாவு மாவ துரையே-**
**அகழ்வார்க ளியாவ ரருள்வார்க ளியாவ-**
**ரனுபோக மாகு மவையே,**

[இ-ள்] இகழ் ஆவது எது-இகழ்ச்சி யென்பதெங் கிருக்கின்றது
புகழ் ஏது தேரில் - புகழென்பதெங்கிருக்கின்றது, ஆராயும் போது
யாவையும் ஆவது உரை - எல்லாமுண்டாவது சொல் மாத்திரமே
அகழ்வார்கள் இயாவர் - துன்புறுத்துவோர் யாவர்கள்
அருள்வார்கள் இயாவர் - துணைபுரிவோர்கள் யாவர்கள்

| | |
|---|---|
| அநுபோகம் ஆகும் அவையே | கர்மவசத்தால் அனுபவிக்கும்படி வந்தவைகளாகும். 31 |

*[அ-கை] கோபித்தபோது சான்றோர்கள் சாந்தமாய் இன் சொல் கூறிச் சிரிப்பர். மற்றவர்கள். கோபிப்பரெனல்.*

**291 எரியான கோப மெழுபோதி லாறி-**
**யினிதாய கூறி யெதிரே**
**சிரியாதி ரார்கள் பெரியோர்கள் சீற-**
**நினைவார்கள் வேறு சிலரே.**

| | |
|---|---|
| [இ-ள்] பெரியோர்கள். எரி ஆன கோபம் எழுபோதில், ஆறி, இனிது ஆய கூறி | மகான்கள் அக்கினி போன்ற கோபமானது உண்டான காலத்தில் சாந்தமாய் இருந்து கொண்டு இனிமையான வார்த்தைகளாடி, |
| எதிரே சிரியாது இரார்கள், வேறு சிலர் | எதிர் நின்று நகை செய்யாமல் இருக்கமாட்டார்கள், வேறான கீழ் மக்கள் |

சீற நினைவார்கள் - கோபிப்பதற்கு நினைப்பார்கள். 32

*[அ-கை] குவிந்த முகத்துடன் கோபமுற்ற வரை நல்லோர்கள் புன்னகையால் மலரும்படி செய்து, மன வெறியகற்ற இனிமையையும் செய்வரெனல்.*

**292 முகுளி தம்பெருகு முகமொ ழிந்துவிட-**
**முறுவல் கொண்டு முக மலர்வனே,**
**வெகுளி தங்குமன வெரிகெ டும்பரிசு-**
**மிகவு மங்கினிமை விளைவனே.**

| | |
|---|---|
| [இ-ள்] குமுளிதம் பெருகும் முகம் ஒழிந்து விட | அரும்பென குவிந்திருக்கின்ற முகமானது மாறி மலரும் பொருட்டு |
| முறுவல் கொண்டு முகம் மலர்வன் | சிறுநகை செய்து முகமலர்ந்திருப் பவனாய் |
| வெகுளி தங்கும் மனம் வெரி கெடும் பரிசு | கோபத்தோடுற்ற மனக்கலக்கம் நீங்கும் படியாக |

மிகவும் அங்கு இனிமை விளைவன் } மிகவும் அவ்விடத்து சந்தோஷத்தை உண்டாக்குவன் 33

[அ-கை] தீச் சொல்லரும் போது தேவாமிர்தம் போன்ற இன் சொல்லால் அவிப்பன். மரணம் வந்த போதுங் கர்மம் என்று அநுபவிப்பனெனல்.

293 மொழித ருங்கனலு மவிய நின்றமிர்த-
மொழியெ னுந்தடினி பொழிவனே
அழித ரும்படியென் னுடலில் வந்தனவெ-
னநுப வங்களென வயில்வனே.

[இ-ள்] மொழி தரு கனலும் - கடுஞ்சொல்லாலுண்டாந் துன்பாக்கினியும்
அவிய நின்ற அமிர்த — அணைந்து போகுபடியாக அமிர்தம் போன்ற
மொழி எனும்தடினி — வாக்காகிய மேகத்தால் வசனமாகிய மழையை
பொழிவன் - பெய்யச் செய்வன்
அழிதரும்படி என் — மரண மடையும்படியாக வெனது
உடலில் வந்தன - சரீரத்திற்கு வருமேயானால்
என் அநுபவங்கள் - யான் அநுபவிக்க வேண்டியது
என அயில்வன் - என்று அபவிப்பேன் 34

[அ-கை] பொறுமையாகிய ஆயுதத்திற்கு கோபனை யிரையாக்குவே னெனல்.

294 மிகையாவென் பொறைப்படைக்கு விருந்தாக்கி விடுகின்றேன், பகைபாவங் கொடுமைகொலை படையுடைய கோபனையே.

[இ-ள்] மிகையா என் பொறை படைக்கு } மிகுந்திருக்கின்ற எனது பொறுமையென்னும் ஆயுதத்திற்கு
பகை பாவம் கொடுமை-எதிரியும் பாவங்களும் வன் செயலும்
கொலை படை உடைய கோபனை விருந்தாக்கி விடுகின்றேன் } கொலை முதலியவற்றை ஆயுதமாகக் கொண்ட குரோதத்தை விருந்தாகக் கொடுத்து அழிக்கின்றேன் 35

[அ-கை] பொறுமை கூறிய பின்னர் சந்தோடன் கூறல்.

295 பொறைபெரிது மிவையோதப் புகழ்பெரிய சந்தோடன்
நிறையுடையா னடியேத்தி நிறைவுடனின் றறைவுறுமே.

| | |
|---|---|
| [இ-ள்] பொறை பெரிதும் இவை ஓத புகழ் பெரிய சந்தோடன் | பொறுமையானது விசேஷமான இவ்விஷயங்களைக் கூறவும், கீர்த்தி மிக்க சந்தோடன் |
| நிறை உடையான் அடி ஏத்தி | பரிபூரண சொரூபனை ஞான விநோதன் திருவடிகளை வணங்கி வாழ்த்தி |
| நிறை உடன் நின்று அறை உறும் | திருப்தியால் நிறைந்திருந்து கூறலானன் 36 |

[அ-கை] *இணையற்ற பேரானந்தத்தைப் பெற்ற ஞானிகள் அழியும் அற்ப விஷயங்களைப் பற்றமாட் டார்களெனல்.*

296 என்றும் பொருவரிய வின்பப் பொருளுடையார்-
பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ.

| | |
|---|---|
| [இ-ள்] என்றும் பொருவரிய இன்பப் பொருளுடையார் | எக்காலத்தும் உவமையற்ற பரமானந்தப் பிராப்தியை பெற்றிருக்கின்ற மகாத்மாக்கள் |
| பொன்றும்பொருளும் பொருள் ஆக போற்றுவரோ | [பார்க்கும் போதே] அழிகின்ற உலக விஷயங்களை சுகசாதனங்களாக மதிப்பார்களா? 37 |

[அ-கை] *வாழ்வு அழிந்தாலும் வாய் திறந்து கேட்க வெட்கப்படுவார்களெனல்.*

297 வாணா ளொழிந்தாலும் வாய்விண்டு தாம்வேண்ட,
நாணா தொழிகுவரோ நன்றாய நாவுடையார்.

[இ-ள்] நன்று ஆய நாவு உடையார் - உயர் குடியிற் பிறந்த நல்ல வாக்கு உடையார்
வாழ் நாள் ஒழிந்தாலும் - ஜீவித காலமழிந்து போனாலும்
வாய்விண்டுவேண்ட - வாய் திறந்து யாசிப்பதற்கு
நாணாது ஒழிகுவரோ - வெட்கப் படாமலிருப்பார்களா? 38

[அ-கை] ஆசையுற்றலைந்தவர்களும் விரும்பியதைப் பெருவதைக் கண்டோம். வாழ நினையாதவர்களில்லை ஆயினும், விடாமுயற்சி செய்யினும் அடையாத பொருள் அடையாதெனல்.

298 உளம்படு பேராசை நோய்கூர மேன்மே-
லுழன்றவர் வாழாத வாகாண லாமே,
வளம்பட வாழ்வோமெ ஞுதார்க ளியாரே-
வருந்தினும் வாராது வாராது தானே.

| | |
|---|---|
| [இ-ள்] உளம்படு பேராசை நோய் கூரம் மேல் மேல் உழன்றவர் | மனத்திலுண்டாகிய மிகுந்தாசையாகியவியாதியின் கொடுமையால் மீளமீள உலைந்தலைந்தவர்களும் |
| வாழாதவா காணல் ஆமே | இன்பம் பெரு திருத்தலைப் பார்க்கலாம் |

வளம்பட வாழ்வோம் - செல்வம்பெற்று இன்பத்தோடிருக்க வேண்டும்

எனுதார்கள் இயாரே - என்று நினையாதவர்கள் இவ்வுலகத்திலுண்டா?

| | |
|---|---|
| வருந்தினும் வாராது வாராது தானே | விடாமுயற்சியால் துன்புற்ருலும் நமக்கு அடையாத பொருளடையாதென்பது உறுதியாம் 39 |

அ-கை] விஷய போகங்களை மிகுதியாகப் பெற்றவர்களும் அதனல் சாந்தி பெருது! விஷயங்களை விட்டவர்களே சாந்தி பெறுவர் எனல்.

299 புலன்றலை கொண்டேறு புன்போக மேன்மேற்-
புணர்ந்திட வுண்டாகி வந்தாலு மாரு,
அலந்தலை கண்டாசை யொன்ருேடு ருதே-
யறிந்தவர் சந்தோடம் வந்தாறி ஞரே.

| | |
|---|---|
| [இ-ள்] புலன்தலை கொண்டு ஏறு புன் போகம் | பஞ்சேந்திரிய விஷயங்களை சுகஸ்தானமாகக் கொண்டநுபவிக்கும் அற்ப சுகத்தை |

மேல்மேல் புணர்ந்திட - மறுபடியும் மறுபடியும் அடையப் பெற்று

உண்டாகி வந்தாலும் - அநுபவித்து வந்தவர்களும்
ஆறு அலம் தலைகண்டு - சாந்தமடையாமல் சஞ்சலத்திற்கு இடமென்றறிந்து
அறிந்தவர் ஆசை - தத்துவ ஞானிகள் ஆசையினை
ஒன்றோடு உறாதே - எதனிடத்திலும் வைக்காமல்

சந்தோடம் வந்து ஆறினர் } சர்வதுக்கநிவிர்த்திப் பரமானந்தப் பிராப்தியை அடைந்தவர்களாய் சாந்த முற்றனர். 40

[அ-கை] இல்லையென்று ஒருவரிடம் இரக்காத நெறியே நன்னெறியெனல்.

300 இல்லாத பொழுதின்ப மிதுவென்று பிறர்பால்
செல்லாத செலவென்ப செலவாய செலவே.

[இ-ள்] இல்லாத பொழுது - வறுமை வந்த காலத்து
இன்பம் இது வென்று - சுக சாதனம் இவ்வஸ்து வென்று
பிறர் பால் செல்லாத - அன்னியரிடத்திற்குப் போகாத

செலவு, என்ப, செலவு ஆய செலவே } மார்க்க மென்பதே முடிவான மார்க்கமாகும். 41

[அ-கை] சுமப்போன் வீழும்போது சுமை தானேவிழல் போல், சிருஷ்டித்தவனே அழியும் போது அவன் சிருஷ்டித்த உலகம் அழியாதிருக்குமா வெனல்.

301 படைத்தவனி றுந்திசைப டைத்தபொரு ளெங்கே-
எடுத்தவன்வி ழிற்சுமைவி ழாமலுமி ராதே.

[இ-ள்] படைத்தவன் இறும் திசை படைத்த பொருள் எங்கே } சிருஷ்டித்த பிரம்ம தேவன் அழியுங் காலத்தில் சிருஷ்டித்த வஸ்துக்களும் எங்கிருக்கும்

எடுத்தவன் விழில் சுமை விழாமல் இராதே } சுமையெடுத்தவன் கீழே விழுந்தால் சுமையுங் கீழே விழாமலிருக்குமா 42

[அ-கை] தான் செய்த கர்ம பலாநுபவ முடிவில் போக சாதனங்கள் அழிவதோடு போக்தாவும் அழிவனெனல்.

302 ஆமாகும் வழியால ருந்நித்த டையற்,
றுமாய்தல் பொருள்மாய்த றவிராது பிரிவே.

[இ-ள்] ஆம் ஆகும், வழியால் அருந்தி, தடை அற்று — செய்தாயிருக்கின்ற கர்ம பலத்தை அநுபவித்தாகு முறையால், அநுபவித்தபின், தடையின்றி
தாம் மாய்தல் - கர்த்தா போக்தாவாய் தாமழிவதும்
பொருள் மாய்தல் - போக சாதனங்களான வஸ்துக்கள் அழிந்து போவதும்
தளராது பிரிவே - தாப்பாமல் பிரிந்து போவதேயாம். 43

*[அ-கை] வழக்கிட்டு உண்ணும் வயிறு சாணு யிருந்தும் நிறையாதிருப்பது ஆச்சரிய மெனல்.*

303 வாதாகி நுகர்கின்ற வயிறுள்ள தொருசாண்,
ஏதாலி தமையாதி தென்னேயி தென்னே.

[இ-ள்] வாது ஆகி நுகர்கின்ற வயிறு உள்ளது ஒரு சாண் — போரிட்டுக் கொண்டு புசிக்கின்ற உடம்பினுள் வயிரு இருப்பது ஒரு சாணளவே (அப்படியிருந்தும்)
ஏதால் இது அமையாது - எதனாலிந்த உதரம் நிறைவதில்லை
இதுஎன்னே இதுஎன்னே - இதாச்சரியம் இதாச்சரியம். 44

*[அ-கை] நிராசை யென்னும் வச்சிராயுதத்தால், ஆசையான பேயும் லோபனும் அழிவா ரெனல்.*

304 ஏசாத பற்றின்மை யெனுமா யுதத்தால்,
ஆசாபசாசோடு மடலோ பனிறுமே.

[இ-ள்] பற்றின்மை - ஆசை யற்றிருத்தல்
எனும் ஆயுதத்தால் - என்கின்ற ஆயுதத்தைக் கொண்டு
ஆசாபசாசோடு - இச்சை யாகிய பேயுடன்
அடல் லோபன் இறுமே — வலியுற்ற லோபவனுனவன் நாச மடைவன். 45

*[அ-கை] சந்தோடன் இவ்விதம் கூறவும் கேட்ட ஞான விநோதன் ஆச்சரியப் பட்டார் எனல்.*

305 சந்தோ டனிவை யிவை சாற்றவே,
அந்தோ வென்றருள் செய்யு மளவிலே.

[இ-ள்] சந்தோடன் இவை இவை சாற்றவே — சந்தோடனுனவன் இவ்விதமான விஷயங்களைக் கூறிய மாத்திரத்தில்

அந்தோ வென்று அருள் செய்யும் அளவில் } என்ன இவ்வாச்சரியம் என்று ஞான விநோதன் அருள்புரியும் சமயத்தில். 46

*[அ-கை] நிவர்த்தன் கூறல்.*

306 விவகா ரபரா முகன் மேவரும்,
பவகாலன் பதம்பணிந் தோதுமே.

[இ-ள்] விவகார பராமுகன் - பிரவிருத்தி அற்று இருப்பவன்

மேவ அரும்பவகாலன் பதம் பணிந்து ஓதும் } அடைதற்கரியவனும் பிறப்பொழிப்பவனுன ஞானவிநோதன் திருவடிகளில் வணங்கிக் கூறுவன். 47

*[அ-கை] மாதபிதாக்களுக்கு பத்தி செய்கின்றவர் முன் பிறவிகளிலுள்ள பல பெற்றோர்களைப் போல் இவர்களுமா மென்ல்.*

307 அத்தனொ டன்னைக் கன்புசெய் கின்று-
ரளவில் பிறப்புற் றவையவை தோறும்,
எத்தனை தாயுந் தந்தையு முற்று
ரித்தனை யன்றோ விவர்களு மிங்கே.

[இ-ள்] அத்தனொடு அன்னைக்கு அன்பு செய்கின்றூர் } (உலகத்தவர்) தந்தையரோடு தாய்மார்களுக்கு வழிபாடு செய்து கொண்டிருக்கின்றனர்

அளவு இல்பிறப்பு உற்று அவை அவை தோறும் } எண்ணற் றிருக்கின்ற பிறவிகளை யடைந்து அவ்வப் பிறவிகடோறும்

எத்தனை தாயும் தந்தையும் உற்றூர் இத்தனை அன்றோ } எண்ணற்ற தாயர் தந்தையர்கள் சுற்றத்தவர்களைப் பெற்றிருந்தார் இவர்களைப் போலல்லவா

இங்கே இவர்களும் – இந்த சென்மத்திலுள்ள இம்மாதா பிதாபந்துக்களு மாவர். 48

*[அ-கை] உடம்பிலுண்டாகின்ற புழுக்களைப் போல் உண்டாம் புத்திரனிடத்தில் விசேட மென்னை யெனல்.*

308 சாலவு திக்கும்பு ழுவுட றன்னில்-
தகவின்ம லத்தோ டொழுகுமு டம்பே,
போலவு திக்கும்பு ழுவினை யென்னே-
புத்திர னென்றே புந்திசெய் தாரே.

| | |
|---|---|
| [இ-ள்] உடல் தன்னில் சால உதிக்கும் புழு | தூல தேகத்தின் கண் மிகுந்துண்டாகின்ற கிருமிக் கூட்டங்கள் போன்று |
| தகவுஇல் மலத்தோடு ஒழுகும் உடம்பே போல உதிக்கும் | தகுதியற்ற மலசலத்துடன் நவத்துவாரங்களிலும் ஒழுகும் தன் தேகத்தைப் போன்று உண்டாகும் |

புழுவினை என்னே - புழுப்போன்ற பிண்டத்தையென்ன ஆச்சரியம்

| | |
|---|---|
| புத்திரன் என்றே புந்தி செய்தார் | எனது மகனென்பதாக நிச்சயித்து சுகசாதன மென்றிருக்கின்றனர். 49 |

*[அ-கை] தாய் தந்தை தார புத்ராதிகள் முற்பிறப்பினும் சேர்ந்தவர்களில்லை இனிமேலும் கூட வருவோரில்லை மத்தியில் வந்தவ ரெனல்.*

309 வந்தவ ழிக்கண் வந்திலர் போகும்-
வழியினும் வருவா ரிலரிடை வழியார்,
தந்தைம கத்தாய் தம்மொடு வந்தார்-
தாரமு முற்றார் தாமுமெ லாமே.

| | |
|---|---|
| [இ-ள்] தந்தை, மகத், தாய், தாரமும் உற்றார் தாமும் | பிதாவென்றும் பிள்ளையென்றும் மாதாவென்றும் மனைவியென்றும் பந்துக்கள் என்றும் |

தம்மொடு வந்தார் எல்லாமே - தன்னொடு வந்தவர்கள் எல்லாரும்

வந்தார் எலாமே - தன்னொடு வந்தவர்களெல்லாரும்
போகும் வழியினும் - இனி வரும் பிறப்பைத் தொடர்ந்து
வருவார் இலர் - வரக் கூடியவர்களும் அல்ல
இடை வழியார் - மத்தியில் வந்தவர்களாகும். 50

*[அ-கை] துன்பம் வந்து வருத்தும் போது தாம் அநுபவிக்காமல் பந்துக்கள் பங்கு கொள்ளவில்லை! யதைத் தாமேயநுபவித்தலால் தனக்குத் தாமே துணையாமெனல்.*

309 அமருமு டம்போ டழிதுயர் வந்தே-
யலம்வரு போதங் கனுபவி யாதே,
தமர்கள்ப கிர்ந்தா ருளரென வுண்டோ
தம்முற வாவார் தாமல தின்றே.

[இ-ள்] அமரும் உடம்போடு - கர்மத்தால் பொருந்திய சரீரத்துடன்
அழிதுயர் வந்து - நிலையற்ற துன்பமானது வந்து
அலம் வரும் போது - சஞ்சலமுற்ற காலத்து
அங்கு அநுபவியாது - அவ்விடத்து அநுபவிக்காமல்
தமர்கள் பகிர்ந்தார் - உறவினர்கள் பங்கிட்டுக் கொண்டது
உளர் என உண்டோ - இருக்கின்றனரென்பதுண்டா

தம் உறவு ஆவார் } தனக்கு உறவாகக் கூடியவர்கள்
தாம் அலது இன்று } தனது எதார்த்த சொருபமே யன்றி வேறில்லை. 51

[அ-கை] கர்ம முடிவில் எல்லாரும் கழன்று போகும் போது யாவர் உறவாயிருப்பரெனல்.

310 ஒழிந்தன வேறற வொன்றுட ருனும்,
அழிந்தது தம்முட னுமுற வாரே.

[இ-ள்] ஒன்று வேறு அற ஒழிந்தன } (தன்னை வினையினுற்) பொருந்திய பொருள்கள் பேதமற்று (முடிவில்) அழிவுற்றன
உடல் தானும் அழிந்தது - தேகமும் அழிவுற்றது (எனில்)
தம்முடன் ஆம் உறவுயார் - தன்னுடனுறவு ஆகின்றவர் இயாவர்; 52

[அ-கை] சமுசார சாகரத்திலுண்டாம் அலைகளான துவந்துவங்களைக் கடந்தவர்களே பந்துக்களெனல்.

311 சுற்றமொ டுற்றது வந்துவ மெல்லாம்,
அற்றவர் தம்முட னற்றவர் தாமே.

[இ-ள்] சுற்றமொடு உற்ற - பந்துக்களோடு உண்டாயிருக்கின்ற
துவந்துவம் எல்லாம் - சுகதுக்கம் பிறப்பு இறப்பு பசி தாகம் ஆகிய இரண்டு தருமங்கள்
அற்றவர் தம்முடன் - துறந்தவர் யாவரவர்களோடும்
நற்றவர் தாமே - நல்ல தவத்தவர்களே (பந்துக்களாம்) 53

[அ-கை] சமுத்திரத்தில் அலைகளற்ற பின்னர் தீர்த்த மாட நினையாதது போல் உலக விவகாரத்தை யொரு மன்தாய் ஒழிக்கா விட்டால் சன்மார்க்கத்திற் செல்ல முடியாது எனல்.

312 கதறிய வாழி யாறி யாடுதல்-
கருதினர் யாவர் தாமி யாவையும்,
உதறிய ருத போது நாடொறு-
மொழுகவி டாதவ் வார வாரமே.

[இ-ள்] கதறிய ஆழி ஆறி ஆடுதல் - இரையுஞ் சமுத்திரத்தின் அலையற்ற பின் தீர்த்தமாட-
கருதினர்யாவர் தாம் - நினைப்பவர்களியாரிருக்கின்றனர்
இயாவையும் உதறி - பிரவிருத்தியனைத்தையும் தள்ளிவிட்டு
அருத போது நாள்தொறும் - அடியோடு நீங்காத போது என்றும்

| | |
|---|---|
| அவ் வாரவாரம் ஒழுக விடாது | அவ் வுலகக் கிளர்ச்சி யானது சன் மார்க்கத்தில் செல்ல விடாது. 54 |

[அ-கை] குளித்தவன் சேற்றை விபூதியாக தரித்தால் எப்படிப் பயனில்லையோ அதுபோல் மனத்துறவடையாத போது மறுபடியும் பாசபந்தமாம் எனல்.

313 கழியநி லாதபோது சேறது கழுவியு மிலாப மேது யாவையு
மொழியநி லாத போது மாசறவுதறவொணுது பாச மூடுமே

| | |
|---|---|
| [இ-ள்] சேறு கழிய நிலாத போது அது கழுவியும் லாபம் ஏது | உடம்பில் குழை சேறு பூசும் வரையும் அச் சேற்றைக் கழுவினதால் பய னென்ன? |
| யாவையும் அழிய நிலாத போது மாசு அற உதறவுணுது பாசம் மூடுமே | (அதுபோல்) சகலத்தையும் விட்டு நீங்காத போது குற்றமின்றி தள்ளிவிட முடியாமல் அஞ்ஞானம் மறைப்பதாகும். 55 |

[அ-கை] ஆசையான கட்டுக்களை யெல்லாம் நிராசையென்கிற வச்சிராயுதத்தால் வெட்டித் தளளக்குவன் எனல்.

314 உறவாடு பந்தங்க ளெல்லாமு திர்ப்பன்,
துறவாகும் வச்ராயு தத்தாற்று ணித்தே.

[இ-ள்] உறவு ஆடு பந்தங்கள் எல்லாம், } சுற்றம் போன்றிருக்கின்ற கட்டுகள் அனைத்தும், பற்றின்மையாகின்ற
துறவு ஆகும்
வச்ராயுதத்தால் துணித்து உதிர்ப்பன் } வச்சிராயுதத்தைக் கொண்டு வெட்டிப் பொடியாக்குவேன். 56

[அ-கை] 57, 58-ம் பாட்டில் சிவப்பிரகாசத் தினின்றும் தோன்றிய ஞான விநோதன் முன்பு தம்படைகள் யாவும் தமது திறனைக் கூறினர் எனல்.

315 வடிவற்ற கோன்மைந்தன் முன்னின்று மறைநா,
முடிவற்ற பலகோடி மொழியாத முன்னே.

[இ-ள்] வடிவு அற்ற கோன் மைந்தன் முன் னின்று } உருவின்றிய பரமாத்மாவின் தோற்றமான ஞான விநோதன் சந்நிதானத்திலிருந்து
மறை, நா முடிவு அற்ற பல கோடி மொழியாத முன்னே } வேத வேதாந்தங்கள் வாக்குகள் அளவின்றிய பற்பல கோடிகளாலும் சொல்ல முடியாமலிருக்கின்ற சந்நிதானத்தில் (குளகம்) 57

316 தத்தந்தொ ழிற்கொண்டு தாழ்வின்மை யின்னே,
முத்தன்பெ ருஞ்சேனை யெல்லாமொ ழிந்தே.

[இ-ள்] தம் தம் தொழில் கொண்டு - தங்கள் தங்களுடைய பிரவிருத்தியைக் கொண்டு
தாழ்வு இன்மை இன்னே - குறைவில்லாமல் இத்தன்மையவாய்
முத்தன் பெரும் சேனை - ஞான விநோதன் பெரிய படையானது
எல்லாம் மொழிந்து - தம் திறமனைத்தும் கூறலாயிற்று. 58

## 20. ஞான வேந்தன் படையெழுச்சி

317 தஞ்சேனை கண்டன்பு தாமுற்றிவ் வாறே,
நஞ்சேய னுன்மேன டக்கின்ற பொழுதே.

[இ-ள்] தம் சேனை கண்டு - தனது சேனையின் பலத்தைப் பார்த்து
தாம் அன்பு உற்று - ஞான வேந்தர் கிருபை யுற்றவராய்

இவ்வாறே நஞ்சே அனன் மேல் நடக்கின்ற பொழுது } இந்தப்படியே விஷத்திற்குச் சமான அஞ்ஞனை நோக்கிச் செல்கின்ற காலத்தில், 1

*[அ-கை] சொரூபானந்த சுவாமிகளின் திருவடிகளை வணங்கி வேதங்களே குதிரைகளாகவும் அதை யுணரும் புத்தியே சாரதியாகவும் தனதேதாசர்த்த சொரூபம் தேராகவும் அமர்ந்தனரெனல்.*

318 வித்தக வேதங்க ளேவாசி யாவே-
மெய்த்திற னாய்நின்ற தோர்பாக னாவே,
தத்துவ மாகின்ற தேரேறி னாரே-
தற்சொரு பானந்தர் தாள்சூடி னாரே.

[இ-ள்] தத் சொரு பானந்தர் தாள் சூடினார் } பிரஹ்மமே சொருபமாயிலங்குகின்ற சற்குரு நாதன் திருவடிகளை தன் சேனை வணங்கி

விந்தக வேதங்களே வாசி ஆவே } ஞானத்தின் தாற்பரிய மான வேதங்களே குதிரைகளாகவும்

மெய்த் திறனாய் நின்றதுஓர் பாகன் ஆவே } உண்மைப் பொருளில் திடமாய் நிலைத்திருக்கின்ற புத்தியே சாரதி யாகவும்,

தத்துவம் ஆகின்ற தேர் ஏறினார் } சுபார்வமான தனது சொருபமே தேராகவும் ஆரோ கணித்தார். 2

*[அ-கை] பகைவரையுற்றும் அன்பு உள்ளிடமாயும் பிராணாதி வாயுக்களே குதிரைகளாயும், ஞானமே யானைப் படைகளாயும் தெளிந்த புத்தியே தேராகவும் தம்மைப் போன்றவரே படை வீரராயும் இருப்பதால் என்ன சொல்ல வேண்டுமெனல்.*

319 வாதக ரோடினு மாதரவோ டோர்கால்-
வாசியி லாவாசி யேவாசி தானும்,
போதமே போதக மாந்தேர்வு தேர்தாம்-
போல்பவ ரேவீர ரேதோது மாறே.

[இ-ள்] வாதக ரோடினும் ஆதர ஓடு ஓர்கால் } பகைவ ரிடமாயிருப்பினும் அதுவும் அன்பரிட மாவதாம்

| | |
|---|---|
| வாசி இலா வாசியே<br>வாசி தானும் | ஒப்பற்ற பிராணாதி வாயுக்களே<br>குதிரைகளா யிருப்பதாம் |

போதமே போதகமாம் — ஞானமே யானைப் படைகளாகும்
தேர்வு தேர் — நிச்சய புத்தியே தேராகவும்
தாம் போல் பலர் வீரர் — தங்களைப்போன்றவர்களே வீரராம்
ஏது ஓதுமாறு — இனி என்ன சொல்ல வேண்டியிருக்கிறது. 3

*[அ-கை] உண்மையில் ஒன்றுமிலனாகி விவகாரத்தில் எல்லாமாயிருக்கும் ஞான வேந்தனுடைய படைகள் அஞ்ஞனது அவித்யா புரத்தை யடைந்த தெனல்.*

**320** தான தேதுமில னாகி யாகவல-
தம்பி ரானுடைய தானைமால்,
யானை தேர்புரவி லஞ்ஞ மன்னனது-
மாய மாபுரம ணைந்ததே.

| | |
|---|---|
| [இ-ள்] தான் அது<br>ஏதும் இலன் ஆகி<br>ஆக வல | உண்மையில் தன்னிடத்தில் நாம ரூபமாகக் காணும் உலக மில்லா திருந்திருந்தும் விவகார திசையில் எல்லாமாயிருக்கும் |

தம்பிரான் உடைய தானை - ஞானவேந்தனுடைய சேனையானது
மால் யானை தேர் புரவி - மலை போன்ற யானைகளும் இரதம் குதிரைகளும்
அஞ்ஞ மன்னனது - அஞ்ஞ வேந்தனது

| | |
|---|---|
| மாய மா புரம்<br>அணைந்தது | மாயையாலாக்கப்பட்ட பெரிய பட்டணத்தை யணுகியது. 4 |

*[அ-கை] ஞான வேந்தன் தமது சேனைகளைச் சேர்ந்து செல்ல வேண்டுமென்றவுடன்; தர்மம் செல்லாத வஞ்ஞனது அவித்யாபுரத்தில் சென்று சூழ்ந்ததெனல்.*

**321** புறம்பு ருதபடி சூழ நம்படைஞர்-
போது கென்றருளு போதிலோர்
அறம்பு காதபடை வீடு சூழவும்-
அடங்க வும்படைஞ ரானவே.

| | |
|---|---|
| [இ-ள்] நம் படை<br>ஞர் புரம் உருத படி<br>சூழ போதுக | நமது சேனைகளனைத்தும் தனியாகச் செல்லாமல் ஒன்று சேர்ந்து செல்லுங்கள் |

என்று அருளு போதில் — எனத்திருவாய் மலர்ந்த போதில்
ஓர் அறம் புகாத — ஒரு தர்மமும் உள்ளே செல்லாத
படை வீடு சூழவும் — அஞ்ஞனது பாசறையைச் சுற்றிலும் உள்ள

அடங்கவும் படை ஞர் ஆனவே } எல்லாமுமே சேனைகளாகவே இருந்ததாம்.

[அ-கை] ஞான வேந்தன் மும்மூர்த்திகளல்ல அவர்களின் காரணரே வந்தனரென்று வெற்றி வீரர் அவித்யாபுரத்திற்புகுந்தரெனல்.

322 முகுந்த னன்றரனு மன்று நாலுதிசை-
முகனு மன்றவர்த மூலமே,
புகுந்த தென்றிகல்பு றம்பு கண்டவ-
ரடங்க வுள்புகுது போதிலே.

[இ-ள்] முகுந்தன் அன்று — மகாவிஷ்ணுவும் இவரல்ல,
அரனும் அன்று — சிவபெருமானுமி வரல்ல,
நாலு திசை முகனும் அல்ல — நாலு திசைகளிலும் முகங்களுள்ள பிரம்மாவும் அல்ல,

அவர்தம் மூலமே புகந்தது என்று } அவர்களின் காரணப் பிரம்மமே உள் சென்றிருக்கின்றதென்று.

இகல் புறம்பு கண்டவர் — பகையை வெற்றிகொண்ட சேனைகள்

அடங்க உள் புகுது போதில் } இரத கஜ துரக பதாதிகளனைத்தும் உள்ளே சென்ற சமயத்தில், 6

[அ-கை] பரிபூரண வஸ்துவே பார்மேல் வந்ததெனச் சிலர் கூற, சிலர் வுருவற்ற பொருள் உலகத்தில் உருவமாக வந்து ஊழியஞ்செய்ய வருமோவென நகைத்தனரெனல்.

323 மருவி யெங்குமுற நின்றபொரு ளின்று புவிமேல்-
வடிவு கொண்டுவரு கின்றதென வந்து மொழிவார்,
அருவ மென்றுமொழி கின்ற பொருளிங்கு வருதற்-
கடியென்னென்று சிலர் நின்றுநகை கொண்டு விடுவார்

[இ-ள்] மருவு எங்கும் உற நின்ற பொருள் இன்று புவிமேல் } பொருந்தியெவ்விடத்தும் பரிபூரணமாயிருக்கின்றவஸ்துவானது இக்கலியுகத்து மண்ணுலகத்தில்

வடிவு கொண்டு வருகின்றது என வந்து மொழிவார் — சற்குரு மூர்த்தியாகவுருவெடுத்து எழுந்தருளுகின்ற தென்பதாக வந்தவர்கள் கூறா நிற்பர்

அருவம் என்று மொழிகின்ற பொருள் — உருவமில்லையென்று கூறுநின்ற பர வஸ்துவானது.

இங்கு வருவதற்கு — இக்கலியில் பூமியில் வந்தற்கு

அடி என் என்று சிலர் நின்று நகை கொண்டு விடுவார் — காரணம் யாதென்பதாகச் சிலர் இருந்து நகைத்துக் கொண்டிருப்பார்கள். 7

[அ-கை] *சமய வாதங்கள் உண்மையல்ல வென்றனர் தவ நிறைவுற்றதென்றனர், அடைய வேண்டிதயடைந்தேர மென்றனர். அஞ்ஞனது பட்டினம் அழிந்ததென்றயர்ந்தனர் எனல்*

324 சமய மென்பனவு மொன்றுமில தென்று மொழிவர்-
தவமு டிந்த தென நின்று சமைவார்,
அமையு நந்துழனி யென்றமைவு வந்து விடுவா-
ரறிவி லன்புரம் ழிந்ததினி யென்றயருவார்.

[இ-ள்] சமய என்பனவும் ஒன்றும் இலது என்று மொழிபவர் — பற்பல சமயங்களென்பதாகக்கூறுவதும் ஒன்றுகிலும் சித்தாந்த பட்சம் அன்றெனத் துணிந்து கூறுவர்.

தவம் முடிந்தது முடிந்ததென நின்று சமைவார் — தவமானது முடியுற்றது முடிவுற்றதென்று இருந்து கூறுவர்

அமையும் நம் துழனி என்று அமைவு வந்து விடுவர் — அடையப்படும் நமது வேண்டு கோளென்று அமைதி யடைந்திருப்பார்

அறிவிலன் புரம் அழிந்தது இனி என்று அயருவார் — அஞ்ஞ வேந்தனது பட்டினம் நாசமுற்றது இனிமேலென்று ஆச்சரியப் படுவர். 8

(அ-கை) *குடிகெட்டதெனச்சிலர் தளர்ந்தனர், சிலர் குலமே யழிந்ததென நடுங்கினர், சிலர் ஒரு பொருளுண்மையெனக்கூறிய வேதவாக்கியங்கள் இன்றுண்மையாயின வென்றனரெனல்.*

325 குடிகெ டும்படிபு குந்ததுணர் வென்று தளர்வார்-
குலம டங்கலுமு டிந்ததென நின்று குலைவார்,
முடிவில் வந்துறுவ தொன்றெனமொ ழிந்த கணியார்-
மொழியு மின்றுதலை வந்ததென நின்று மொழிவார்.

(இ-ள்) குடி கெடும் படி புகுந்தது உணர்வு என்று தளர்வார் — சமுசாரபந்த மழியும் படியாக ஊடுருவிச் சென்று விட்டது பிரம்மகார விருத்தி ஞான மெனத் தளர்வார்

குலம் அடங்கலும் முடிந்தது என் நின்று குலைவார் — அஞ்ஞனும் அவன் வம்ச முழுவதும் அழிந்த தென்று இருந்து நடுங்குவார்கள்.

முடிவில் வந்து உறுவது ஒன்று என மொழிந்த கணியார் மொழியும் — அந்தத்திலடைந்திருப்பது அத்வைத சொருபமே யென்று கூறிய வேதாந்த சாஸ்திரங்களின் மகா வாக்கியங்களும்

இன்று தலை வந்தது — இப்போதுஇடம் பெற்றுவிட்டது என நின்று மொழிவார் — என்றிருந்து பேசா நிற்பர். 9

*(அ-கை) பற்பல சொல்வதில் பயனில்லை. எண்ணம் போலப் பிறவித் துன்பம் குறைவது பார்த்தும், நீர் ஞான வேந்தனை அவதாரபுருஷனல்ல வென்பதேன் என்பரிப்படியிருவர் சேனைகளுமியம்பினவெனல்.*

326 பறைவ தென்கொல்பல விங்கிவர்க ணின்று கெடுவீர்-
பவமொ ழிந்துவரு கின்றபடி கண்டு மினநீர்,
இறைவ னன்றெனவி யம்புவதெ னென்று மொழிவா-
ரிருவர் தங்களிலி யம்புவத டங்க விவையே.

இவர்கள் பல இங்கு பறைவது என்கொல் — இங்குள்ளவர்கள் பற்பல விதமாகச் சொல்வதெதனால் (அப்படி நினைத்தால்)

இன்று கொடுவீர் — இன்றே யழியும் படியாய் நேரிடும்

பவம் ஒழிந்து வருகின்றபடி கண்டும் — சம்சார பந்த மழிந்து வருவதை முறையாய் அறிந்திருந்தும்.

இனம் நீர் இறைவன் அன்று என இயம்புவது என்று மொழிவார் — இன்னும் நீங்கள் பரம்பொருள் அல்லாதவன்என்று கூறுவதற்குக் காரண மென்ன என்பதாகக் கூறுவார்கள்.

| | |
|---|---|
| இருவர் தங்களில் இயம்புவது அடங் கலும் இவையே | இரு படைகளிலும் சொல்லிக் கொண்டிருக்கின்றது எல்லாமும் இதே வார்த்தையேயாம். |

# 21. அஞ்ஞ வேந்தன் படை யெழுச்சி

(அ-கை) *காமக் குரோதாதி படைகளோடுற்ற அஞ்ஞ வேந்தனுக்கு தூதர்கள் வந்து ஞான வேந்தன் படைகள் வந்து வளைத்துக் கொண்டன எனல்.*

329 விடர்வி ளங்கு தானை யஞ்ஞ வேந்த னுக்கு மாந்தர் போய்ச்
சுடர்வி ளங்கு ஞான சேனை சூழ்ந்த தென்று சொல்லவே

| | |
|---|---|
| (இ-ள்) விடர்விளங்கு தானை அஞ்ஞ வேந் தனுக்கு | காமக் குரோதாதியராய் விளக்கும் சேனைகளோடுற்ற அறிவற்ற அரசனுக்கு |
| மாந்தர் போய், சுடர் விளங்கு ஞான சேனை | தூதர்கள் சென்று ஒளியிலங்கு ஞான விநோதனுடைய படைகள் |
| சூழ்ந்தது என்று சொல்லவே | வந்து வளைத்துக் கொண்ட தென்று கூறிய மாத்திரத்தில். (குளகம்) 1 |

[அ-கை] *பிரம்மா விஷ்ணு சிவனாகிய மூவருடைய படைகளும், தைரியமாய் என் முன் இதுவரை நின்றதில்லை வேறெவர்கள் படையிங்கு வந்த தென்று அஞ்ஞன் வினவினனெனல்.*

330 மூவர் சேனை யென்கண் முன்பு நிற்க வில்லை மொய்ம்பிேனா
டியாவர் சேனை சென்னை வெல்ல விங்கு வந்த தென்னவே

| | |
|---|---|
| (இ-ள்) மூவர் சேனை என் கண் முன் நிற்க வில்லை | மும் மூர்த்திகளுடையபடைகளும் எனது கண்ணுக்கெதிர் இதுவரை நின்றது கிடையாது, |
| மொய்ம்பினேடு இயாவர் சேனை என்னை வெல்ல | வலியோடு வேறெவர்கள் படைகள் அஞ்ஞ வேந்தனாய என்னை வெல்வதற்கு |

இங்கு வந்தது என்னவே — இவ்விடம் வந்ததெனக் கூறவே.
(குளகம்) 2

[அ-கை] *தூதர்கள்: நாங்கள் யாருடைய படைகளென் பதை யறியோம். எங்கும் மகா தேவ யென்ற வொலி கள் சின்னமாகக்கேட்கப்படுமெனல்.*

**331 யாவர் சேனை யென்ன யாமறிந்த தில்லை யெங்கணுந்,**
**தேவ தேவ தேவ னென்ற சின்ன வோசை யென்னவே.**

| | |
|---|---|
| (இ-ள்) யாவர் சேனை என்ன யாம் அறிந்தது இல்லை | யாருடைய படைகள்என்பதாக நாங்கள்அறிய முடிய வில்லை |
| எங்கணும் தேவ தேவ தேவன் என்ற சின்ன ஓசை என்னவே | எவ்விடத்தும் ஹர ஹரமகா தேவா மகா தேவ மகா தேவ வென்கின்ற சின்னமாகிய வாத்தியத்தின் ஒலி கேட்கப்பட்டதெனவொற்றர் கூற 3 |

[அ-கை] *உருவமற்ற கடவுள் என்முன் வரமுடியாது உருவமுடன் வந்தால் காமக்குரோதாதி சேனைகள் அழித்துவிடும். வேறெவர் என்னை யழிக்க வருவரென அஞ்ஞன் கூறல்.*

**332 ஏகமுத லோன்வருவ னாகினமர் செய்யவவ-**
**னென்கணெதிர் நிற்கவிலனே,**
**தேகமுள னேலவனை மாரன்முதல் வீரர்படை**
**சிந்துவர்கள் சிந்திவிடவே.**

(இ-ள்) ஏக முதலோன் வருவன் ஆகில் — அத்வைத சொருபமான பிரம்மமே வந்ததெனில்

| | |
|---|---|
| அமர்செய்ய அவன் என் கண் எதிர் நிற்க இலனே | யுத்தஞ் செய்வதற்காக அருவமானவர் என் கண் முன்னதாக நின்றிலர் |
| தேகம் உளனேல் அவனை மாரன் முதல் வீரர் படை சிந்தி விடவே சிந்துவர்கள் | உடம்போடுஉளனேல் அவ்வடிவோடுற்றவரை மன்மதன் முதலான படைவீரர்கள் அழிந்து விடும் படியாக நாசமாக்குவர் 4 |

[அ-கை] *தேவர் அசுரர் மனிதர் முதலியோரில் வேத சாஸ்திரங்களில் சொன்னபடி தத்துவ ஞானத்தை யடைந்து காமக் குரோதாதிகளை வெல்வரெனல்.*



333 வானவர்க டானவர்கண் மானவர்க-
ளானவரின் யாவர்மறை கூறுபரிசே,
ஞானபர ராகிமத ராசன்முத லானவிரு-
நால்வரையும் வென்றவவரே.

[இ-ள்] வானவர்கள் தானவர்கள் — தேவர்களாயினும் அசுரர்களாயினும்
மானவர் ஆனவரின் — மனிதர்களாயினும் அவர்களில்
யாவர் மறை கூறு பரிசே — அவர்களில் வேதாதிகளிற் சொல்லிய பிரகாரம்

ஞானபரர் ஆகி மத ராசன் முதல் ஆன இருநால்வரையும் வென்ற அவரே — தத்துவ ஞான முற்றவராய் மன் மதன் முதலாயிருக்கின்ற எண்மர் களையும் செயித்தவர்களாவார்கள். 5

(அ-கை) தூல தேகம் ஞான கர்மேந்திரியங்கள் மனம் புத்தி வாயுக்கள் அகங்காரம் ஆகிய எழுவித படையில் ஒன்றை நீக்குவனேல் அவனைக் கடவுள் எனலா மெனல்.

334 ஓதுமுட லிந்திரிய முள்ளுமன புந்தியுயி
ரோங்கியவ கங்காரமுமிங்,
கியாதுமுறு சங்கமெனு மேழணியி னொன்றுவிடு
விக்கிலவனிங் கிறைவனே.

[இ-ள்] ஓதும் உடல் — தோல்முதலிய ஆறுதத்வமாய்க் கூறும் தூல தேகமும்
இந்திரியம் — ஞான கர்மேந்திரியங்களும்
உள்ளு மனம் — சங்கற்ப ரூப மனமும்
புந்தி உயிர் — புத்தியும் பிராணாதி வாயுக்களும்
ஓங்கிய அகங்காரமும் — உயர்ந்திருக்கின்ற அகங்காரமும்
இங்கு இயாதும் — இவ் விடத் தெல்லாமும்
உறு சங்கம் எனும் — சேர்ந்த கூட்டம் என்கின்ற
ஏழ் அணியில் — ஏழாகிய படை வகுப்பினில்
ஒன்று விடுவிக்கில் — ஒன்றை விலகும்படி செய்வனேல்
அவன் இங்கு — அவனே யிவ்வுலகில்
இறைவனே — பரமேஸ்வரனென்றுஉரைக்கலாம். 6

(அ-கை) வீரனுயிருந்தால் என்முன் பயமின்றி வரும் ஞானவேந்தனைக் கண்டு நான் பயந்து திரும்பிவிட்டால், என்னை அஞ்ஞ வேந்தனென்றழையாமல் வேறு பேரிட்டழையு மெனல்.

335 ஆண்டகைய னுகினெனை யஞ்சுதலொ ழிந்துவரு
மவனையெதிர் கண்டளவில்யான்,
மீண்டிடுவ னுகிலெனை யஞ்ஞவர சென்றழையேல்
வேறுபெய ரிட்டழையுமே,

[இ-ள்] ஆண் தகையன் அகில் — புருஷத் தன்மையையுடைய வனு யிருந்தால்
எனை அஞ்சுதல் ஒழிந்து — என்னிடத்தில் பயமில்லாமல்
வரும் அவனை — வருகின்ற ஞான வேந்தனை
எதிர் கண்ட அளவில் — நேரில் பார்த்த மாத்திரத்தில்
நான் மீண்டிடுவன் ஆகில் — அஞ்ஞனுகிய நான் பயந்து புறமுதுகிட்டுத் திரும்புவனேல்
எனை அஞ்ஞ அரசு என்று அழையேல் — என்னை அஞ்ஞ வேந்தனென்று பெயரிட்டழைக்க வேண்டாம்
வேறு பெயர் இட்டு அழையும் — மறு பெயரிட்டு அழைப்பீர்களாக. (குளகம்) 7

[அ-கை] இவ்வித உரைகளாடிய அஞ்ஞ வேந்தன் காமனுதிய சேனைகளைச் செலுத்தி, ஞான வேந்தன் முன் அமர் செய்ய; அஞ்ஞ வேந்தன் மனதில் ஆயிரம் அமாவாசைகள் சேர்ந்தன போலு மெனல்.

336 என்று பல பாஷைகள்கொ டுத்துமத னுதிபடை
யேவியிறை வன்கணெதிரே,
நின்றுபொர நேரறிவி னெஞ்சினிசி கோடியிரு
ணின்றதென லாகுநிலையே,

[இ-ள்] என்று பல பாஷைகள் கொடுத்து — என்பதான பலவித பாஷைகளைச் சொல்லிக் கொடுத்து
மதன் ஆதி படை ஏவி — மன்மதன் முதலான சேனைகளை ஏவிவிட்டு
இறைவன் கண் எதிரே நின்று பொர — ஞான வேந்தனுடைய கண் முன்னிருந்து போர் செய்ய

நேர் அறிவு இல் நெஞ்சில் — முறையான ஞானமின்றிய மனத்தில்

நிசி கோடி இருள் நின்றது எனல் ஆகும் நிலையே } இரவுஆய கோடி அமாவாசைகள் ஒன்று சேர்ந்தன என்று சொல்லும் படியான நிலைமை யாகும். 8

## 22 தொந்த யுத்தம்.

337 வேத கீதன்ப டையுடன் வெஞ்சினப்
போத கீனன்ப டைபொறப் போதவே.

[இ-ள்] வேத கீதன் படை உடன் — ஞான விநோதன் சேனைகளோடு

வெஞ்சின போத ஈனன் படைபொற போதவே } கொடுங் கோபனுன அறிவற்ற வஞ்ஞ வேந்தன் சேனை யுத்தம் புரிய போகலும். 1

[அ-கை] *சீவப் பிரம்மைக்கியஞான மாகிய யானைகள் வெளிப் பட்டவுடன் பஞ்சேந்திரிய விஷயங்களாகிய யானைகள் புறமுதுகிட்டோடின வெனல்.*

338 துன்னிட் டேகின போதகந் தோன்றலும்,
வென்னிட் டேகின வைம்புல வேழமே,

(இ-ள்) துன்னிட்டு கன போதகம் தோன்றலும். } பரி பூரணமாய் நிறைந்து துவிதத்தை வன்மை யோடழிக்கும் அத்வைத ஞானமாகிய யானைகள் தோன்றவும்

வென்னிட்டு ஏகின ஐம்புல வேழம் } புறமுதுகிட்டு ஓடி யொழிந்தன பஞ்சேந்திரிய ஞான விஷயங்களாகிய யானைக் கூட்டங்கள் 2

[அ-கை] *பேரின்ப ரசமாகிய இரதத்திற்கு முன் சிற்றின்ப ரசமாகிய விடய, சுகங்கள் தானே விலகுமெனல்.*

339 இரத மானர தத்தெதிர் நின்றில,
விரத மானவி டயர தங்களே.

]இ-ள்] இரதம் ஆன ரதத்து — பேரின்பரசமான பிரம்ம ரதத்தை

இரதம் ஆன விடய ரதங்கள் — சிற்றின்பமான பஞ்சேந்திரிய விடயங்களாகிய இரதங்கள்
எதிர்த்து நின்றில — எதிர்த்து அழிந்தன. 3

[அ-கை] பூரணமாகிய குதிரைகள் வந்தவுடன் இந்திரியங்களாகிய குதிரைகள் தானே மறைந்த தெனல்

**340 புரணப் பாய்பரி தோன்றப்பு ரத்துள,**
**கரணப் பாய்பரி யாவுங்க ரந்தவே.**

(இ-ள்) புரணபாய் பரி தோன்ற — பிரம்மாகார விருத்தி ஞானமாகிய குதிரைகள்உதயமாகவும்
புறத்துஉள கரண பாய் பரி யாவும் கரந்தவே — பராக்காயுள்ள பஞ்சேந்திரியங்களாய்பாய்கின்றகுதிரைகளியாவும் சூரியனுக்கு முன்னுல் நட்சத்திரங்கள் போல, தோன்ரு தொழிந்தன. 4

(அ-கை) ஞான வேந்தன் படைகளுக்கு முன் அஞ்ஞனது படைகள் பய முருமல் வருமா? பிரகாசிக்கின்ற பல சூரியர்கள் முன்இருள்இருந்தால்இவையுமிருக்குமெனல்

**341 அறிவன்பெ ருஞ்சேனே கண்காண வெதிரே-**
**யஞ்ஞன்கொ டுஞ்சேனே யஞ்சாம லெழவோ,**
**வெறிவெங்க திர்ச்செல்வ ரெத்திக்கு மெழவே-**
**யிரியாம லிருணிற்கி னிதுநிற்கு மெதிரே.**

(இ-ள்) அறிவன் பெரும் சேனே — ஞான வேந்தனுடைய பெரிய படைகளை
கண் காண எதிரே — கண் கண்டமாத்திரத்தில் அப் படைகளின் முன்பு
அஞ்ஞன் கொடும் சேனே — அஞ்ஞனுடைய கொடும் படைகளானவை
அஞ்சாமல் எழவோ — பயமின்றியெதிர்த்து வர முடியுமா
எறிவெங்கதிர் செல்வர் எத்திக்கும் எழவோ — பிரகாசிக்கின்ற வெப்பக் கிரணங்களோடு பல கோடி சூரியர்கள் பல திக்குகளிலும் உதயாமாகும் போது
இரியாமல் இருள் நிற்கில் — நாசமாகாமல் அந்தகாரமிருக்குமெனில்

இது நிற்கும் எதிரே — இவ் வஞ்ஞனது சேனைகளுமெதிர்த்து நிற்க முடியும். 5

(அ-கை) எதிர்த்து வருவோரை மிச்ச மின்றிக் கொல்லுங்களென்று ஞானவேந்தன் கூறவும், தனது சேனைகள் திருவடிகளில் வணங்கிக் கூறினரெனல்.

**342** **ஓட லின்றியெதிர் நின்ற வீரர்தமை-**
**வீரரங் கொருவ ரொழிவறச்.**
**சாடு கென்றருள வீரர் சொல்லுவர்வ-**
**ணங்கிவீ ரனிரு தாளிலே,**

[இ-ள்] வீரர் அங்கு — ஞான வீரரானவர் அவ்விடத்து
ஒருவர் ஓடல் இன்றி — யாரொருவரும் புறமுதுகிட்டோடா
எதிர் நின்ற வீரர்தமை — எதிர்த்து வருகின்ற யுத்த [மல் வீரர்களை
ஒழிவு அற சாடுக — மிச்ச மில்லாமற் கொல்லுங்கள்
என்று அருள — என்பதாகத் திருவாய் மலர
வீரர், வீரன் — படைவீரர்கள், ஞானவீரனது
இரு தாளில் வணங்கி சொல்லுவர் — இரண்டு திருவடிகளிலும் பணிந்து கூறு நிற்பர். 6

[அ-கை] அஞ்ஞன் படைகளும் நமது படைகளும் பேதமற்று மிகுந்திருப்பதால்; இருபடைகளின் பேதம் அறியும் படி அறிவிக்க வேண்டுமெனல்.

**343** **அறிவி லன்படையு மளவி னம்படையு-**
**மறிய வின்றிவரு மறிவுறுங்,**
**குறியு றும்பரிசை யருளு கென்னவவர்-**
**குறியு றும்பரிசு கூறுமே.**

[இ-ள்] அறிவு இலன் — அஞ்ஞவேந்தனுடைய சேனைகளும் படையும்
அளவு இல் நம் படையும் — எல்லை யற்றிருக்கின்ற நமது சேனைகளும்
அறிய இன்றி வரும் — பிரித்தறிய முடியாமலிருக்கின்றது
அறி உறும் குறி உறும் பரிசை — அறியும்படியான (அதற்குள்ள தனை தடையாளங்களை, அறியும்படியாக
அருளுக என்ன — கூற வேண்டுமென்ற போது

அவர் குறி உறும் பரிசு கூறும் — ஞான விநோதன், அவ்வடை யாளங்கள்இருக்குந் தன்மையை அருளுவதானூர். 7

[அ-கை] உண்மையுணர்ந்த உத்தமர்கள் விட்டவர் களாயிருந்தா லென்ன! வேடமுற்றவர்களாயிருந்தா லென்ன! அளவற்றபெண்களோடு ஆடினூலென்ன! அவர்களெதைச் செய்வார்களோ அதுவே அவர் களுக்குத் தவமும் அழகும்ஆமாமெனல்.

344 விண்டி ருந்தென்மெய் கண்டு ளோர்தவ-
வேட மேவியென் கோடி மாதரை,
கொண்டி ருந்தெனவர் செய்த தேதவங்-
கொண்ட கொண்டதே கோல மாகுமால்.

(இ-ள்) மெய் கண்டு உளோர் — உள்ளதை யுள்ளபடி யறிந்த மகான்கள்
விண்டு இருந்து என் — எல்லாவற்றையும் துறந்தவரா இருந்தாலென்ன
தவ வேடம் மேவிஎன் — தவக் கோலத்தைப் பூண்டிருந்தால் என்ன.
கோடி மாதரைக் கொண்டு இருந்து என் — கோடிக் கணக்கான பெண்களோடு விளைக் கொண்டிருந்தா லென்ன.
அவர் செய்ததே தவம் — அத் தத்வ ஞானிகள் எதைச் செய்தனரோ அதுவே தவமாம்
கொண்ட கொண்டதே கோலம் ஆகும் — அவர்கள்எதை எதை மேற் கொண்டனரோ அதுஅது அவர் களுக்குஅழகுமாகும். 8

[அ-கை] நமது படைகள்; நனவுற்றவர், நனவும், கனவும் அறிவது போல். ஆத்மாவின் சச்சிதானந்த சுபாவத்தையும், அனுத்மாவின் அசத்துசடதுக்கங் களையும் அறிவர். அஞ்ஞனது படைகள்; கனவுற்றவர் நனவு கனவுஇரண்டையும்அறியாதவர் போல்; ஆத்மனுத்மாக்களின் குண தோடங்கள்அறியா ரெனல்.

(இ-ள்) மேவி விடும் அருள் படைக்கும், மருள் படைக்கும் வேறு அறிய — விரும்பி விடுவதான ஞான வேந்தன் சேனைக்கும் அஞ்ஞானது சேனைகளுக்கும் பேதம் தெரிந்து கொள்வதற்கு

இவ்வாறு விளம்ப வீரன் ஏவி விடும் அளவதனில் — இந்தப் பிரகாரம் எடுத்துக் கூறிய ஞான வேந்தன் அமர் செய்யக் கட்டளை யிட்ட சமயத்தில்

அஞ்ஞசேனை இறந்தபடி—அஞ்ஞனது படைகளழிந்த படியே

அதனையும் இங்கு இயம்பல் செய்வாம் — அவ் விதத்தையும் இவ் விடம் எடுத்துக் கூறுவாம். 15

*[அகை] மாதர்களின் குணகுணங்களை ஆராய்ந்த நிருபகனால் பாவம்இழிவுஉடன் மன்மதன்இறந்தான் உடனே ரதியுமிறந்தாளெனல்.*

352 உருபக மகளிர்தி றத்தினை வுசாவொடு மறமொடிழிப் பொடு,
நிருபகன் மதனைய ழித்தன னிலவிய ரதியுமிறப்பவே.

(இ-ள்) நிருபகன், உருபக மகளிர் திறத்தினை உசாவொடு — ஆராய்ந்தறிபவன், உவமையும் பொருளையும் மாற்றிக் கூறுமோர் அலங்கார முடைய, பெண்களது கோலாகல குணங்களை விசாரித்த மாத்திரத்தில்

மறம் ஒடு இழிப்பு ஒடு மதனை அழித்தான் — பாவத்தோடும் இழிவோடும் மன்மதனை நாசமாக்கினன்

நிலவிய ரதியும் இறப்பவே — மதனோடிருந்த இரதி தேவியும் அழிந்து போனாள். 16

253 பாவனும் இகலுமி ரங்கலில் பாடுறு கொலையு மெரிந் தெழு-
கோபனும் அடையாந லம்பல கூறிய பொறையின ழிந்ததே.

(இ-ள்) பாவனும், இகலும் இரங்கல் இல் — பாவமும், பகையும், இரக்கமில்லாது

பாடு உறு கொலையும் — துன்பப் படுத்தும் கொலையும்

எரிந்தெழு கோபனும் — அக்கினியைப்போல் சீறிவரும் கோபனும்

அடைய நலம் பல கூறிய — எல்லாவித நலன்களை பல
விதமாக எடுத்துக் கூறிய
பொறையின் அழிந்தது — பொறுமையினுல்
அழிந்ததென்பதாம். 17

*[அ-கை] விவேகன் விழித்தவுடன் மோகனும், மயக்கமும், சோகனும், மகிழ்வும் அழிந்தன ரெனல்.*

**353 மோகனு முலகம யக்குற மூடிய மயலுமி குத்தெழு,**
**சோகனு மகிழ்வுந சித்தனர் தூமதி கணவன்வி ழிக்கவே.**

(இ-ள்) மோகனும், உலகம் மயக்குஉற மூடிய மயலும் — மோக னென்பவனும், உலகத்தைக் கண்டு மயங்கும்படியாக மறைத்த மோகமும்
மிகுத்து எழு சோகனும் — மிகுந்தெழுகின்ற சோகனென்பவனும்
மகிழ்வும் நசித்தனர் — மகிழ்ச்சியும் அழிந்து போயினர்
தூமதி கணவன் விழிக்கவே — சுத்த புத்தியின் தலைவனுன ஞானுத்மாவானது விழித்துக் கொண்ட மாத்திரத்தில் 18

*[அ-கை] சந்தோடனுல் லோபனும், இச்சையும், களவாதியும், துன்பமும், தீனனும், மானமும் மடிந்தன ரெனல்.*

**354 ஆனசந் தோடனில் லோபனு-மாசையும் பேசுகள வாதியும்,**
**ஆனசந் தாபனும் தீனனு மானமுஞ் சேரவுயிர் மாயுமே.**

[இ-ள்] ஆனசந் தோடனில் — (ஊழின்படி கிடைத்த) திருப்தியாலுண்டான சந்தோஷத்தினுல்
லோபனும், ஆசையும் — லோபத்தன்மையும் இச்சையும்
பேசு களவு ஆதியும் — கூறு நின்ற கள்ளம் முதலிய பஞ்ச பாதகங்களும்
ஆன சந்தாபனும் — ஆகிய துன்ப மென்பவனும்
தீனனும் மானமும் — தீனனென்பவனும் அபிமானமும்
சேர உயிர் மாயும் - எல்லாவற்றினுயிரும் அழிந்துபோகும் 19

*[அ-கை] தருமனுல் பாவம்அழிந்தது, அமிர்தசீலனுல் பொருமை யழிந்தது. அடக்கனுல் மதனழிந்தனன். உபேட்சையால் அபேட்சை யழிந்தது. நல்ல ஆராய்ச்சியினுல் இடம்பன் அழிந்தனன் எனல்.*

355 அரன ழித்தனன்ம றத்தினைய சூயை தனைநல்-
அமிர்த சீலனும ழித்தனன டக்க னுமதத்,
திறன ழித்தனனு பேட்சையில பேட்சை பொடிநற்-
றேர்வி லேபெரிய டம்பனுயிர் சிந்தி யதுவே.

(இ-ள்) அறன் மறத் — தருமன் பாவத்தை நாசமாக்கினன்
தினை அழித்தனன்

| | |
|---|---|
| அசூயைதனை நல்ல அமிர்த சீலன் அழிந்தனன் | பொறுமையினை ஆனந்தம் அளிக்கும் அமிர்த சீலன் நாசமாக்கினன். |
| அடக்கன் மதத்திறன் அழித்தனன் | அடக்கமுடையவன் மதத்திறத்தினை நாசமாக்கினன். |
| உபேட்சையில் அபேட்சை பொடி | (விருப்பு வெறுப்பு இலதான) உதாசீன தசையில் ஆசையற்றொழிந்தது. |
| நல் தேர்வில் பெரிய இடம்பன் உயிர் சிந்தியது | நல்லஆராய்ச்சியினால் பெரும் டம்பனுடைய உயிரழிந்தது. 20 |

(அ—கை) சாந்தியால் அகங்காரமும், அவிரோதத்தால் மச்சரனும், சந்தேகம் மனனமாகிய தெளிவினால் அழிந்ததெனல்.

356 ஆங்கரிப்பரிய சாந்தியின ழித்த துயிர்கட்-
கன்னை போலுமவி ரோதமெழ வாரு யிரையுங்,
தீங்க ருத்தியிடு மச்சரன ழிந்த யரவே-
செய்யு மையமழி வுற்றதுமி குந்தெ ளிவிலே.

| | |
|---|---|
| (இ-ள்) அரிய சாந்தியின் ஆங்கரிப்பு அழிந்தது | கிடைத்தற்கரிய சாந்தத்தால் அகங்காரமானது நாசமடைந்தது |
| உயிர்கட்கு அன்னை போலும் அவிரோதம் எழ | சீவ கோடிகட்குத் தாய் போன்று உள்ள அவிரோதம் உதயமானவுடன். |
| ஆர் உயிரையும் தீங்கு அருத்தியிடும் மச்சரன் அழிந்து | ஆன்மாவையும் தீமையடையும்படி செய்கின்ற சகியாமை என்பவன் நாசமுற்றனன் |

| | |
|---|---|
| அயரவே செய்யும் ஐயம் மிகும் தெளிவி லே அழிஉற்றது | மயங்கும்படி செய்யும் சந்தேக மானது மிகுந்த மனத் தெளிவினுல் அழிந்தது. 21 |

[அ-கை] வாதம் மௌனத்தினுலும், தமம் சத்துவத்தினுலும், சங்கம் அசங்கத்தினுலும் அழிந்தது. அருட்படையின் முன்னின்ற மருட்படை, உருவின்றியொழிந்ததெனல்.

357 தற்க மோனமுற வேபொடித மம்பொடிவுறுஞ்-
சத்து வத்தில்வரு சங்கமும் சங்க முறநேர்,
நிற்கு மோவொருமருட்படையருட்ப டையின்முன்-
னிற்க வேதுநிண மேதுகுட ரேது நிலேயே.

[இ-ள்] தர்க்கம் மோனம் உறவே பொடி — வாதம் மௌனத்தினுல் நாசமுற்றது

| | |
|---|---|
| தமம் சத்துவத்தில் பொடிவுறும் | — தமோ குணம் சத்வ குணத்தால் நாசமுற்றது |
| வரு சங்கம் அசங்கம் உற நேர் நிற்குமோ | வாரா நின்ற கூட்டமானது தனிமையை யடைய எதிர் நிற்குமா |
| ஒரு மருட் படை அருள் படையின் முன்னிற்க | ஓர் அஞ்ஞனுடைய சேனேயானது ஞான வேந்தனுடைய சேனேயின் எதிர் நிற்கு மெனில் |
| ஏது நிணம், ஏது குடர் ஏது நிலே. | கொழுப்பெங்கிருக்கும், குடலெங்குருக்கும், இருப்புதானெங்கிருக்கும் 22 |

# 23- அஞ்ஞன் அழிவு.

358 ஆவியை யொழிய வெல்லா மழிந்தகப் பட்ட வஞ்ஞப்,
பாவியை யெந்தை பாதம் பணியெனப் பகர்ந்த போதே.

| | |
|---|---|
| (இ-ள்) ஆவியை ஒழிய எல்லாம் அழிந்து அகப்பட்ட | தனதுயிரைத்தவிர சேனேயனேத்தும் நாசமுற்று கிடைக்கப் பெற்ற |
| அஞ்ஞ பாவியை | — அஞ்ஞனுகிய பாதகனே |
| எந்தை பாதம் பணி என பகர்ந்த போதே | எம் குரு நாதனுடைய திருவடிகளே வணங்கு வாயென்று அடியார்கள் கூறும் போது 1 |

[அ-கை] அஞ்ஞன்உள்ளனவும் அறிவென்பதுஏது அதனுல், எனது சேனை யெழுந்து வரும் என்பதைக் கேட்டாரெனல்.

359 அறிவில னெனுபே ரொன்று மழிவுரு திருக்க ஞானங்,
கிறிவரும் படியென் ருனை கிளர்ந்தெழு மென்னக்
கேட்டே.

(இ-ள்) அறிவு இலன் எனும் பேர் ஒன்றும் அழிவுறுது இருக்க — அஞ்ஞ வேந்தன் என்ற நாமம் ஒன்று மாத்திரம் நாசமாகாமல் இருக்கும் பரியந்தம்

ஞானம் கிறி வரும் — ஞான வேந்தனென்பது பொய்யாய்ப்போகும்

என் தானை கிளர்ந்து எழும் என்ன கேட்டும் — எனது சேனைகள் உயர்ந்தெழுவதாம் என்றதை ஞான வேந்தன் கேட்டதும் (குளகம்) 2

[அ-கை] சூரியனுக்கு முன்னிருளும், அக்கினிக்கு முன் பஞ்சும், கருடனுக்கு முன் சர்ப்பமும் நிற்காதழிவது போல; ஞானத்தால் அஞ்ஞானமும் கர்மங்களும் அழியுமெனல்.

360 இருடுணிந் திரவிமுன் னிற்குமோ பஞ்சுதா-
னெரியின்முன் னிற்குமோ வெங்ஙனே யரவமுங்-
கருடன்முன் னிற்குமோ ஞானமே வந்துறுங்-
கண்ணின்முன் னிற்குமோ வெண்ணறுங் கன்மமே.

[இ-ள்] இருள் துணிந்து இரவி முன் நிற்குமோ — இருட்டானது துணிவுடன் சூரியனுக்கு முன்னுல் இருக்க முடியுமா?

பஞ்சுதான் எரியின் முன் நிற்குமோ — இலவம் பஞ்சானது அக்கினியின் முன்னுல் நிற்குமோ?

எங்ஙனே அரவம் கருடன் முன் நிற்குமோ — எப்படி சர்ப்பமானது கருடனுக்கு முன்னுல் நிற்க முடியாதோ? (அப்படி)

ஞானம் வந்து உறும் கண்ணின் முன் எண்ணறும் கன்மம் நிற்குமோ — தத்துவம்உணர்ந்திருக்கின்ற ஞானிகளுடைய திருஷ்டியின் முன்பு, அளவற்ற கர்மங்களானுலும் அழியாது நிற்குமோ, 3

*[அ-கை] உடம்பையும், இளமையையும், சுற்றத்தையும் விடய சுகத்தையும், செல்லுஞ் செல்வத்தையும், ஓர் பொருளாக நினைத்து ஆத்மாவை யறியா யெனல்.*

361 அழியுமிக் காயமுங் கழியுமுன் னிளமையு-
மன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமும்,
ஒழியுமிச் செலவமொன் றுகநீ வுன்னியோ-
வுடையநா யகனைநெஞ் சுணர்வுரு தொழிவதே.

(இ-ள்) அழியும் இக்காயமும் — பார்க்கும் போதே அழிகின்ற இத் தேகத்தையும்
கழியும் உன் இளமையும் — சொல்லாமற் செல்லும் உன திளமையையும்
அன்பு உறும் கிளைஞரும் — ஆசையோடுற்ற பந்துக்களையும்
இன்பு உறும் போகமும் — சுகாநுபவமாகிய போகங்களையும்
ஒழியும் இச்செல்வம் — செல்வோமென் றழிகின்ற, இக வாழ்வையும்
ஒன்று ஆக நீ உன்னியோ — ஓர் பொருளாக நீ நினைத்துக் கொண்டா
உடைய நாயகனை நெஞ்சு உணர்வு உருது ஒழிவது } தனக்காதரத் தலைவனையிருதயத்தில் அபரோட்சமாயடையாதிருப்பது. 4

*(அ-கை) மாயா காரியமான மும்மூர்த்திகள் முதலான, தெய்வங்களென நினைத்தனையோ இவர், மாயை அதன் காரியங்களுக்கு ஆதாரமான பரம்பொருள் என்று அறியாயோ வெனல்.*

362 தேவர்களு முனிவர்களுஞ் செழுமறையும் பழையவொரு
மூவருமென் றிருந்தனையோ முழுமுதலென் றறிந்திலையோ.

[இ-ள்] தேவர்களும், முனிவர்களும் — இந்திராதி தேவர்களென்றும் முனிவர்களென்றும்
செழு மறையும் பழைய ஒரு மூவரும் என்று இருந்தனையோ } அக்கினி யென்றும் பழைமையான மும் மூர்த்தி களென்றும் இருக்கின்றுயா
முழு முதல் என்று அறிந்திலையோ } காரணப்பிரம்மமே யெழுந்தருளியது என்று தெரிந்து கொள்ள வில்லையோ. 5

[அ-கை] இவ் வுலகத்தில் அடியார் துயரகற்ற வந்த கடவுளென்று அறியாமல் மனிதன்என்றிருந்தனையோ வெனல்.

363 இந்தவுல கத்தினிடர் கெடும்பரிசிங் கெழுந்தருளி,
வந்தவனென் றறிந்திலேயோ மானிடனென் றிருந்தனையோ.

[இ-ள்] இந்த உலகத்தின் இடர் — இவ் வுலகத்திலுள்ள துன்பங்கள் அனைத்தும்
கெடும் பரிசு இங்கு எழுந்தருளி வந்தவன் — நாசமாக்கும் பொருட்டு இம் மண் உலகத்திற்கு குரு மூர்த்தமாய் வந்தவர்
என்று அறிந்திலேயோ — என்பதைத் தெரிந்து கொள்ளவில்லேயோ
மானிடன் என்று இருந்தனையோ — மநுடன்என்றிருக்கின்றாயோ! 6

[அ-கை] அன்பர்களை ஆட்கொள்ளும் அதிசயமான சற்குணங்களுடைய குருநாதனுடைய சந்நிதியிலிருக்கின்ற நீ அழிவாயெனல்.

364 அதிரேக வழகுடையா ளுடையான் றாளுடையான்,
எதிரேநின் றனையாவி யிப்பொழுதே யிழந்தனையே.

(இ-ள்) அதிரேக அழகு உடையான் — ஆச்சரியமான மைத்திரியாதி கல்யாண குணங்களுடையவன்.
ஆள் உடையான் — பரிபாலிக்கின்ற தன்மையையுடையவன்
தாள் உடையான் — ஆதியான மோட்சமாயிருப்பவன்
எதிரே நின்றனை — சந்நிதானத்தி லிருக்கின்றாய்
ஆவி இப்பொழுதே — உன்னுயிரானது இதே சமயத்தில்
இழந்தனையே — போகப் போகின்றது. 7

[அ-கை] அடியார்கள் கூறும் போது அஞ்ஞன் கோபமுற்றனெனல்.

365 நாய ஞரடி யார்கண வில்தொறும்,
பேய ஞனும்பெ ருகச்சி னஞ்செய்தே.

நாயனார் அடியார்கள் நவில் தொறும் — பெருமையிற் சிறந்த குரு நாதர் தொண்டர்கள்எடுத்துரைத்தபோது

பேய் அனுனும் பெருக சினம் செய்து } பசாசத்திற்குச் சமனுன அஞ்ஞன் மிகுந்தகோபமுற்றவனுய்(குளகம்) 8

*[அகை] என் முன் ஞான வேந்தன் வருவனேல் எனதாற்றல் அறியலாமெனல்.*

**366 ஞான வேந்தன்வந் தென்னெதிர் நண்ணுற,**
**லான வெல்லையிற் காணுமென் ணுண்மையே.**

(இ-ள்) ஞான வேந்தன் — ஞான விநோதனுனவன் வந்து — புறப்பட்டு

என் எதிர் நண்ணுறல் ஆன எல்லையில் காணும் என் ஆண்மையே } எனக்கு முன்பு சேருகின்ற போதல்லவா எனது வல்லபத்தை பார்க்கலாமே (குளகம்) 9

*(அ-கை) இவ்விதம் கூறிய அஞ்ஞனது வார்த்தைகளைக் கேட்ட குருநாதன் நகை செய்தனரெனல்.*

**367 என்ற வன்மொழி யெந்தைதி ருச்செவி,**
**சென்ற வெல்லைசி ரித்தருள் செய்யுமே,**

(இ-ள்) என்ற அவன் மொழி — என்பதாகக் கூறிய கொடிய வார்த்தைகளானது
எந்தை திருச் செவி — ஞான வேந்தனது அழகிய செவிகளில்
சென்ற எல்லை — கேட்ட மாத்திரத்தில்
சிரித்து அருள் செய்யும் — புன்னகை செய்தருளினர். 10

*(அ-கை) மண்ணோர் விண்ணோர் மகிழத் தன் மகிமையை வெளிப்படுத்த எண்ணின ரெனல்.*

**368 உம்ப ரிம்பரு வப்பவொ ளிமிகுந்,**
**தம்பெ ருந்தன்மை காட்டச் சமைந்துமே.**

(இ-ள்) உம்பர் இம்பர் — தேவர்களும் மனிதர்களும் உவப்ப — மகிழும்படி
ஒளி மிகும் — புகழ் மிகுந்த
தம் பெரும் தன்மை — தனது பேராற்றலை
காட்ட சமைந்து — வெளிப்படுத்த எத்தனமாய் திருவுளங் கொண்டு 11

[அ-கை] வேதங்கள், தேவர்கள், மூவர்கள், இதுவரை அழுதும் அடைவதற்கரிய திருவடிகளை, அஞ்ஞனுக் களிக்க நினைத்தன ரெனல்.

369 பழுதுப டாமறை வானுளோர் பண்டையொர் மூவர்க ளின்றுகா.
றழுதுபெ ருவடி யஞ்ஞன்மே லாகவி சைந்தன னண்ணலே

பழுது படா மறை — குற்றமற்ற வேத வேதாந்தங்களும்
வான் உளோர் — இந்திராதி தேவர்களும்
பண்டை ஒரு மூவர்கள் — பழைமையான ஒப்பற்ற அயன்அரிஅரனும்
இன்று காறு அழுது பெறு அண்ணல் அடி } இது பரியந்தமும் கண்ணீர்ஆறாய் அழுதடையாகுருநாதன்றிருவடிகள்
அஞ்ஞன் மேல் ஆக இசைந்தனன் } அஞ்ஞனுடைய சிரத்தின் மேற் சூட்டும் படி சம்மதித்தனர். 12

[அ-கை] பிரம்மாதிகளாலும் அடைய முடியாத திரு அடிகள் அஞ்ஞன் சிரத்தில் சூட்டப் பெற்ற தெனல்.

370 வெருவரு நான்முக னாதியாம் விண்ணவர் மண்ணுள வேறுளோர்.
ஒருவர்பெ ருவடி வுணர்விலா னுச்சியின் மீதுமு தைத்ததே.

[இ-ள்] வெரு அரும் நான்முகன் ஆதியாம் விண்ணவர் மண்ணுளோர் வேறுளோர் } அச்சமற்ற சதுர்முகப் பிரம்மா முதலான தேவர்களும் பூலோகத் திலுள்ள மனிதர்களும் மற்றுமுள்ள வொருவரும்
ஒருவர், பெறு அடி உணர்வு இலான் } மற்றுமுள்ள ஒருவரும் பெற முடியாத திருவடிகளை அஞ்ஞனது
உச்சியின் மீது — சிரத்தின் மேலும்
உதைத்தது — சூட்டியருளினர். 13

[அ-கை] மார்க்கண்டன் முதலியோர்களுக்கு மரண பயம்மாற்றிய மலரடியின் மகிமை யறிய முடியுமா இவ் வஞ்ஞனது தலையிலிருக்கவுமிசைந்தது எனல்.

371 தென்றிசை யின்றுயர் தீர்த்ததாள்-செய்தரு ளும்படி
தெரியுமோ
இன்றிசை கின்றன வல்லவோ-வித்தலை மீதுமி ருக்கவே

[இ-ள்] தென் திசையின் துயர் தீர்த்ததாள் செய்து அருளும் படி தெரியுமோ — அன்போடு நினைப்பவர்களுக்கு எமலோகத்திலுள்ள துன்பம் நீக்கிய திருவடிகள் திருவருள் செய்திருக்கின்றதன்மையானது யறிய முடியுமா

இத்தலை மீதும் இருக்க — இவ்வஞ்ஞன்உச்சியிலிருப்பதற்கும்

இன்று இசைகின்றன அல்லவோ — இப்போது சம்மதித்திப்ருபதன்றோ 14

*[அ-கை] மகான்களின் மகிமையானது அவிவேகிகளால்அறியத்தக்க தல்ல அவர்கள் செய்யும் பெரும் செயலைக் கண்டறியலா மெனல்.*

372 பெரியவர் தஞ்செயலாவதும்-பிறரறி வாலறி வோமெனத்.
தெரியும தன்றது தெரிவதுஞ்-செய்துமு டிந்திடு திசையிலே,

(இ-ள்) பெரியவர் தம் செயல் ஆவதும் பிறர் அறிவால் — மகான்களுடைய பெருஞ் செய்கையானது அஞ்ஞானிகளது புத்தியால்

அறிவோம் என தெரியும் அது அன்று — அறியலா மென்பதாகத் தெரிந்து கொள்ளக் கூடியதன்று

அது தெரிவதும் — அதையறிந்து கொள்வதும்

செய்து முடிந்திடும் திசையிலே — பிறர் செய்ய முடியாதை செய்து முடித்திட்ட போது தான் (அதை அறிந்து கொள்ளலாம்) 15

*[அ-கை] அடியார் பிறவித் துயரழிக்க வந்தருளும் குருநாதன், பேதமின்றி வந்தடைந்தர் அனைவர்க்கும் சுதந்தரத்தாலும் கருணையினாலும் அருளுவரெனல்.*

373 செறித ரும்பிறவி முறிய வந்திறைவர்-
திருவி ளங்குகழ லருளுநா,
ளறிஞ ரென்றுமில ரவல ரென்று மில-
ரவாசு தந்தரம தடையவே.

(இ-ள்) செறிதரும் — வினையால், நெருங்கிவரும்
பிறவி முறிய — பிறப்பொழிய
இறைவர் வந்து, திரு விளங்கு கழல் அருளு நாள் — சற்குரு நாதன் எழுந்தருளி மேன்மையா யிலங்குகின்ற திருவடி தீட்சை தருங் காலத்தில்
அறிஞர் என்றும் இலர் — சாதனங்களுள்ள பக்குவரெனக் கருதிலர்
அவலர் என்றும் இலர் — சாதன மின்றிய அபக்குவ ரெனக் கருதிலர்
அவர் சுதந்தரமது அடையவே — அப் பெருந்தகையனிடமே எல்லாம் ஆட்கொள்வதும். 16

[அ-கை] பேதமற்ற சற்குருநாதன் கிருபை மிகுதியால் அஞ்ஞானமும் மாயையும் அதன் காரியமுமாகிய அனைத்து மழித்த முறையைக் 10-பாடல்களால் கூறுவோமெனல்.

374 பிறிவி லாதகுரு பரம ஞர்தமருள்-
பெருக வேயுடைய திருவிஞ,
னறிவி லானுட னிவ்வகில மாயையுயி-
ரடைய நூறும்வகை யறைகுவாம்.

(இ-ள்) பிறிவு இலாத குருபரமஞர் தம் அருள் பெருகவே உடைய திருவிஞன் — பேத மற்றிருக்கின்ற குரு வாகிய பரம் பொருள் தமது கிருபையானது பெருக்குடைய தெய்வீகத் தன்மை யுடையோன்
அறிவிலான் உடன் இவ் வகில மாயை உயிர் அடைய நூறும் வகை அறைகுவாம் — அஞ்ஞனேடு இச் சர்வ மாயை யினுயிர் அனைத்தையும் நாசமாக்குந் தன்மையைக் கூறுவாம். 17

375 சலிக்குமனத் தெழுச்சியறத் தவிர்த்தி தம்விட் டகத்தே,
சிலுத்தெழுமத் துடிப்புமறத் திரித்தடையக் கெடுத்தே·

(இ-ள்) சலிக்கும் மனத்து எழுச்சி அற தவிர்த்து தம் விட்டு — சஞ்சலப் படுகின்ற மனத்திலிருந்து எழுஞ் சங்கற்ப விகற்பங்க ளில்லா மல் நீங்கும்படி இதென்று அறியுஞ் சுட்டறிவு அற்று

அகத்தே சிலுத்து எழும் அத் துடிப்பும் அற திரித்து — மனத்துள்ளே அசைந்துண்டாகும் அத் துடித்தலும் இல்லாது மாற்றி

அடைய கெடுத்து — மாயை யவித்தை யதன் காரியங்கள் அனைத்தும் அழித்து, (குளகம்) 18

**377 குறித்திடலற் றிடத்ததனைக்-குறிப்பவரைக் கெடுத்தே**
**கறுத்தவிருட் டனைக்கதுவக்-கரித்தனைவிட் டழித்தே.**

இ-ள்) குறித்திடல் அற்ற இடத்து அதனை — (நாம ரூபங்களாய்க்) குறிக்கும் பாவனைகளொழித்த அவ்விடத்து, அப்பாவனையை உண்டு பண்ணும் வாசனையை நாசஞ்செய்து

கறுத்த இருள்தனை கதுவ கரித்தனை விட்டு அழித்து — கடுமையான வந்த காரங்கெட மனச் சாட்சியை விடுத்து நாசமாக்கி. (குளகம்) 19

**378 குறித்தகுறிப் பிறத்தலெனிக்-குறிப்பழியக் குலைத்தே.**
**மறித்தவிடத் ததிற்பரிசித்-தகத்தெனல்மற் றொழித்தே,**

[இ-ள்] குறித்தல் குறிப்பு இறத்தல் என் இக் குறிப்பு அழிய குலைத்து — ஒன்றை, நினைத்தலும் நினைப்பை நாசமாக்கலுமேஎன்னுமவ் வெண்ணமில்லா தழித்து

மறித்த இடத்து அதில் பரிசித்து — மனமற்ற விடத்துஅந் நிலையை அப்பியசித்து

அகத்து எனல் மற்று ஒழித்து — நானென்பதும் வேறென்பதும் நாசமாக்கி 20

(அ-கை) *தற்பத விசாரம்.*

**379 தனிச்சுடரிச் சகத்தொளிரத்-தனைக்கெடவக் கணத்தே.**
**பனித்திவலைத் தடிப்பொழியப்-பரச்சுடர்விட் டழித்தே.**

[இ-ள்] தனி சுடர் இச் சகத்து — ஒப்பற்ற பிரம்ம சொரூபமே யிவ் வுலகமாக

ஒளிர் அதனை கெட — பிரகாசிக்கும்அந் நினைவும் நீங்குபடி

அக்கணத்து பனித்திவலை — அந்த க்ஷணமே பனித் துளி போன்ற

தடிப்பு ஒழிய பர } (செகத்தென்ற) தழும்பு நீங்க,
சுடர் விட்டு அழித்து } பிரம்மமாத்திரமென்ற நினைவால் நாசமாக்கி. 21

379 ஒருக்கிவிரித் ததிற் சுழல்வுற்-றுழற்றுமிருட் டனைப்பே,
ரருக்கனுதித் தலக்கணறுத்-ததிற்பிரபையிட் டழித்தே.

(இ-ள்) ஒருக்கி, — ஒருமனப் படுத்தியதை
விரித்து — பிரம்மாகார மாக்கி
அதில் சுழல் உற்று — பிரம்மத்திலிருந்து கொண்டு
உழற்றும் இருள்தனை — கலங்கச் செய்யும் அஞ்ஞானத்தை
பேர் அருக்கன் உதித்து பிரபை இட்டு அழித்து } அகம் பிரம்மாஸ்மி யென்னும் பிரம்மாகார விருந்தி ஞானத்தின் பிரகாசத்தால் நாசஞ் செய்து
அதில் அலக்கண் அறுத்து } அப் பிரம்மத்தின் மறைப்பாகிய துன்ப மொழித்து 22

380 செகத்தொழியத்திரித்தவிடத்தெளிர்ச்சியறச்
சிதைத்தே,
விகற்பமறத்தனிச்சுடர்விட்டெரித்தயர்வைக்
கெடுத்தே.

(இ-ள்) செகத்து திரித்த விடத்து ஒழிய } உலகமானது தோன்றுமற் கெடுத்தபோது
எளிர்ச்சி அற சிதைத்து - மறுபடியும் தோன்றுமல் நாசமாக்கி
விகற்பம் அற, தனி சுடர் விட்டு, எரித்து } பேதமில்லாத படி அத்துவைத ஞானானு பவத்தைக் கொண்டெரியச் செய்து
அயர்வை கெடுத்து — தளர்ச்சியை நாசமாக்கி. 23

381 கலுழ்ச்சிகளிப் பகத்தெளிவுட் கலக்கமிகுத் திகத்தே,
செலுத்தல்திரித் தலற்றடைச் சிவச்சுடர்விட் டெரித்தே.

(இ-ள்) கலுழ்ச்சி களிப்பு — அழுகையும் சந்தோஷமும்
அகத்தெளிவு உள்கலக்கம் — புத்தியின் விளக்கமும் மன்த்தின் ஆரவாரமும்
மிகுத்து இகத்தே — அதிகமாயிகலோகத்தில்
செலுத்தல் — செல்லலும்
திரித்தல் அற்று — மாறுபாடுறலும் இல்லாது

அடையசிவச் சுடர் ட்டு எரித்து } எல்லாவற்றையும் பிரம்ம பிரகாசத் தைக் கொண்டெரியச் செய்து. 24

382 தனிற்பிறிதற் றிருக்குமருட் டனிச்சுடர்தற் பதத்தே,
இனிப்பிறிதற் றிருக்கவிசைத் திடுக்கணறுத் துவிட்டே.

[இ-ள்] தனில் பிறிது அற்று } தனது சொருபத்திற்கு வேறில்லாது
இருக்கும் அருள் — இருக்கின்ற ஞானமய
தனி சுடர் தத்பதத்து — ஒப்பற்ற பிரகாசமாகிய பிரம்ம — சொருபத்தில்
இனி பிறிது அற்று — இனிமே லிரண்டாவது பொருள் இல்லாமல்
இடுக்கண் அறுத்து விட்டு இருக்க இசைத்து } துன்ப மொழித்து உள்ளபடி இருக்கச் செய்தவுடன். 25

383 சகப்புரணத் தடிப்படையைச் சமித்திடலுற் றிடத்தே,
சுகத்தெளிவிற் சிவப்பிரபையிற் களிப்பதனைத் தொலைத்தே.

(இ-ள்) சக புரண தடிப்பு அடைய சமித்திடல் உற்ற இடத்து, சுகத்தெளி வில் } உலகமாகத் தோன்றும் (ரஜோத மோரூப) தூலத் தன்மை யாவும் இல்லாமற் போனவிடத்தில், இல யவிட்சேப கஷாயங்களின்றிச் செய்யும் தியான வலியால் அடையுஞ் சவிகற்ப சமாதியில்உதயமாஆனந்தம் அல்லது விட்சேப துக்க நிவர்த்தி யாலுதயமாம்) ஆனந்தாநுபவத்தை,
களிப்பு அதனை சிவப் பிரபையில் தொலைத்து } கர்த்துரு கரணபாவங்க கழன்று) பிரம்மாகிய தான் மாத்திரம் விளங்கும் போது, புளகாங்கித மாகிய அச் சந்தோஷத்தை மாற்றி. 26

[அ-கை] மாயை அவித்தை யுபாதிகள் நீங்கி இலட்சியமான தனது வடிவம் நிலைத்த தெனல்.

384 காயா திகளேழு மாயா விடயத்தே-
கையற் றறிவின்கா ரணமா திகளேழும்,
மாயா விடயத்தே மாயச் சுகசற்சின்-
மயபூ ரணமேதன் வடிவா னதுவந்தே.

(இ-ள்) காயாதிகள் ஏழும் மாயாவிட யத்து கை அற்று } தேகம் பிராணன் இந்திரியங்கள் மன் புத்தி சித்தம் அகங்காரமாகிய ஏழும், அவித்தியா விஷயங்களான துவம்பதஅ வாச்சியம் நீங்கவும்

அறிவின் காரணம் ஆதிகள் எழும் மாயா விடயத்து மாய } தத்பத வாச்சியார்த்தமான சர் வேசுரத்துவம், சர்வஞ்ஞத்வம், சர்வ வியாபகத்துவம், சர்வ காரணத்து வம், சர்வ சிருஷ்டித்துவம், சர்வ சம்மாரத்துவம், சர்வ திதித்துவம் ஆகிய ஏழும், மாயையோடு நீங்க

சுக சத் சின் மய பூரண மே தன் வடிவு வந்து ஆனது } சத்சிதானந்த பரி பூரண பிரம்ம சொருபமே தனது வடிவமாக சுபாவ சித்தமாய் நிலை பேறுடைய தாம். 27

[அ-கை] *தோஷ மற்றதாய், அழிவற்றதாய், வாக்குக் கெட்டாததாய், ஞானமயமாய் துரியமுற்றவர் அநுப விப்பதாய் தேனெனத் தித்திப்பதாய் உள்ள பொருளே நாமென்று நிச்சயித்துத் தெளிவடைவாய்.*

385 கோதற் றமிர்தாகிக் கூறற் றுணர்வாகிக்-
கூறற் கரிதாகிக் கோசப் புலன்மாறித்,
தீதற் றவர்காணத் தேனொத் தினிதாகித்-
தேசத் திசைமாறித் தேறித் தெளிவாயே.

(இ-ள்) கோது அற்று அமிர்து ஆகி } குற்றமற்றதாய், அழிவற்ற மோட்ச சொருபமாய்

கூறு அற்று உணர்வு ஆகி - பேதமற்றதாய் ஞானசொருமாய்

கூறற்கு அரிது ஆகி — வாக்கால் வசனிப்பதற் கரியதாய்

கோசப்புலன் மாறி தீது அற்றவர் காண் } பஞ்ச கோசங்களும் பஞ்சேந்திரிய விஷயங்களும் நீங்கிய நனவிற் சுழுத் தியில் குற்ற மற்ற மகான்கள் தானாய் அநுபவிப்பதாய்

தேன் ஒத்து இனிது ஆகி — தேனுக்குச் சமானமாய் தித்திக்கும் பொருளாய்

தேச திசை மாறி தேறி தெளிவாயே } அஞ்ஞான பூமியை யடியோடு மாற்றி நாம் ஞான சொருபமென்று நிச்சயித்து தெளிவடை 28

*[அ-கை] எம் ஞான வேந்தனை எதிர்த்துஅழிந்த அஞ்ஞன் இவ் வுலகினுமில்லை தேவருலகினும் இல்லை அழியவுமில்லை. பாம்பு பழுதையாவது போல் ஆரோபமான அஞ்ஞன் அதிஷ்டமான பிரம்ம மாத்திரமாயினன்எனல்.*

**386** **எம்பி ரானை வந்தெ திர்ந்தி-றந்த வஞ்ஞ னிங்குருன்,**
**உம்பர் வானு ருதிரும-லொன்றி னனவ் வொளியொடே.**

| | |
|---|---|
| (இ-ள்) எம் பிரானை வந்து எதிர்ந்து இறந்த அஞ்ஞன் | எமது ஞான வேந்தனை வந்தெதிர்த்து அழிந்து போன வஞ்ஞ வேந்தன். |
| இங்கு உருன், உம்பர் வான் உருது இருமல் | இவ்வுலகினுமில்லை, தேவலோகத்திலுமில்லை, அழியவுமில்லை |
| அவ் வொளியொடு ஒன்றினன் | அப் பிரம்மப் பிரகாசத் தொடும் உலையிரும் புண்ட நீர் போலொன்றுயினன். 26 |

*[அ-கை] துன்பந் தந்த காமன் முதலிய சேனை அனைத்தும் ஞான மயமாகவே விளங்கினரெனல்.*

**387** **அல்ல லான காம ராச னுதியான சேனையும்,**
**இல்ல வாகி ஞான ரூப மாகி யேயி லங்குமே.**

| | |
|---|---|
| [இ-ள்] அல்லல் ஆன காமராசன் ஆதி ஆன சேனையும் | துன்பமயமான மன்மதன் முதலான படைகளனைத்தும் |
| இல்ல வாகிஞான ரூபம் ஆகியே இலங்கும் | மித்தையாய் சின்மாத்திர சொரூபமாகவே விளங்கியதாம். 30 |

*(அ-கை) ஆன்மாவை யறியாதழிந்த அஞ்ஞானுதியர் ஞானத்தின பின்னர் பேதஞானமும் அதன் காரணமான வஞ்ஞானத்துடனு மழிந்தனரெனல்.*

**388** **அறிவறி யாமைய ழிந்தனரே.**
**யறிவறி யாமைய ழிந்தனரே.**

| | |
|---|---|
| [இ-ள்] அறிவு அறியாமை அழிந்தனர் | பிரம்மான்ம அபேதத்தை யறியாத அஞ்ஞானுதியர்கள் பிறப்புஇறப்புற் றழிந்தார். |

அறிவு அறியாமை அழிந்தனர் } பிரபஞ்சத்தின் ஞானமும் அதன் காரணமான வஞ்ஞானத்துடன் பொய்யென்று பாதித்தழிந்தனர். 31

*[அ-கை] தேகாத்மாவின் பேதமறியாது மாறுபட்ட வஞ்ஞர்கள் ஞானமுற்றபின் தேகாதிப் பிரபஞ்சத்தின் பேதமும் அதன் காரணமான வஞ்ஞானமும் இன்றி மாறுபட்டனரெனல்.*

**389** பிறிவறி யாமைபி றழ்ந்தனரே,
பிறிவறி யாமைபி றழ்ந்தனரே.

(இ-ள்) பிறிவு அறி யாமை பிறழ்ந்தனர் } பிரம்மாத்மாவிற்கும் தேகாதிப் பிரபஞ்சத்திற்கும் பேதமறியாமல் வேறுபாடுற்ற வஞ்ஞர்கள், (ஞானமடைந்தபின்)

பிறிவு அறியாமை பிறழ்ந்தனர் } தேகாதிப் பிரபஞ்சத்தின் பேதமும் அதன் காரணமான வஞ்ஞானமுமில்லாமல் பொய்யென்று பாதித்து வேறுபாடுற்றனர். 32

**390** கரக்குமு ளத்தவ ராயினரே,
கரக்குமு ளத்தவ ராயினரே.

[இ-ள்] கரக்கும் உளத்தவர் ஆயினர் } (சீவேசுர செகத்தாகப் பார்த்து தனதாத்ம சொருபத்தை யறிமல்) மறைந்த மனமுடைய வஞ்ஞர்கள் (ஆத்ம ஞானத்தின் பின்)

கரக்கும் உளத்தவர் ஆயினர் } தன்னை பிரம்ம ரூபமாயறிந்து சீவேசுர செகத்து) மறைந்த மனமுடையவர்களானூர் 33

**391** இருக்க முடிந்தவ ருட்பொருளே,
இருக்க முடிந்தவ ருட்பொருளே.

(இ-ள்) உள் பொருளே இருக்க முடிந்தவர் } அந்தராத்மாவாகவே சுபாவ சித்தமாய் இருந்தும் அறியாம லழிந்து போன வஞ்ஞர்கள்

உள் பொருளே இருக்க முடிந்தவர் } ஞானத்தின் பின்) அவ்வந்தராத்மா தானுக நிலை பெற்றிருந்தார்கள். 34

*[அ-கை] மாயாந்தகாரம் அழியும்படி ஞான சற்குருவானவர் உபதேசித்தது தத்துவமசியென்னும் மகா வாக்கியமே, இதுவே மூவுலகத்திற்கும் உபதேசஞ் செய்வது மாமெனல்.*

392 அழிந்தற மாயையி ருட்டெலா-
மறிவுரு வாகநம் மண்ணலார்,
மொழிந்தது மிங்கொரு வார்த்தையே-
மூவுல கும்மொரு வார்த்தையே.

| | |
|---|---|
| (இ-ள்) மாயை இருள் எல்லாம் அற அழிந்து | மாயையான வந்தகார மெல்லாம் இல்லாமல்நாச முற்றொழிய |
| அறிஉருவு ஆக நம் அண்ணல் ஆர் மொழிந்தது | ஞானமே நமது சொருபமாக நம்முடைய பெருமையிற் சிறந்த குருநாதன் உபதேசித்தது |
| இங்கு ஒரு வார்த்தையே | — இவ்விடத்து ஒப்பற்ற மகா வாக்கியமே |
| மூவுலகும் ஒரு வார்த்தையே | — சொர்க்க மத்திம பாதளத் திலுமிதுவே வுபதேசமாம். 35 |

*[அ-கை] உளுந்துருளும் நேரத்திற்குள் ஞான சொருபமாயிருக்கும் படி நம் தலைமேல் தீட்சை செய்து அருளிய திருவடிகளை எக்காலும் வாழ்த்தி வணங்குவோமெனல்.*

393 உளுந்துரு ளுந்துணைப் போதிலே-
யுணர்வுரு வாகநம் முச்சிமே,
லெழுந்தரு ளும்மிரு போதுமே-
யேத்துவ தென்றுமெப் போதுமே.

| | |
|---|---|
| (இ-ள்) உளுந்து உருளும் துணைப் போதில் | உழுந்தம் பயிறு உருளுகின்ற நேரத்திற்குள். |
| உணர் உருவு ஆக நம் உச்சி மேல் | ஞானமே வடிவமாகும் பொருட்டு நமது சிரசின் மேல் |
| எழுந்தருளும் இரு போதும் | — எழுந்தருளியிருக்கும் இரண்டு — திருவடித் தாமரையை |

| | |
|---|---|
| என்றும் எப்போதும் ஏத்துவது | இடைவிடாமல் எல்லாக் காலங்களிலும் வாழ்த்தி வணங்கத் தக்கதாம். 36 |

*[அ-கை] அஞ்ஞனழிந்த பின் ஞான வேந்தன் தனது சேனைகளை திரும்புங்களெனவும் தம் பெரும் படை திரும்பிய தெனல்.*

394 அறிவி லானுயிர்க் கிறுதி செய்தபி-
னறிஞர் தம்பிரா னரிய தாளிணைப்,
பிறிவி லாததம் படையை மீள்கெனப்-
பெரிய சேனையுந் திரிய மீளுமே.

| | |
|---|---|
| (இ-ள்) அறிவு இலன் உயிர்க்கு | — அஞ்ஞ வேந்தனது உயிரை |
| இறுதி செய்த பின் | — நாசஞ் செய்த பின்னர் |
| அறிஞர் தம்பிரான் | — ஞான வேந்தனது |
| அரிய தாள் இணை | — கிடைத்தற்கரிய திருவடிகளை |
| பிறிவு இலாத தம் படையை | பிறியாதிருக்கின்ற தனது சேனைகளை |
| மீள்க என பெரிய சேனையும் திரிய மீளும் | திரும்புங்களென்று கூற பெரிய படையானது திரும்பி வருவனவாம் 37 |

# 24 வெற்றி சாற்றல்.

*(அ-கை) தேகமாகிய அவித்யா பட்டணம் ஞானக் கினியாலெரிந்து போனதை; அறிந்தோர்கள், சச்சி தானந்த வடிவ சற்குரு நாதனைப் போற்றியுரைத்தன ரெனல்.*

395 காய மாகிவாழ் மாய மாபுரம்-
கட்ட டங்கவே சுட்டல் கண்டுளோர்,
தூய ஞானநற் சுடர்வி ளங்குமெய்ச்-
சொருப னார்பதந் தொழுது ரைப்பரே.

| | |
|---|---|
| (இ-ள்) காயம் ஆகி வாழ் மாய மாபுரம் கட்டு அடங்கவே சுட்டல் கண்டு உளோர் | தூல தேகமாய் வாழ்ந்து கொண்டிருந்த மித்தியா பட்டிண மானது மித்தை யென்னும் திருஷ்டியாகிய தீயாலெரிந்து போனதைக் கண்டவர்கள் |

தூய ஞான நல் சுடர் — பரிசுத்த ஞானமே ஆனந்தமாய்ப் பிரகாசித்து

விளங்கு மெய்ச் சொருபனூர் பதம் தொழுது உரைப்பர் } விளங்கா நின்ற சத்யசொருபராகிய சற்குரு நாதர் திருவடிகளை வணங்கி வாழ்த்தி விண்ணப்பஞ் செய்தனர் 1

(அ-கை) *தேவரீர் மண்ணுலகத்திற்கு வாரா முன்ன மிருந்த மாசு வந்தருளிய பின்னர் மறைந்த தெனவ்.*

396 **அடியே முள்ளங் கருப்பது நல்-**
**லம்போ ருகங்கள் சிவப்பதுமிப்,**
**படியே வந்த பரனே நின்-**
**பாதங் காட்டாப் பண்டன்றே.**

*[இ-ள்] அடியேம் உள்ளம் கருப்பது* } *அடியேங்களது மனமானது கறுத்ததுவும்*

நல் அம்போருகங்கள் — நன்மைதருந் திருவடித் தாமரைகள்

சிவப்பதும், இப்படியே வந்தபரனே நின்பதம் காட்டா பண்டு அன்றே } சிவந்திருப்பதுவும் இப்பூலோகத்தின் கண்ணெழுந்தருளிய மேலானவனே நினது திருவடிகளை தெரிசனந் தராத பழைய காலத்திலல்லவா (அப்படி இருந்தது இன்று மாசற்ற தென்பதாம்) 2

(அ-கை) *தேவர்கள் உலகமும் இவ்வுலக வாழ்வும் கொடும் பிறவியும் புவியில் தேவரீர் வந்தருளியவுடன் பொய்யாய்ப் போன தெனல்.*

397 **செய்யப் படுந்தே வருமுலகுஞ்-**
**சிறியோம் வாழ்வுந் தீப்பிறப்பும்,**
**பொய்யற் றிருப்ப தெம்பெருமான்-**
**புவியிற் போதாப் போதன்றே.**

(இ-ள்) செய்யப்படும் தேவரும் உலகும் சிறியோம் வாழ்வும் } சிருஷ்டித்திருக்கின்ற தேவர்களும் உலகங்களும் சிறியேங்களான எமது வாழ்வும்

தீப்பிறப்பும் பொய் யற்று இப்பது. } தீய பிறவியும் பொய்யில்லாமல் இருப்பதானது.

எம் பெருமா புவியில்ன் — எமது சற்குருநாதன் மண்ணு உலகத்தில்

போதாபோது அன்றோ — எழுந்தருளாத போதல்லவா
(இன்று பொய்யாம்) 3

(அ-கை) *தேவரீருடைய கிருபா திருஷ்டிபட்டபின்னர் போதல் வருதல் சுவர்க்கம் நரகம் முதலியவனைத்துங் கனவு போலப் பொய்யாம் மெனல்.*

398 போக்கும் வரவும் பொன்றுடும்-
புழுவார் நரகும் புசிப்பனவும்,
ஆக்க மழிவுந் திருக்கடைக்கண்-
ணணுகா திருக்கு மளவன்றே.

(இ-ள்) போக்கும் வரவும் — அவ்வுலகத்திற்குப் போவதும்இவ்வுலகத்திற்கு வருதலும்
பொன்றுடும் — சொர்க்க லோகங்களும்
புழுவுஆர் நரகும் — கிருமிகளுற்ற நரகங்களும்அதை
புசிப்பனவும் — அநுபவிப்பதும்
ஆக்கம் அழிவும்-செல்வமாயிருப்பதும் வறுமையாயிருப்பதும்
திருக்கடைக்கண் — குருநாதரது அழகிய கிருபாதிருஷ்டியை
அணுகாது இருக்கும் அளவு அன்றோ } அடையாதிருக்கின்ற பரியந்தமல்லவா (அச் செயல்கள் இன்றில்லை) 4

(அ-கை) *தேவரீர் திருக்கரத்தால்அஞ்சாதே யென்றருளாத காலத்திலல்லவா பிறப்பிறப்பாகிய பெரும்பிணிக்குக் கலக்கமுற்றதெனல்.*

399 சாவா கின்ற பெரும்பி ணிக்குஞ்-
சனிக்கும் பிணிக்குந் தடுமாற்றம்,
ஆவா வென்றுன் றிருக்கரத்தா-
லஞ்சே லென்னு மளவன்றே.

[இ-ள்] சாவு ஆகின்ற — இறப்பென்கின்ற
பெரும்பிணிக்கும் — பெரிய வியாதிக்கும்.
சனிக்கும் பிணிக்கும் — பிறப்பாகிய வியாதிக்கும்
ஆ, ஆ, என்று தடுமாற்றம் - ஆ,ஆ வென்றலறி கலக்கமுற்று இருப்பது
உன் திருக்கரத்தால் — உமது அழகிய கைகளால்
அஞ்சேல் என்னும் அளவு அன்றோ } பயப்படாதே யென்றருள் புரியாத பரியந்தமல்லவா (அவ்விதமிருந்தது இன்றில்லை) 5

*[அ-கை] மோட்சத்திற்குத் தலைவனே! பூரணமாயிருக்கின்ற தேவரீருடைய திருவடி சூட்டாத போதன்றோ மன வியாகுல முற்றதெனல்.*

**400 முத்திக் கரசே நீயெங்கு-**
**முழுந்தி யிருப்ப விழுந்துழலும்,**
**புத்திக் கிலேசந் தலைமிசையுன்-**
**பொற்ருள் பொறியாப் போதன்றோ.**

| | |
|---|---|
| (இ-ள்) முத்திக்கு அரசே நீ எங்கும் முழுந்தி இருப்ப | விடுதலை பெற்றிருக்கும் சார்வ பௌமச் சக்கரவர்த்தியே தேவரீர் எவ்விடத்தும் பரிபூரணமாயெழுந்தருளி இருக்கும். |
| உன் பொன்தாள் தலை மிசை பொறியாப் போது அன்றோ | உமது அழகிய திருவடிகளை சிரசின் மேல் சூட்டாத காலத்திலல்லவா |
| விழுந்து உழலும் புத்திக் கிலேசம் | கிடந்து சுழலும் சித்த வியாகுலம் (இன்றில்லை யென்பதாம்) 6 |

*அ-கை உள்ளம் முதலிய அகக்கரணமென்றும், ஞான கர்மேந்திரியங்களென்றும், சாக்கிர முதலிய அவஸ்தைகளென்று கூறும் இரட்டை தருமங்களாகிய கலவர்மெல்லாம் தேவரீரைச் சரணடையா தாருடைய வார்த்தைகளா மெனல்.*

**401 அந்தக் கரணம் புறக்கரண-**
**மவத்தை பலவோ டகம்புறமாந்,**
**தொந்தக் கலாதி யாவையுநின்-**
**றுணைத்தாள் சூடார் சொல்லன்றோ.**

| | |
|---|---|
| (இ-ள்) அந்தக்கரணம் | — உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்கார மெனவும் |
| புறக்கரணம் | — ஞான கர்மேந்திரியங்களெனவும் |
| அவத்தை பல ஓடு | — நனவு கனவு சுழுத்தி துரியம் துரியாதீதமெனவும் |
| அகம் புறம் ஆம் | — உள்ளும் வெளியாயிருக்கின்ற |
| தொந்தக் கலாதி யாவையும் | துவந்துவக் கலக்கங்களெல்லாம் |

நின்துணைத்தாள் கூ } தேவரீருடைய உபய சரணாரவிந்தங்
டார் சொல் அன்றோ } களை சிரத்திற் றரிக்காதவர் வார்த்
தைகளல்லவா(தாளடைந்தார் சொல்லாரென்பதாம்) 7

*[அ-கை] சர்வ சமயங்களிலும் எல்லா கர்மங்களும் பலன் தராதிருத்தல், தேவரீருடைய திருவாக்கால் உபதேசிக்காத பரியந்தமெனல்.*

402 சமயா வெந்தச் சமயமுமெச்-
சவலைச் சடங்குத் தனமுமெல்லாம்,
அமையா ததுநின் திருப்பவள-
மலரா திருக்கு மளவன்றோ.

இ-ள் சமயா எந்த சமயமும் - பாகமின்றிய சர்வ மதங்களும்
எச்சவலை சடங்கு தனமும் எல்லாம் } எவ்வித சஞ்சலமான கிரியைத் தன்மைகள் யாவுமே.
அமையாதது நின் — சித்தியாமலிருப்பது தேவரீருடைய
திருப்பவளம் மலராது இருக்கும் அளவு அன்றோ } அழகிய பவளம் போன்ற வாயிலிருந்து திருவார்த்தை யுண்டாகாத பரியந்தமல்லவா
திருப்பவளம்மலர்ந்தஇந்நாள்எல்லாம்அமையுமென்பதாம் 8

*(அ-கை) எல்லையற்றிருப்பது தேவரீருடைய சுபாவமாம் எங்களைத் தாங்கள் எவ்வளவாய்வைத்தீர்களோ யவ்வளவாயிருப்பதால் உமது பெருமையை யாராலு மறிய முடியா தெனல்.*

403 எவ்வளவு மளவுபடா திருக்கை யுன்ற-
னியல்பாகு மெங்களையெவ் வளவின் வைத்தாய்,
அவ்வளவே யளவாகி யிருக்கை யெங்க-
ளளவாகு முன்பெருமை யறிவா ரியாரே.

[இ-ள்] எவ்வளவும் அளவுபடாது இருக்கை உன்றன் இயல்பு ஆகும் } எப் பிரமாணங்களினாலும் அறிய முடியாதுஎல்லையற்றிருப்பதுவே தேவரீருடைய இயற்கையாம்
எங்களை, எவ்வளவில் வைத்தாய், அவ்வளவே அளவு ஆகி, இருக்கை. } எம்மை எவ்வளவாய் வைத்திருக்கின்றாயோ. அந்த அளவே யளவதாகி இருப்பது

| | |
|---|---|
| எங்கள் அளவு ஆகும் உன் பெருமை ஆர் அறிவார் | எங்களுடைய அளவாயிருப்பதாம் உமது மகிமையையாராலுமறிய முடியாதென்பதாம் 9 |

[அ-கை] தூல சூட்சும தேகமாயிருந்தோம். சாட்சியாஞேம். காட்சியற்ற ஞானவடிவாஞேம். எல்லாமாய் நிறைந்திருந்தோம். இவ்விதம் செய்யும் உமது லீலையையென்னென்று சொல்வோமெனல்.

404 கடம்படுமிவ் வுடம்பாஞேங் கரண மாஞேங்-
கண்டிருந்த கரியாஞேங் காட்சி தீர்ந்த,
திடம்படுபே ருணர்வாஞே மெல்லா மாஞேந்-
திருவிளையாட் டிருக்கின்ற செயலி தென்னே.

| | |
|---|---|
| (இ-ள்) கடம்படும் இவ்வுடம்பு ஆஞேம், கரணம் ஆஞேம் | கடத்திற்குச் சமமான இத்தூல தேகமாயிருந்தோம் சூட்சும தேகமாயிருந்தோம் |
| கண்டு இருந்த கரி ஆஞேம் | — இவைகளைஅறியுஞ் சாட்சியானோம் |
| காட்சி தீர்ந்த திடம் படு பேர் உணர்வு ஆஞேம் | காண்பொருள் ஞானமற்ற திடமாயருக்கின்ற பெரிய ஞான சொருபமாயிருந்தோம் |
| எல்லாம் ஆஞேம் | — சர்வபரிபூரணமாயிருந்தோம். |
| திருவிளையாட்டு | — உமது அழகிய லீலையாய். |
| இருக்கின்ற செயல் | — இருக்கும் காப்பாகிய |
| இது என்னே | — இம்முறையையென்னென்று சொல்வது. 10 |

[அ-கை] அஞ்ஞானமென்றும் அதனுல் வந்த அனந்த பிறப்பென்றும் தளர்வு தீர தத்துவஞானம் வந்ததென்றும் செய்ததெல்லாம் ஒருவனுயிருந்து நீர் செய்த சாமர்த்தியம் வியப்புக்குறிய தெனல்.

405 அஞ்ஞான மென்னவுமங் கதனு லாய-
அநேகபவ மென்னவுமவ் வயாவு தீர்ந்த,
மெய்ஞ்ஞான மென்னவுநின் ஞெருநீ தானே-
விளையாட ரேற்றுவித்த விரகீ தென்னே,

அஞ்ஞானம் எனவும் — அறியாமை எனக்கூறவும்
அங்கு அதனுல் ஆய — அவ்விடத்து அதனுலுண்டான
அநேகபவம் என்னவும் - பல கோடி பிறவிகள் எனக் கூறவும்

அவ்வயர்வு தீர்ந்த — அதனால் வந்த துக்கம் நிவர்த்தித்த
மெய்ஞ்ஞானம் என்னவும் நின்று } தத்துவ ஞானம் என்பதாயிருந்தது
ஒரு நீதானே — ஒருவராய தேவரீரல்லவோ
விளையாடல் தோற்று விதத விரகு ஈது என்னே } இந்த லீலையை உண்டாக்கிய சாமர்த்தியமான இது ஆச்சரியம் 11

*(அ-கை) நித்திய வரகாசமாய் நிறைந்த சொருபான ந்தர் சொன்ன மார்க்கத்திற் செல்லுஞ் செல்வமே செல்வமாகு மெனல்.*

**406 ஒழியாத பரவொளியா யோங்குசொரு பானந்தன்**
**வழியான செயலுறுதி வாழ்வன்றே வாழ்வாதல்.**

(இ-ள்) ஒழியாத பர வெளிஆய் — நீங்காதிருக்கும் பராகர்யமாய்
ஓங்கு சொருபானந் தன் வழிஆன செயல் உறுதி } உயர்ந்திருக்கின்ற சொருபானந்த ரென்னும் குருநாதர் காட்டிய மார்க்கமான அநுட்டானத்தில் திடமாய் அநுட்டிக்கின்ற
வாழ்வு அன்றே வாழ்வு ஆதல் } செவ்வமல்லவா செல்வமென்பதற்கு அர்த்தம். 12

# 25-திருமுடி சூட்டல்.

*[அ-கை] மனம் பரவசமாய் யானெனதற்ற நிலையா கிய திருவடிகளை மறவாதிருக்கின்ற தன்மையே ஞானமா மெனல்.*

**407 அடங்காமற் புலனுருக வடியிணையே வெளியான,**
**திடங்காணல் கண்டிருக்குந் தெளிவன்றே தெளிவாதல்.**

[இ-ள்] அடங்காமல் புலன் உருக } பரவசமாய் மனமானதுருகவும்
அடி இணையே வெளி ஆன — திருவடித்தாமரைகளையேஞான ஆகாயமாகிய
திடம் காணல் கண்டு இருக்கும் — உறுதி கண்டிருத்தலே மாறுதிருக் கின்ற

தெளிவு அன்றே } ஞானமல்லவோ, ஞானமென்பதி
தெளிவு ஆதல் } னர்த்தம் 1

*[அ-கை] உண்டாகாநின்ற பாவ புண்ணியங்கள் ஒழியவும் நித்ய பரமாத்மாவானது சாட்சியாயும் சாமானியமாயும் மங்களமாயும் நிறைந்து இருப்பதாம் எனல்.*

**408 தோன்றும்வினை வழியொழியத் தோன்றத பொருடோன்றிச்,**
**சான்றது வேதாஞகுந் தற்சிவமாய் நிறைந்ததுவே.**

(இ-ள்) தோன்று } மனோவாக்கு காயத்தாலுண்டாம்
வினை வழி ஒழிய } இருவினைஅழிந்து

தோன்றுத பொருள் தோன்றி — அஞாதியாருக்கின்ற பரவஸ்து வானது விளங்கி

சான்றதுவே தான் ஆகும் — சாட்சியாயும் சமானியமாயுமிருக்கின்ற

தத் சிவமாய் நிறைந்தது — அந்தப் பிரம்மம் மங்களமாய் நிறைந்திருப்பதாம். 2

*அ-கை அளவற்றபிறவிக்கடலைஊழித்தீயாகியஞானத்தால் எறிந்த ஞான வீரனது வீரமறிந்துரைத்தலரிது இனி,முக்கரணங்களால் வாழ்த்தி வணங்குவோமென்றடியார்தளுரைத்தனரெனல.*

**409 எல்லை யில்பவ வேலை வீரனெ-**
**றிந்த வாண்மைய றிந்தெமாற்,**
**சொல்ல வில்லினி வல்ல வாறடி-**
**தொழுகை யென்றிவர் தொழுவரே.**

[இ-ள்] எல்லை இல்பவ வேலை — முடிவில்லாத பிறவியாகிய சமுத்திரத்தில்

வீரன் எறிந்த ஆண் } ஞானமாகிய வடவா நலத்தை ஞா
மை அறிந்து எமால் } ன வீரனெறிந்த வல்லபத்தை அறி
சொல்லஇல் இனி } யவும் கூறவும் எங்களால் முடியாது;
வல்ல ஆறு } இதற்கு மேலியன்ற மட்டும்

அடி தொழுகைஎன்று } மனோவாக்கு காயங்களால்
இவர் தொழுவர் } குருநாதர்திருவடிகளை வாழ்த்தி வணங்குவதே என்பதாகக் கூறி இவ்வடியவர் போற்றினர். 3

(அ-கை) ஞானவிநோதன் வீரத்தைப் பலர் வியந்து கூறவும், அவ்வீரன் (நமது பாடலில் புறப்பட்டவன் வெற்றி கண்டு) தன்னையாட்கொண்ட தலைவனடிகள் அடைந்தானெனல்.

410 வீர ஞானவி நோத னாண்மைவி-
ளம்பு வார்கள்வி ளம்பவத்,
தீர னார்தமை யாளு நாயகர்-
செம்பொன் மெல்லடி சேரவே.

[இ-ள்] வீர ஞான விநோதன் ஆண்மை — வீரனாய ஞான வேந்தனுடைய வல்லபத்தை
விளம்புவார்கள் விளம்ப — பேசக் கூடியவர்களெல்லாம் பேசிய பின்னர்
அத்தீரனார் தமை ஆளும்- அந்தஞானவேந்தனையாட்கொண்ட
நாயகர் செம்பொன் மெல்லடி சேர { சற்குருநாதருடைய பத்தரைமாற்றுத் தங்கம் போற் பிரகாசிக்கின்ற மிருதுவான திருவடிகளைச் சரணடையவும் 4

(அ-கை) பிரம்மஞான விழிப்பாகிய செங்கோல்என்றும் செய்வாய் என்று கிடைத்தற்கரிய திருவடியாகிய நவரத்தின கீரீடத்தை சற்குருநாதர் சூட்டியருளினார்

411 ஞான சக்கிர மெங்குநீர்ந டாத்துகென்று நல்லதாள்.
ஆன ரத்ன முடிக விக்க வருளினானிவ் வண்ணலே.

(இ-ள்) ஞான சக்கிரம் எங்கும் நீர் நடாத்துக என்று } பிரம்மசாக்கிரமாகிய வரசாட்சியை (எக்காலும்) எவ்விடத்தும் நீங்கள் நடத்துங்கள் என்பதாக
நல்லதாள் ஆன — திருஷ்டஅதிருஷ்டமான நலன்தரும் திருவடிகள் ஆய
ரத்னமுடி கவிக்க — நவரத்னக் கீரீடத்தைச் சூட்டி
அண்ணல் அருளினான் - சற்குருநாதன் திருவருள் புரிந்தான் 5

[அ-கை] ஞான வேந்தனுக்குத் திருவடிதீட்சைசெய்து சற்குருநாதனும் மற்றுளோரும் அடைந்த அதிசயம் அளவில்லை யெனல்.

412 ஞானவானைத் தாள்கள் சூடி நாயகன் மார்க டாமெலாம்,
ஆனவான வதிசயங்க ளியாவர் கூற லாகுமே.

(இ-ள்) ஞானவானை தாள்கள் சூடி } ஞானவேந்தனுக்குத்திருவடி தீட்சை செய்து

நாயன் மார்கள் தாள் எலாம் — குருநாதனும் அடியார்கள் எல்லோரும்

ஆன ஆன அதிசயங்கள் — அடைந்ததான ஆச்சரியங்கள்

இயாவர் கூறல் ஆகும் — எவரால் சொல்லுதற்கியலும். 6

*(அ-கை) அடியார்கள், பூரணாத்ம சொருபத்தை உள்ளத்திலே உள்ளபடி யுணர்ந்துய்ய வுபதேசித்து குருநாதன் தீரச்செயலே யென்று கூறி, அவர் திருவடிகளை சிரத்திலணிவரெனல்.*

413 ஒழிவற்ற தன்சோதி யுருவத்தை நம்பா-
லுள்ளங்கை நெல்லிப்ப ழம்போல வுடையான்,
மொழிவுற்ற விரகேயெ ஞநின்று மொழிவார்-
முன்ஞேன்ம லர்பாத முடிமீது கொள்வார்.

(இ-ள்) ஒழிவு அற்ற தன் சோதி உருவத்தை நம்பால் } பூரணமாயிருக்கின்ற ஆத்மாவாகிய சுயம்பிரகாச சொருபத்தை நம்மிடத்திலேயே

உள்ளங்கைநெல்லிப்பழம் போலஉடையான் } அங்கை நெல்லிக்கனி போன்று நமது சற்குருநாதன்

மொழிஉற்ற விரகே — உபதேசித்த ஞான வல்லபமே.

எஞநின்ற மொழிவார் — என்பதாக புகழ்ந்து கூறுவார்கள்

முன்ஞேன் மலர்ப்பாதம் முடிமீது கொள்வார் } முதல்வஞய குருநாதன் திருவடித் தாமரைகளைத் தலைமீதணிந்து கொள்வார்கள். 7

*[அ-கை] உள்ளமானது உலையிரும் புண்டநீர் போல் தனது சொருபமாகுமே யல்லாமல் வேறொன்ருகாதபடி உண்மைஞானத்தைத் தந்த குருநாதன் செயல் ஆச்சரியம் என்று பலர் கூருநிற்பர் எனல்.*

414 தன்செய்ய திருமேனி யேயன்றி வேருேர்-
தாஞென்றி லாவண்ண மெந்தம்பி ராஞர்,
என்செய்த வாருேவி தென்னென்று மொழிவா-
ரென்னேயி தென்னேயி தென்னேயி தென்பார்.

[இ-ள்] தன்செய்ய திருமேனியே அன்றி வேறு ஓர் — தனது சிவந்த அழகிய சொருபமே அல்லாமல் மற்றொன்றாய்

தான் ஒன்று இலாவண்ணம் — தாமெதுவும் ஆகாதபடி

எம்பிரானார் என்செய் தவாறோ இது என் என்று மொழிவார் — எமது தலைவர்பிரான் எப்படிச் செய்தருளிய தகவோ இச்செயல்! ஆச்சரியம் என்பதாகப் பேசாநிற்பர்

என்னே இது இது என்னே இது என்னே என்பர் — சிலர் இதாச்சரியம் இதாச்சரியம் இதாச்சரியமென வியந்து கொண்டாடுவர் (ஞானிகள் வேறுடம்பு அடையார்கள் என்பது குறிப்பு) 8

[அ-கை] *குருநாதனுக்கு அன்னியமான பொருளில்லை அவர் பேதமொழிக்க வந்தவர். அருளே வடிவமாய் வந்தவர் என்று பலர் பலவிதங் கூறுவரெனல்.*

**415 பொருளேது மிவரன்றி வேறில்லை யென்பார்-**
**பேதங்கி டீர்செய்ய பொன்மேனி யென்பார்,**
**அருளேகி டீர்வந்த திருமேனி யென்பா-**
**ரளவாவ தேயிந்த வருளென்று மொழிவார்.**

(இ-ள்) இவர்அன்றி பொருள் ஏது — இந்தக்குருநாதரல்லாமல் பரம் பொருள் எங்கிருப்பது

வேறுஇல்லை என்பர் - மற்றொன்றில்லையென்று உரைப்பார்கள்

பேதம் கிடீர் செய்ய — பேதத்தை நடுங்கச் செய்கின்ற

பொன் மேனி என்பர் — திருவுருவம் என்றுரைப்பார்கள்

அருளே கிடீர் வந்த திருமேனி என்பார் — திருவருளே யசைந்து எழுந்தருளிய அழகிய வடிவமெனக் கூறுநிற்பர்

அளவு ஆவதேஇந்த அருள் என்று மொழிவார் — இவ்வடிவ மெவ்வளவோ அவ்வளவும் இத்திருவருளேஎனப்புகழ்வார்கள் 9

(அ-கை) *மாயை மாயாகாரியங்கள் ஆகாத தலைவன் மண்ணில் மனிதனாய் வந்தது; அளவற்றது வடிவெடுத்து வந்தது அருள் தானென்பரெனல்.*

**416 பொய்யோடு மெய்யேது மில்லாத பெருமான்-**
**புவனிக்க ணெம்மைப்பு குந்தாள விதுவு,**
**மையோவொ ரளவாவ தேயென்று மொழிவா-**
**ரருளோவி தருளோவி தருளோவி தென்பார்.**

[இ-ள்] பொய்யோடு மெய்யேதும் இல்லாத பெருமான் } காணப்படாத மாயையாகவும் காண்பொருளானமாயையின்காரிய நாமரூப செகத்தாகவும் ஆகாத எம்தலைவன்

புவனிக் கண் எம்மை புகுந்து ஆள இதுவும் } புலோகத்தில் எங்களை அவதரித்து ஆட்கொள்ள அபரிச் சின்னமான இந்தப் பொருளும்

ஐயோ ஓர் அளவு ஆவதே என்று மொழிவார் } அதிசயமாய்ஓர் வடிவெடுத்து வந்ததே என்பதாக வியந்து கொண்டாடுவர்

இது அருளோ இது அருளோ இது அருளோ என்பர் } இது அருள்தானே இது அருள் தானே இது அருள்தானே என்றயர்ந்து உரைப்பர். 10

[அ-கை] அளவற்ற பேரின்ப வாழ்வாயிருக்கும் பெருமான் வரையபு முடியாத வடிவெடுத்தால் அதைக் காணக் கண்கள் உடம்பெல்லாமில்லையே என்பர் சிலர் தலைவனைக்காணாதகண்கள் கண்களாகாதெனல்.

417 எண்ணாத பெருவாழ்வெ மக்காய பெருமா-
னெழுதப்ப டாமேனி யிதுகாண வெங்குங்,
கண்ணான திலையேயெ மக்கென்று மொழிவார்-
கண்ணல்ல காணாத கண்ணென்று ரைப்பார்.

(இ-ள்) எண்ணாத பெருவாழ்வு எமக்கு ஆய பெருமான் } அளவில்லாத பேரின்பத்தை எங்களுக்குத் தந்திருக்கின்ற பெருந்தலைவன்

எழுதப்படா மேனிஇது-சித்தரிக்க முடியாத திருமேனியிதாம்

காண எங்கும் கண்ணானது இலையே எமக்கு என்று மொழிவார் } காண்பதற்குச் சரீரமெங்கும் கண்களானவை எங்களுக் கில்லாது போயிற்றே எனவியந்துரைப்பர்

கண்ணல்ல காணாத கண் என்று உரைப்பார் } கண்ணாக மாட்டாது குருநாதனைக் காணாத கண்கள் எனக் கூறுநிற்பர் 11

(அ-கை) அடையாத நம்மையும் வலிதிலாட் கொண்ட தலைவனை வாழ்த்தஉடம்பெலாம் வாய்களாகப் பெற்று வாழ்த்தாது என்னை! இரும்போ என்பர். திருவடியின் மீதுள்ள பிரேமையால விழ்வரெனல்.

418 ஏயாத வெமையாளு பெருமானே யென்னே-
யிரு ம்போநம் முடல்கொண்டெவ் விடமெங்குமெங்கும்,
வாயாய்வ ழுத்தாதி ராநின்றதென்பார்-
மலர்ப்பாத மீதுள்ள மாலாகி வீழ்வார்.

(இ-ள்) ஏயாத எமை ஆளும் பெருமானே } திருவடியைச் சாராத எம்மை வலிதில் ஆட்கொண்ட சற்குருநாதன்

நம் உடல் கொண்டு எவ்விடம் எங்கும் வாயாய் } நமதுடம்பிலுள்ள தெவை அவ்வவயவங்களெல்லாம் வாய்களாகப் பெற்று

வழுத்தாது இரா நின்றது — வாழ்த்தாமல் இருப்பது

எனனே இ நம்போ என்பார் } என்ன காரணம் நமது மனமானது இம்பாயிருக்குமோ என்பர்,

மலர்ப்பாதம் மீது உள்ளமால் ஆகி வீழ்வார் } திநவடித் தாமரைகள் மேலிருக்கின்ற அன்பின் அதிகத்தால் மயக்கமாய் வீழ்ந்து கிடப்பார்கள். 12

*[அ-கை] குருநாதன் அருகில் செல்வர். பயந்தும் நின்றிடுவர். பயமற்றுப் போனுலும் பற்றப் பல கரங்களில்லையே என்பர். எவ்விதத்தும் மனம் திருப்தி ஆகாதென்பர், என்ல்.*

419 அருகேசெ லச்செல்லு வாரஞ்சி நிற்பா-
ரஞ்சாது செனருலு மெஞ்சாது புல்லற்,
கொருகோடி கையில்லே யேயென்று மொழிவா-
ரொன்ருலு மாராது காணென்று ரைப்பார்.

[இ-ள்] அருகே செல செல்லுவார் — பக்கத்திற் போகநினைத்துப் போவார்கள்.
அஞ்சி நிற்பார் — பயந்து நின்று விடுவார்கள்.
அஞ்சாது சென்ருலும் -பயந்தெளிந்து பக்கத்திற் போனுலும்
எஞ்சாது புல்லற்கு — குறைவில்லாமற் பிடிப்பதற்கு
ஒரு கோடி கைஇல்லேயே — கோடன கோடி கைகளில்லாமற் போயிற்றே
என்று மொழிவார் — என்பதாக வியந்து கூறு நிற்பர்
ஆராதுகாண் என்றுரைப்பர் - எவ்விதத்தும் ஆறுதலடையாதென்பர். 13

*[அ-கை] தாயே அவ்விடத்து அடியார்கள் அன்பாற்செய்யும் செயலை என்றுலெடுத்தியம்பலாது! நேரே அறியத்தக்கதாம் இப்படிப் பிராரத்த பரியந்தம் இருப்பதாயினார் என்ன, இன்றென்னை எனக்கூறு லெனல்.*

**420** **அன்னேயங் கவர்கள்செய லென்று லிங்குகொன்-**
**றறையுமள விலகண்டே யறியி னல்லால்,**
**இன்னேதங் குறைக்காலங் கழித்தா ரென்ன-**
**விக்கால மென்னேயென வியம்ப லுற்றே.**

(இ-ள்) அன்னே அங்கு அவர்கள் — காளியம்மையாய தாயே அவ்விடத்தடியார்கள்

செயல் என்றால் இங்கு - செயல்களை என்றால் சந்நிதானத்தில்

1. கண்டே அறியின் அல்லால் — சுவானுபவமா யிருந்தனுபவித்தாலல்லாமல்

2. ஒன்றும் அறையும் அளவு இல — ஓர் சிறு விஷயத்தின் அளவையும் கூற முடியாது

3. இன்னேதம் குறைக் காலம் கழித்தார் என்ன } இந்தப் பிரகாரம் தங்கள் பிராரத்த பரியந்தம் அநுபவித்துக் கொண்டிருந்தார் என

இக்காலம் என்னேஎன இயம்பல் உற்றே } இப்பொழுதே ஏன் அடையக் கூடாதுஎனவும், பேய்கூறுநின்றது 14

*(அ-கை) சீவன் முத்தியளித்த தேசிகருக்கு, விதேக முத்தி தருவதுதஅரித்தல்ல ஆயினும், உடம்போடு உலகமுய் வதற்காவும் சிலகாலம் குருநாதனை வாழ்த்தி வணங்குவதற்காகவும் இருப்பரெனல்.*

**421** **செய்தருளும் படிக்கிதுவு மன்றே தீர்க்கை-**
**தேசிகனுக் கொருபொருளோ திரித்தல் பின்னும்,**
**உய்தரவந் தருளுகழ லுவந்து வாழ்த்தி-**
**யுடம்பெடுத்த பயன்சிலநா ளுறுதற் கன்றே.**

இ-ள்] செய்தருளும் படிக்கு இதுவும் அன்றே தீர்க்கை } ஆவரணத்தோடு சஞ்சிதாகாமியங்களை நீக்கிய படியே இப் பிராரத்த கர்மமும் அப்பொழுதே நீக்குவது

தேசிகனுக்கு ஒரு பொருளோ — நமது குரு நாதருக்கு முடியாத காரியமல்ல

திரித்தல் பின்னும் — மாறுபாடாய் பின்னரும்
உய்தர வந்தருளு — உலகோருய்வதற்காய் எழுந்தருளிய
கழல் திருவடிகளை
உவந்து வாழ்த்தி — விருப்போடு போற்றி செய்து
உடம்பு எடுத்த பயன் சில நாள் உறுதற்கு அன்றே } தேகமாய் அவதரித்த பிரயோஜனத்தை சிலகாலம் அடைவதற்கு இருப்பது அல்லவா. 15

(அ-கை) *முழுபக்தியுடன் அடியார்கள் ஞானவிநோதனை வணங்கவும், மும்மூர்த்திகள் முதலான தேவர்களும், மற்றெல்லோரும் வணங்கும்படியாயிருந்தனர். இது குருநாதன் அருளின் தகவு இவ்விதமெனத் தேவியை வணங்கும்போது எனல்.*

222 முழுந்தியவன் பினர்மலர்த்தாண்முடிமேற் சூட-
மூவர்களுந் தேவர்களு முழுதும் போற்ற,
எழுந்தருளி யிருந்தனனிங் கிறைவன் செய்த-
வியல்பிதுவென் றிறைவிபதத் திறைஞ்ச லுற்றே.

(இ-ள்) முழுந்திய அன்பினர் - நிறைந்த பத்தியுடையவர்கள்
மலர்த்தாள் முடிமேல் சூட — திருவடித் தாமரைகளைத் தலையிற் றரித்துக்கொள்ள
மூவர்களும் தேவர்களும் முழுதும் போற்ற } திரிமூர்த்திகளும் இந்திராதி தேவர்களும் மற்றெல்லோரும் வாழ்த்தி வணங்கவும்
எழுந்தருளி இருந்தனன் — உடம்போடு கூடியிருந்தனர்.
இங்கு இறைவன் செய்த இயல்பு இது என்று இறைவிஇடத்து இறைஞ்சல் உற்றே } இவ்விடத்து குருநாதன் அருள் புரிந்த தன்மையிப்படியிருந்த தென தேவியின் திருவடிகளை வாழ்த்தி நிற்கும் போது, 16

(அ-கை) *எனக்குப் பிரியமான சொருபானந்த ரென்னும் தலைவனை வாழ்த்தி அவர் புகழையே புகழ்ந்திருக்கின்ற உனக்குப் பிரதியுபகாரம் யாது செய்வேனென தேவியானவள் ஞானவேந்தன் வரலாறு சொன்ன பேயை முத்தமிட்டுத் தடவினள் எனல்.*

423 எனக்கினிய சொருபானந் தனையெங் கோனை-
யேத்திபவன் புகழினையே யியம்பா நின்ற,
வுனக்கினியென் செய்வனென விறைவி யன்போ-
டுச்சியைமோந் திடுந்தழுவு முவகை யுற்றே.

[இ-ள்] எனக்கு இனிய — எனக்கு மிகப்பிரியமான
சொருபானந்தனை — சொருபானந்த ரென்னுந்திரு நாமமுடைய
எம் கோனை ஏத்தி — எமது தலைவனைப் போற்றி
அவன் புகழினையே — அவரது புகழ்களையே
இயம்பாநின்ற உனக்கு - புகழ்ந்து கொண்டிருக்கின்றஉனக்கு
இனி என் செய்வன் - நானினிமேல் கைமாறுயாது செய்வன்
என இறைவி அன்போடு-என்றுதேவியானவள் தயையோடும்
உவகை உற்று உச்சி மோந்து தழுவும் — சந்தோஷமடைந்தவளாய் சிரசில் முத்தமிட்டுத் தடவினள், 17

[அ-கை] குற்றமற்ற சுபாவமாயும் சுயஞ் சித்தாயும் உள்ள குருநாதன் பெருமையை, சகுணமாகவே அல்லது நிர்க்குணமாகவே, மண்ணுலகத்தில் மனமுருக எடுத்து உரைப்பதுவே, கடமையாமென்று தேவியருளினளெனல்.

424 உடையசோ தியிலொர்மா சறவின நிலனிலோ-
ருருவமா யருவமா சொருபன ருடையசீர்,
இடையரு துருகியோ திடுதலே யுரியையா-
மிதனைநீ பெறுகென விறைவிதா னருளியே.

(இ-ள்) உடைய சோதியில் ஓர் மாசு அறவினம் — சுபாவமாயிருக்கின்ற சுயம்பிரகாச சொருபத்தில், ஒருதோடமும் இன்றியவனன
சொருபனர் உடைய சீர் உருவமா அருவமா நிலனில் — சொருபானந்த சுவாமிகளுடைய பெருமையை எடுத்து உருவத்தினலாவது ஒப்பற்ற அருவத்தினலாவது
இடை அருது உருகி — எப்பொழுதும் மனமுருக
ஓதிடுதலே உரியை ஆம் - புகழ்ந்து உரைப்பதே கடமையாகும்
இதனை நீ பெறுகு — இப்பணியையே மிகவும் செய்வாய்
என இறைவி அருளி — என்று தேவி திருவருள் புரிந்தாள். 18

# 26-களங் காட்டல்.

*(அ-கை) காளிதேவியானவள் கருணையோடு பார்த்து நம் தலைவனது செயல் இவ்விதமென்று அருள் புரிந்த போது, பேய்த் தன்மையாவும் நீங்கி யோகினிகளாய் யாவரும் போற்ற போர்க்களம் பார்த்தனர் எனல்.*

425 இலகுநா யகிதனா ரருளதாம் விழியினு-
 லிறைவனார் செயலிதா மெனவினே யருளவே,
அலகைபோ யடையயோ கினிகளா யருளினு-
 ரடிதொழா வமர்செய்மா களமெலா மளவியே.

| | |
|---|---|
| [இ-ள்] இலகு நாயகி தன் ஆர் அருளாம் விழியினால் | விளங்காநின்ற தேவியானவள் தன்னிடத்து உண்டாம் கிருபா திருஷ்டியால் நோக்கி |
| இறைவனார் செயல் இது ஆம் என | இறைவனான சற்குரு நாதன் செயலானது இத்தகையதாமென்னவும். |
| இனே அருள அலகை போய் அடைய யோகினிகள் ஆய் அருளினார் | இவ்விதம் திருவருள் புரிந்தவுடன் பேய்த்தன்மை நீங்கி எல்லாரும் யோகினிகளாக மாற்றியருளினார். |
| அடிதொழா அமர் செய் மா களம் எலாம் அளவியே | யாவரும் போற்ற, போர் புரிந்த பெரிய யுத்த பூமி யாவும் சுற்றிப் பார்த்தனர். |

*[அ-கை] அஞ்ஞானமும் அதனால் வந்த மயக்கமும் போனவுடன், வியாதி நீங்காத சுற்றம போன்ற துக்க சுகங்களான துவந்துவங்கள் நீங்கியது. பிணம் போனவுடன் சோகமற்றவர் போலெனல்.*

426 ஓராத மயலார்விட் டொழிந்த போதே-
 யுடனாகும் பிணிதன்னை யொழியாச் சுற்றம்,
பேராத துவந்துவங்கள் போதல் துக்கம்-
 பிணம்போகப் போமாபோற் காண்மின் காண்மின்.

| | |
|---|---|
| (இ-ள்) ஓராத மயலார் விட்டு ஒழிந்த போதே | அறியாமையால் வந்த மயக்கம் முதலானவைகள் விடுபட்ட பொழுதே |
| உடன் ஆகும் பிணிதன்னை | — தொடர்ந்து வந்த வியாதியை |
| ஒழியா சுற்றம் | — விடாத பந்துக்களான |

| | |
|---|---|
| பேராத துவந்துவங் கள் போதல் | நீங்காத பிறப்பிறப்பு, சுக துக்கம், பசி தாகம், ஆகிய ரெட்டை தருமங்கள் நீங்குதல் |
| பிணம் போக துக்கம் போமா போல் காண்மின் காண்மின் | பிரேதம் வீடு நீங்கிச்செல்லவும் துக் கம்மறப்பது (நீராடியுணவு உண்பார் போல்அறியுங்கள் அறியுங்கள். 2 |

(அ-கை) *பிறப்பிறப்பாதி துவந்துவங்களோடு மனம் அழிந்தவுடன் பஞ்சேந்திரிய விஷயங்களழிந்ததாம். பாம்பின் விஷத்தோடு கூடிய தலை யைந்தின் அடிக் கழுத்தை அரியும் போது பாம்பானது அழிந்தது போல எல்லாம் அழிந்ததுஅறியுங்கள்.*

**427** **தொத்தறவே மனந்துஞ்சப் புலன்க ளைந்துந்-**
**துஞ்சியவா நஞ்சுமிழ்வா யஞ்சுஞ் சேரக்,**
**கத்தறவே யடிக்கழுத்தை யரிய மாய்ந்த-**
**கறையனற்கட் செவியொத்தல் காண்மின் காண்மின்.**

| | |
|---|---|
| [இ-ள்] தொத்து அறவே மனம் துஞ்ச | — துவந்துவங்களுடன் மனம் நாசமுற |
| புலன்கள் ஐந்தும் துஞ்சியவா | - பஞ்சேந்திரிய விஷயங்கள் நாசமுற்றதாம் |
| நஞ்சு உமிழ்வாய் அஞ்சும் | — விடங் கக்கும் வாய்களான ஐந்தையும் |
| சேரகத்து அறவே | — சேர்த்துச் சந்து இல்லாமல் |
| அடிக் கழுத்தை அரிய | — அடிச்சிரத்தை அரிந்தவுடன் |
| மாய்ந்த | — அழிந்த |
| கறை அனல் | — விஷாக்கினியுள்ளதும் |
| கண் செவி ஒத்தல் காண்மின் காண்மின் | கண்ணைக்காதாக்கொண்டதுமானச ர்ப்பம்போல் அழிந்ததுஅறியுங்கள் 3 |

(அ-கை) *இருண்மய மாயை யழிந்த போது, நாம ரூப மான உலகமழிந்தது. அக்கினியால் வேர் எரிந்தவுடன் கிளைகளோடு மரமெரிந்தவாறு அழிந்ததெனல்.*

**428** **மைப்படியு நறுங்குஞ்ச மாயை மாய-**
**மாய்ந்தபடி வையமெரி மருவ வேரிற்,**
**கப்புடனுங் கிளையுடனும் மரநே ராகக்-**
**கரிசறப்பட் டமையொத்தல் காண்மின் காண்மின்.**

[இ-ள்] மைப்படியும் நறும் குஞ்சமாயமாய } இருண்மயமான மாயை வாசனைக் கொத்தோடு நாசமாகவும்.
வையம் மாய்ந்த படி — உலகெல்லாம் அழிந்து போன தன்மை
வேரில் எரி மருவ — வேரில் அக்கினிபட்டெரிந்தவுடன்
கப்புஉடனும் கிளைஉடனும்— கவர்கொம்போடு தளிரோடும்
மரம்நேர் ஆங் கரிசு அறபட்டமை ஒத்தல் காண்மின் காண்மின் } மரமானதுசெவ்வையாய் குறைவின்றிஅழிந்து போனதை சமானமென்பதை அறியுங்கள் அறியுங்கள். 4

(அ-கை) *நோய் நீங்காத தேகாபிமானியான வஞ்ஞனும் மாயையும் அழிந்தால், உலகமேயழியும் என்ற உலக வார்த்தையுண்மையாக, கையில் மணி போலக் காட்டுந்தன்மைஅறியுங்களெனல்.*

429 அவிழாத பிணியாக்கை யுடைய வஞ்ஞ-
னழிந்தபடி தான்சாவ வுலகமெல்லாங்,
கவிழாதோ வென்னுமுரை யார்க்கு மேற்கக்-
கரமணிபோற் காட்டியவா காண்மின் காண்மின்.

(இ-ள்) அவிழாத பிணி ஆக்கை — விட்டு நீங்காத நோயுற்ற தேகத்தை
உடைய அஞ்ஞன் — உடையவனுன வஞ்ஞன்
அழிந்தபடி தான் சாவ — நாசமான பிரகாரமே மாயையுமழிந்தபோது
உலகம்எல்லாம்கவிழாதோ என்னும் உரை } நாமரூபமான உலகனைத்தும் அழிந்து போகாதா என்ற உலக வார்த்தை.
யார்க்கும் ஏற்க கர மணி போல் காட்டிய வா } உலக வழக்காக வுள்ளங்கை ரத்னம் போன்று காண்பித்த தன்மையை.
காண்மின் காண்மின் — கண்டறியுங்கள் கண்டறியுங்கள் 5

[அ-கை] *பெண்ணாசையில்லாதவர்களுக்கு விஷய சுகங்களும் நீங்கி பேரின்பத்தைப் பெற்றிருப்பார்களெனல்.*

430 நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த-
நெஞ்சொழிந்தா ரைம்புலன்சே ரின்ப நேராக்,
கைவிட்டா ரொழியாவா னந்த போகக்-
காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின்.

[இ-ள்] நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த } தைலந் தோய்ந்த கரிய கூந்தலுடைய பெண்களிடத்தில்.
நெஞ்சு ஒழிந்தார் — ஆசையற்றவர்களாய்
ஐம்புலன் சேர் இன்பம் நேரா கைவிட்டார் } பஞ்சேந்திரியங்களாலுண்டாகும் சுகமில்லாது விட்டவர்கள்.
ஒழியா ஆனந்த போக — விட்டுநீங்காதமோட்சானந்தத்தில்
காமுகர் ஆய் — விருப்பமுள்ளவர்களாய்
முடிந்தபடி காண்மின் காண்மின் } அடைந்திருப்பதை கண்டறியுங்கள் கண்டறியுங்கள். 6

*[அ-கை] ஒப்பற்ற மோட்சானந்தத்தில் மூழ்கிச் சுக-மற்ற உலகோர் விடயசுகங்களில் ஆசையற்றிருத்தல் காண்பீரெனல்.*

431 இணைப்பரிய பேரின்பந் தன்னின் மூழ்கி-
இன்புறப்பட் டெவ்விடத்து மெக்கா லத்துங்,
கணப்பொழுது மின்பமிலா வுடம்ப ரின்பங்-
கைவிடனீத் தமைகாட்டல் காண்மின் காண்மின்.

(இ-ள்) இணைப்பு அரிய பேர் இன்பந் தன்னில் மூழ்கி } சமானமற்ற பேரானந்தத்தில் அமிழ்ந்து
இன்பு உறப்பட்டு — ஆனந்தாநுபவமுற்று
எவ்விடத்தும் — சர்லோகத்திலும்
எக்காலத்தும் — சர்வகாலங்களிலும்
கணப்பொழுதும் — க்ஷண நேரங் கூட
இன்பம் இலா உடம்பர் — நல்லசுகமற்ற வஞ்ஞர்களது
இன்பம் கை விடல் — விஷய சுகங்களில் ஆசையற்றதும்
நீத்தமை காட்டல் — துறவடைந்தமையும் அறிவிப்பதாகும்
காண்மின் காண்மின் — கண்டறியுங்கள் கண்டறியுங்கள். 7

(அ-கை) *பகைவரை பகைசெய்யாமல் அவர்களுக்கு நன்மை செய்வதும் அறிஞரைத் தொடரும் பிறப்பற ஞான வேந்தன் கோபித்தலை அறியுங்களெனல்.*

**432 செற்றவர்க ளம்முடனுஞ் செறுதற் கென்றுஞ்-**
**சிந்தைசெயுந் திறன்மறந்து சிறப்பே செய்யக்,**
**கற்றவர்தம் முடனான பிறப்பை யெல்லாங்-**
**கரிசறுத்த பெரியசினங் காண்மின் காண்மின்.**

[இ-ள்] செற்றவர்கள் தம்உடனும் செறுதற்கு — பகைவர்களாயினும் அவர்களோடும் பகைப்பதற்கு,
என்றும் சிந்தை செய்யும் திறன் மறந்து — எப்போதும் நினைக்கின்ற தன்மை இல்லாதவராய்
சிறப்பே செய்யும் — நன்மையே செய்வதையும்
கற்றவர் தம் உடன்ஆன — அறிஞர்களை தொடர்வதான
பிறப்பை எல்லாம் — பிறவிகளனைத்தையும்
கரிசு அறுத்த — குறைவின்றி நாசமாக்கிய
பெரிய சினம் — ஞானவேந்தனது பெருங்கோபத்தை
காண்மின் காண்மின் — கண்டறியுங்கள் கண்டறியுங்கள். 8

(அ-கை) *நிந்திக்கத்தக்க உலக விஷயங்களை விட்டிருப்பதும் மகாப்பிரளயத்திலும் மரணமற்றிருப்பதும் அறியுங்களெனல்.*

**433 பழிப்பாகி யொருகாலு மிதுகொண்டு கொளவுற்ற-**
**பயனற்ற பொருள்விட்டெலா,**
**மழித்தாலு மழியாத பொருள்பேணி யிவருற்ற-**
**வாராமை காண்மின்களோ.**

(இ-ள்) பழிப்பு ஆகி ஒரு காலும் — பழிக்கத் தக்கதாய் ஓர்போதும்
இது கொண்டு கொளவுற்ற — சுட்டறிவால் பற்றுகின்ற
பயன்அற்ற பொருள் விட்டு — சுகமற்ற உலக விஷயங்களை விட்டிருப்பதும்
எலாம் அழித்தாலும் அழியாத பொருள் பேணி — சர்வ சம்மாரமானாலும் நாசமற்ற பரவஸ்துவை யடைந்து

| | |
|---|---|
| இவர் உற்றவாராமை காண்மின்களோ | இவரடைந்த திரும்புதலில்லாததை யுங் கண்டறியுங்கள். |

(அ-கை) அஞ்ஞான காலத்தில் தேகமேதானென்றி ருந்தவர்கள் ஞானோபதேசத்தால் உண்மை வடிவம் உணர்ந்து தானல்லாதவற்றை நீக்கியிருத்தல்அறி யுங்களெனல்.

434 ஓராக மேபண்டு வடிவென்றி ருந்தார்க-
ளுணர்வுற்று மொழிவுற்றதோ,
நேராக வுந்தங்கள் வடிவான திவர்நேதி-
நேதித்தல் காண்மின்களோ.

(இ-ள்) உணர்வு அற்று — அறியாமையால் ஒரு தேகமே ஓர் ஆகமே

| | |
|---|---|
| பண்டு வடிவு என்று இருந்தார்கள் | பூர்வம் நமது சொருபம் என்று மதித்திருந்தார்கள் |
| மொழிவுற்றதோ | — ஞானோபதேசத்தின் பின்னரே |
| நேர் ஆகவும் தங்கள் வடிவு ஆனது | அபரோட்சமாகவும் தங்களுடைய சொருபம் சச்சிதானந்தமானதும் |
| இவர் நேதி நேதித்தல் காண்மின்களோ | இவர்கள் மாயை அதன் கார்யங்களை இதல்ல இதல்லவென நீக்கியதை அறியுங்கள். |

10

# 27-கூழ் அடுவார்.

(அ-கை) அஞ்ஞன் முதலியோருடன் செய்த போர் வருத்தம் உவமையற்றது. ஆயினும், பரமார்த்த தெரி சனத்திற்குச் செய்ததாம். அதுதீர உணவு செய்வோ ரை அழையுமெனல்.

435 இந்தக்க ளம்பட்ட பாட்டுக்கு-
நேரொப்பி டத்தேடி டாதீசனுர்,
சந்திக்க விதுபட்ட தொப்பப்பெ-
ருங்கூழ்ச மைப்பாரை யழைமின்களோ.

(இ-ள்) இந்த களம் — இப் போர்க் களத்தில்
பட்ட பாட்டுக்கு — உண்டான வருத்தத்திற்கு
நேர் ஒப்பிடதேடிடாது — தடிந்த உபமானம் பார்த்துரைக்கமுடியாது

ஈசனுர் சந்திக்க — பரமேஸ்வரனை தெரிசிப்பதற்காக
இது பட்டது — இப் போர்க்களம் நடந்தது
ஒப்பபெரும்கூழ் - அவ்வருத்தத்திற்குத்தகுந்தஉயர்ந்தஉணவு
சமைப்பாரை — செய்கின்றவர்களை
அழைமின்களோ — அழைத்து வாருங்கள். 1

*[அ-கை] சம தமாதி சாதனங்களுடைய அதிகாரிகள் குரு கிருபையால் வந்த அநுபவ ஞான முடையவர்கள் வாசனுட்சய மனோநாசத்தால் சீவன் முத்திச் சுகமாகிய கஞ்சி காட்சுவதற்கு அழையுங்களெனல்.*

**436 சாந்தீ யுளவருந் தாந்தீ வந்தடி-**
**தந்தார் திருவரு டன்னோடே,**
**மாந்தீ நல்லறி மாலாய் கூழட-**
**வாரீர் கூழட வாரீரே.**

| | |
|---|---|
| சாந்தீ உளவரும் தாந்தீ வந்து | மன அடக்கம் உண்டாய் இந்திரிய அடக்கம் உண்டாய் |
| அடி தந்தார் திருவருள் தன்னோடே | திருவடி தீட்சை செய்த குரு கிருபையோடு |
| மாந்தீ நல்லறி மால்ஆய் | அநுபவ ஞானமும் பெருமையுமுள்ளவர்களே |
| கூழ்அட வாரீர் கூழ்அட வாரீர் | உணவு சமைக்கும் பொருட்டு வாருங்கள் வாருங்கள். 2 |

*[அ-கை] சற்சங்கம் அடைந்து துற்சங்கம் விடுத்து கருணை முதலிய குணங்களுடையவர்களே கூழ்சமைக்க அழையுமெனல்.*

**437 மேலா ரொடுமிகு முறவி தீவினை-**
**மிகுவா ரொடுவிடு துறவீயம்,**
**மாலா ரொடுவரு கருணாய் கூழட-**
**வாரீர் கூழட வாரீரே.**

| | |
|---|---|
| [இ-ள்] மேலார் ஒடு மிகும் உறவி | ஈசுராதிகளிடத்தில் நட்புள்ளவாய் |
| தீவினை மிகுவார் ஒடுவிடு துறவி | பஞ்சமா பாதகங்களை மிகுந்து செய்பவர்களை விட்டு நீங்கி |
| அம்மாலார் ஒடு வரு கருணாய் | அம் மயக்க முற்ற பாவிகளிடத்தில் உண்டாகின்றகிருபையுள்ளவர்களே |

கூழ் அட வாரீர் } உணவு சமைக்க வருவீர் உணவு
கூழ் அட வாரீர் } சமைக்க வருவீர். 3

[அ-கை] பொறுமையும் புகழும் பெற்று, அதனுல் அருளும், அகண்ட பூரண செல்வமும் பெற்றவர்களே உணவு சமைக்க வாரீரெனல்.

437 பொறையே மிகவரு நிறைவீ புகழ்புனை-
பொன்னீ யருளினை யுன்னீயக்
குறையா நிறைவுறு திருவீ கூழட-
வாரீர் கூழட வாரீரே.

(இ-ள்) மிகவரும் } மிகுந்துவாரா நின்ற பொறுமை
பொறையே நிறைவி } நிறைந்தவர்களே.
புகழ்புனை பொன்னி-பெரும் புகழை அணியாஅணிந்த அழகுடையவர்களே.
அருளினை உன்னி — திருவருளை மதித்து
அக் குறையா நிறை } அந்தக் குறைவற்ற பரிபூரணமான
உறு திருவி } செல்வமுடையவர்களே.
கூழ் அட வாரீர் } கூழ் சமைக்க வருவீர்களாக.
கூழ் அட வாரீர் } கூழ் சமைக்க வருவீர்களாக. 4

[அ-கை] ஆதியந்த மற்ற சொருபத்தை மகா வாக்கியத்தால் உணர்ந்திருப்பவர்களே! ? கூழ் சமைக்க வாருங்களெனல்.

438 முடிவே திதுவரு முதலே தெனவொரு-
மொழியா லளவிட முடியாத
வடிவே யடைவதோர் மதியே கூழட-
வாரீர் கூழட வாரீரே.

(இ-ள்) இது வரும் முடிவு ஏது — இதற்கு உண்டாம் அந்தமில்லை
முதல் ஏது } ஆதியும் இல்லை என்பதாக
என ஒரு மொழியால் } ஒப்பற்ற மகா வாக்கியத்தால்
அளவிட முடியாத —எல்லை கூற முடியாமலிருக்கின்ற
வடிவே அடைவது —சொருபத்தையே அடைவதான
ஓர் மதியே —ஒப்பற்ற ஞானமுடையவர்களே
கூழ் அட வாரீர் —கூழ் சமைக்க வருவீர்களாக
கூழ் அட வாரீர் —கூழ் சமைக்க வருவீர்களாக 5

அ-கை] ஆபரணம் அணிந்த அழகும், பாடும் பத்தியும் சித்தியும், முக்குணம் கடந்த வரும் மெத்தென்ற வசனமும் கூடியவர்களே! கூழ் சமைக்க வாருமெனல்

439 பணியே சூடிய வணியே பாடிய-
பத்தீ கூடிய சித்தீநிர்க்
குணியே கோமள மொழியே கூழட
வாரீர் கூழட வாரீரே.

(இ-ள்) பணியே சூடிய அணியே—ஆபரணங்களை அணிந்த அழகுடையவர்களே

பாடிய பத்தீ —பாடியாடுகின்ற பத்தியுடையவர்களே
கூடிய சித்தீ —சித்தியடைந்திருப்பவர்களே
நிர்க்குணியே —குணாதீதர்களே
கோமள மொழியே —மிருதுவான உரையாடுபவர்களே
கூழ் அட வாரீர் —கூழ் சமைக்க வாருங்கள்
கூழ் அட வாரீர் —கூழ் சமைக்க வாருங்கள் 6

[அ-கை] தன்னைப்போல் பிறரிடத்தும் கருணையும், பிறப்பு அழியா ஈசுவரனிடத்தில் பத்தியும் உடையவர்களே! கூழ் சமைக்க வாருமெனல்.

440 தன்போ லெவரொடு மன்பே விளைவதொர்-
தாயே பவமெனும் மாயாவிவ்
வன்பே கெடவரு மன்பே கூழட-
வாரீர் கூழட வாரீரே.

(இ-ள்) தன்போல் எவர் ஒடும் அன்பே விளைவது ஓர் தாயே — தன்னிடத்தில் பிரியம் எப்படியோ அப்படியே எல்லாரிடத்திலும் பிரியமே உண்டாக்கக் கூடிய தாய்மார்களே

பவம் எனும் மாயா இவ் வன்பே கெட வரும் அன்பே — பிறப்பென்கின்ற கெடாத இந்த கொடுமை அழியும் படியாக (இறைவனிடத்தில்) வாரா நின்ற பத்தி உடையவர்களே

கூழ் அட வாரீர் —கூழ் சமைக்க வாருங்கள்
கூழ் அட வாரீர் —கூழ் சமைக்க வாருங்கள் 7

[அ-கை] உலகாகிய உரல், அஞ்ஞானது விலா எலும்பாகிய உலக்கை, அவரது பற்களாகிய அரிசி, மகான்களது முடியாகிய அடுப்பும்,

தேகமாகிய கடமும்,

*அஞ்ஞானமாகிய விரகால்எரித்து, இருவினைகளை யழித்து, சூழ் சமைக்க வாருமென்று அழைத்தல்.*

441 ஒருமை யெனமுன் வகுத்த சித்ர மாகிய-
உலக வுரலை யமைத்து லக்கை யாகவிவ்
வுலோகர் பழுவை யொடித்தொ டித்து நீளெயி-
றுதிர்செய் தரிசி புடைத்தி டித்து மேலவர்,
பெருமை முடியை யடுப்பு வைத்து மேலுறு-
பிணிசெய் உடல்க டத்து லைச்செய் தாருயிர்,
பெரிய விருளை நெரித்தெ ரிப்ப தாய்வினைப்-
பிதிர்செய் தமிர்த மினிச்ச மைக்க வாருமே.

(இ-ள்) ஒருமை என முன்வகுத்த } ஒருமையென்று முற்கூறிய
சித்ரம் ஆகிய உலக உரலை } அதிசயமான வுலகமெனும் உரலை
அமைத்து —அமையச் செய்து
இவ்வுலோகர் பழுவை—இவ்வுலகவஞ்ஞரதுவிலாவெலும்பை
ஒடித்து ஒடித்து உலக்கை ஆக } முறித்து முறித்து குத்தும் உலக்கையாக்கி
நீள் எயிறு உதிர்செய்து—நீண்ட பற்களை உதிரச் செய்து
அரிசி புடைத்து இடித்து—அரிசியாகப் புடைத்து மாவாக்கி
மேலவர் பெருமை முடியை } மகான்களது சிறந்த முடியை
அடுப்பு வைத்து —அடுப்பாக வமைத்து
மேல் உறுபிணி செய் உடல் } மேலிருக்கும் நோயுறுந் தேகமாகிய
கடத்து ஆர் உயிர் உலை செய்து } கடத்தில் உயிராகிய உலைநீர் வைத்து
பெரிய இருளை நெரித்து—மகாந்த காரத்தை நொறுக்கி
எரிப்பதாய் —எரியவைப்பதாய்
வினைபிதிர் செய்து —இருவினைகளைத் தூளாக்கி
அமிர்தம் இனி சமைக்க—அமிர்தத்தையினி மேலாக்க
வாரும் —வாருங்கள் 8

*[அ-கை] உலகமனைத்திலும் உயிரானது உடலெடுத்துத் துன்புறுமல் அஞ்ஞானத்தை யழித்தவனும், வேதங்களின் சிரோரத்னமான சற்குருநாதன், எனது முத்திஸ்தானமாம். எனது ஆன்மாவாகிய சற்குருநாதனது திருவடிகளை வணங்கி, குத்த வாருங்கனெனல்.*

442 பரவை யுலகம னைத்து முற்றெ மாருயிர்-
படர்செ யுடல மெடுத்த ழித்து நோயொடு-
பகலொ டிரவு பசித்தி ளைத்தி டாவகை-
பவமெ னிருளை யறுத்து தித்த சோதிசெய்-
அரவ மறைகள் சிரத்து நிர்த்த மாடிய-
வரிய சொருப னெனக்கு வைப்பெ னாருயி-
ரமல ரடியர் சிரத்து வைத்த மாமணி-
யடிகள் பரவி யுலக்கை குத்த வாருமே.

(இ-ள்) பரவை உலகம் அனைத்தும் } கடல்கள் சூழ்ந்த லோகங்களனைத்தும்
முற்றுஎம் ஆர் உயிர் —குறைவின்றி எமது சீவான் மாவை
படர் செய் உடலம் எடுத்து } துன்பப் படுத்தும் தேகத்தை யடைந்து
நோய் ஒடு பகல் ஒடு —வியாதியுடன் பகற் பொழுதொடு
இரவு பசித்து —இரவிலும் பசித்தவனாய்
இளைத்திடா வகை —மெலிவடையாத வண்ணம்
பவம் என் இருளை அறுத்து } பிறப்பிற் கேதுவான வஞ்ஞானத்தை யழிக்க
உதித்த சோதி செய் அரவ மறைகள் சிரத்து } உதயமான, அழகிய, சப்த வடிவமான வேத வேதாந்தங்களின் முடியில்
நிர்த்தம் ஆடிய அரிய சொருபன் } நடனம் புரிந்த அறிதற்கரிய சொரூபானந்த சுவாமிகள்
எனக்கு வைப்பு } யானடைந்திருக்கும் மோக்ஷஸ்தானமாகும்
என் ஆர் உயிர் அமலர் அடியார் சிரத்து வைத்த } எனதான் மாவாயிருக்கின்ற நின்மல சற்குருநாதரடியார்களது முடிமேல் வைக்கின்ற

மாமணி அடிகள் பரவு } சிறந்தழகிய திருவடிகளை வணங்கி வாழ்த்தி

உலக்கை குத்த வாரும் — உலக்கையெடுத்து குத்தும் படிக்கு வாருங்கள் 9

# 28- சும் முலக்கை.

*[அ-கை] அளவற்ற வேதங்களால் அறிய முடியாத சொருபானந்த சுவாமிகளை அடியார்களான நாங்களறிந்தோமெனல்.*

**443 அருவரையா யிரஞ்சிரங்கொண் டருமறைக ளறியாத**
**சொருபரையாங் கண்டனமே சும்மேலோ சும்முலக்காய்**

(இ-ள்) அருவரை ஆயிரம் } எழுதற்கரிய ஆயிரக் கணக்கான

சிரம் கொண்டு அருமறைகள் } முகங்களாயிருந்தும் அரிய வேதங்கள்

அறியாத சொருபரை — சுட்டியறிய முடியாத சொருபானந்த சுவாமிகளை

யாம் கண்டனம் — நாங்கள் தெரிசித்தோம்

அக்காய் சும்மேலோ சும் } அக்காய் சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. 1

*[அ-கை] பொய்த் தேகத்தையே தாமென்றலைந்த எங்களுக்கும், திருவடி தீட்சை செய்து உபதேசித்தனரெனல்.*

**444 மாயவடி வளவாகி மதியிலியா யுழல்வேற்குத்**
**தூயவடி சூட்டினர்காண் சும்மேலோ சும்முலக்காய்**

(இ-ள்) மாய அடி அளவு ஆகி } பொய்யாய் 6 அடி உயரம் 3 அடி சுற்றகலமுள்ள தேகமாய்

மதி இலியாய் உழல் வேற்கு } ஆத்ம ஞானமற்றவர்களாய் சுழன்று கொண்டிருக்கும் எமக்கு

தூய அடி சூட்டினர் காண } பரிசுத்தமான திருவடி தீட்சை செய்தனர்

அக்காய் சும்மேலோ சும் } அக்காய் சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. 2

*[அ-கை] பேதம் நீங்கி உய்ய சற்குருநாதன் அருளால் அருள் செய்தது மகா வாக்கிய மொன்றே-யெனல்.*

**445 பின்னமொழி வகைபுரிந்தெம் பெருங்கருணை பெருமானூர், சொன்னமொழி யொன்றேகாண் சும்மேலோ சும்முலக்காய்**

(இ-ள்) பின்னம் ஒழிவகை புரிந்து } பேதமழியும், பொருட்டாக
எம்பெரும் கருணை பெருமானூர் } எம்மிடத்து பெருங்கிருபை யுற்று எமது தலைவரானவர்
சொன்ன மொழி ஒன்றே காண் } உபதேசித்தது மகா வாக்கிய மொன்றே இதை யறியுங்கள்
அக்காய் சும்மேலோ சும் } அக்காய் சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. 3

*[அ-கை] சுட்டறியும் ஆபாசன் அதிஷ்டான கூடஸ் தனுயினன் எனல்.*

**446 நம்மாலே காண்கின்ற நாமும் போய் நாமாகிச், சும்மாவே யிருந்தனங்காண் சும்மேலோ சும்முலக்காய்**

(இ-ள்) நம்மாலே காண்கின்ற நாமும் போய் } ஞாதாவான நம்மால் காண்பதான (காட்சியும் காண் பொருளும்) காண்பானும் நீங்கி
நாம் ஆகி சும்மாவே இருந்தனம் காண் } நமது எதார்த்த சொருபமான பிரம்ம மாத்திரமாய் யாதொரு செயலுமின்றியிருக்கின்றே மென்றறியுங்கள்
அக்காய் சும்மேலோ சும் } அக்கச்சி சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. 4

*[அ-கை] ஆகாச முதலிய பிரபஞ்சங்கள் அனைத்தும் என்னிடத்திற்றேன்றுமெனல்.*

**447 வான்றுடங்கு முலகுதனின் மன்னுசரா சரங்களெலாம், தோன்றுமிடன் பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய்**

(இ-ள்) வான் துடங்கும் உலகுதனில் } ஆகாசம் முதலாக உண்டாயிருக்கும் லோகங்களில்
மன்னு சரா சரங்கள் எலாம் } நிலைபெற்ற அசைதலும் அசையாத தான உயிர்களனைத்தும்
தோன்றும் இடன் பிறிது உண்டோ } உண்டாகின்ற ஸ்தாபனம் நாமன்றி வேறில்லை (என்று சொல்லி)
அக்காய் சும்மேலோ சும் } அக்கச்சி சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. 5

[அ-கை] *ஒருவஸ்துவே சீவேசுர செகத்தாக விளங்கியும் தான் விளங்காமலிருக்குமெனல்.*

**448** **உலகாகி யுயிராகி யுணர்வாகி யொருபொருளே,**
**துலங்காமை கண்டாயே சும்மேலோ சும்முலக்காய்**

உலகு ஆகி உயிர் ஆகி —செகத்தாகவும் சீவர்களாகவும்
உணர்வு ஆகி —அறிவாகிய பரமாத்மா வாகவும்
ஒரு பொருளே துலங்காமை } ஏகமாகிய பிரம்ம வஸ்துவே முப்பொருளாயிருந்தும் அப்படி விளங்காமலிருப்பதை
கண்டாயே —கண்டறிந்தீர்களா
அக்காய் சும்மேலோ சும் } அக்கச்சி சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. 6

[அ-கை] *அபரோட்ச ஞானிகளான நமக்கு சாஸ்திர பாடத்தால் யாது பயன்?! குருநாதனை வாழ்த்தி வணங்குவதே கடமையாகுமெனல்.*

**449** **சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான்,**
**தோத்திரமே யமையுமது சும்மேலோ சும்முலக்காய்**

(இ-ள்) நமக்கு சாத்திரம் என் செய } தத்வமுணர்ந்த, நமக்கு சாத்திரங்களும் சமயங்களும் என்ன பிரயோசனம்
தர்க்க மயல் அறுத்த பிரான் தோத்திரமே அமையுமது } தர்க்கத்தாலுண்டான மயக்கத்தை நாசஞ்செய்த, நமது சற்குருநாதனை, முக் கரணங்களாலும் வழிபடவும், யாவும் கிடைப்பதாம்

| | | |
|---|---|---|
| அக்காய் சும்மேலோ சும் | அக்கச்சி சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. | 7 |

[அ கை] வாக்குள்ள மட்டும், சற்குருநாதனை வாழ்த்த வேண்டுமெனல்.

450 வல்லவகை பரனருளே வாயார வாழ்த்தாதே,
சொல்லுவது பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய்.

| | | |
|---|---|---|
| (இ-ள்) வல்லவகை பரன் அருளே வாய் ஆர | தனக்கு முடிந்த மட்டும் சற்குரு நாதனது பெருங்கருணைச் செயல்களை வாய் குளிர | |
| வாழ்த்தாதே சொல் லுவது பிறிது உண்டோ | போற்றி செய்யாமல் பேசத்தக்கது வேறொன்றிருக்கின்றதா (என்று சொல்லி) | |
| அக்காய் சும்மேலோ சும் | அக்கச்சி சும்மேலோ சும்மென்று குத்துவோமாக. | 8 |

[அ-கை] சப்தாதி சர்வ விஷயங்களும் பிரம்ம சொருபமானதெனல்.

451 சத்தமா திகளுமெலாந் தற்சொருப மானபரி,
சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய்

| | | |
|---|---|---|
| (இ-ள்) சத்தம் ஆதிகளும் எலாம் | சத்த பரிச ரூப ரச கந்தமென்னும் விஷய சுகங்களெலாம் | |
| தற்சொருபம் ஆன பரிசுத்தம் ஆய் விட்டது காண் | பிரம்மானந்த சொருபமாய் அத்தியந்தம் சுத்தமாயிருக்கின்ற தென்றறியுங்கள் . | |
| அக்காய் சும்மேலோ சும் | அக்கச்சி சும்மேலோ சும்மென்று சொல்லிக் குத்துவோமாக. | 9 |

## 29- சூழ் சமைப்பு.

[அ-கை] அஞ்ஞர்களது கர்மங்களையும், பற்களையும் இடித்து மாவாக்கி விட்டால்! உலைப்பானையில் போடலாமெனல்.

452 மிடையிரு வினைகள் பற்கள்-
மேவரு மறியார் பற்கள்,

அடையவு மிடித்தீ ராகி-
லடங்கவு முலையுட் பெய்யீர்.

(இ-ள்) மிடை இரு வினைகள் பற்கள் — கூட்டமாகிய நல்வினை தீவினைகளாகிய பற்களையும்
மேவரும் அறியார் பற்கள் — அறிஞர்கள் அணுகுதற்கரிய அஞ்ஞர்களது பற்களையும்
அடையவும் இடித்தீர் ஆகில் அடங்கவும் — எல்லாவற்றையும் இடித்து மாவாக்கினீர்களானூர் அவற்றையெல்லாம்
உலை உள் பெய்யீர் — உலையிட்ட பானையில் போடுங்கள். 1

[அ-கை] *வினைகளெல்லாம் வெந்து மனமருகி உண்மையான பத்தியால் சித்த சுத்தியும், அதனால் அத்வைதானுபவமும் வேண்டுமெனல்.*

**453** இழைக்கும்வல் வினையெ ரித்திங்-
கெலும்பெலா முருக்கி யுள்ளங்,
குழைக்குமெய்ப் பத்தி வந்து-
குறைவறக் குழைக்கச் சொல்லீர்.

(இ-ள்) இழைக்கும் வல்வினை இங்கு எரித்து — செய்வதாலுண்டாகும் வலிய கர்மங்களை இவ்விடத்து வேகும்படி செய்து
எலும்பு எலாம் உருக்கி — எலும்பனைத்தும் உருகும்படியாக
உள்ளம் குழைக்கும் — மனமானது இளகும்படியான
மெய்ப்பத்தி வந்து — உண்மையான பத்தியானது உண்டாகி
குறைவு அற குழைக்கச் சொல்லீர் — பாக்கியில்லாமல் ஒன்ருகக் கலக்கும்படிச் சொல்லுங்கள். 2

[அ-கை] *வாக்கு மௌனமாய் தேகம் நடுங்காமல் சீவன் முத்திச் சுக மனுபவிக்க மனத்தை சாந்தமாக வைத்துக் கொள்ளுங்களெனல்.*

454 செப்பாதே பலவு நின்று-
சிலுப்பற விருத்தி யின்பந்,
தப்பாதே பதத்தைப் பார்க்கச்-
சாந்தியை யிருத்திக் கொள்ளீர்.

(இ-ள்) பலவும் நின்று செப்பாதே } பற்பலவாயிருந்து பேசிக்கொண்டிருக்காமல்

சிலுப்பு அற விருத்தி இன்பம் தப்பாதே } நடுக்கமின்றி அவஸ்தானரூப நிருவிகற்பானந்தத்தை தடையில்லாமல்

பதத்தைப் பார்க்க — அபரோட்சமாய் அனுபவிப்பதற்கு

சாந்தியை இருத்திக் கொள்ளீர் } மனவமைதியை அடைந்திருப்பீர்களாக. 3

*[அ-கை] கனிந்த கனிரசம் பால் சர்க்கரை சேர்ந்தது போன்று உண்டாகுமானந்தமே கரைந்த மனங்களில் வைக்கவேண்டுமெனல்.*

455 கனித னக்குநிகர் நெக்கு நெஞ்சுகள்-
கரைந்து கன்னலொடு பாலுமொத்,
தினிதி னிப்படிச மைத்த போனகமெ-
டுத்து மெத்தெனவி ருத்துமே.

(இ-ள்) கனி தனக்கு நிகர் } பழத்திற்குச் சமானமாய்

நெக்கு நெஞ்சுகள் கரைந்து } கனியத் தக்க மனங்களெல்லாம் இளகி

கன்னல் ஒடு பாலும் ஒத்து } கரும்பு ரசத்தோடு பாலையும் சேர்த்து

இனிதில் இப்படி சமைத்த } இனிமையா யிந்தப் பிரகாரம் பக்குவஞ் செய்த

போனகம் எடுத்து —உணவுப் பொருளை பாகத்தோடெடுத்து

மெத்தென இருத்தும்—மிருதுவாக வைப்பீர்களாக. 4

## 30- கூழ் வார்ப்பு.

*[அ-கை] உள்ளக் குளிர்ச்சி தரும் சற்குருநாதன் அடியார்களை ஆனந்தமடைய மனமாசு மாற்றி வைப்பீர் எனல்.*

456 தண்மை யாரும்வகை மீளு மாளுடைய-
தம்பி ரானரிய தாள்கடாம்,

உண்மை யாலுரிய வன்ப ரின்புறுமு-
ளக்க லங்களைவி ளக்கியே.

(இ·ள்) தண்மை ஆரும்வகை மீளும் } மனதிலுள்ள குளிர்மையை மாற்றுந் தன்மையை மாற்றுகின்ற படியாய்
ஆள்உடைய தம்பிரான் } எனையாட் கொண்ட சற்குரு நாதனுடைய
அரிய தாள்கள் —கிடைத்தற்கரிய திருவடிகளை
தாம் உண்மையால் —தாங்கள் எதார்த்தமாகவும்
உரிய அன்பர் —கடமையாகவும் உள்ள அடியவர்கள்
இன்பு உறும் —ஆனந்தமடைவதற்கு
உளக் கலங்களை விளக்கி } மனமாகிய உண்கலங்களைத் துலக்கி வைத்து. 1

இது குளகம்

[அ-கை] *சர்வாத்ம வடிவமாயிருக்தும் காளி தேவியைக் கூழுண்ணும்படி பிரார்த்தித்தல்.*

457 கடங்க ளோடுமுள மான மெய்ப்பரி-
கலங்க ளோடுமுள வாவிதான்,
அடங்க நீயமிர்து செய்க வென்னவரு-
ளையை தானமிர்து செய்யுமே.

(இ-ள்) கடங்கள் ஒடும் உளம் ஆன } தூல தேகத்தோடு கூடிய மனமாகிய
மெய்ப் பரிகலங் களோடு உள ஆவி தான் அடங்க } சத்யாதி சற்குணங்களோடுள்ள, உண்கலங்களுடனிருக்கின்ற, பிராணனது பசி அடங்கும்படி
அமிர்து நீ செய்க என்ன } நீங்கள் புசியுங்களென்று வேண்ட
அருள் ஐயைதான் அமிர்து செய்யும் } கிருபா சொருபியாய தேவியான வள் அமுதை புசித்தருளினள். 2

[அ·கை] *தேவியினருளால் கிடைத்த பிரசாதம் பேய்க ளாகிய நீங்களனைவரும் புசிக்கலாமெனல்.*

458 அணங்கு தன்றிருவு ளப்ர சாதமது-
வடைய வேநிறைய வயிலுவீர்,

உணங்கு கின்றவுட லான பேய்களையு-
முடைய நீரழையு முண்ணவே.

| | |
|---|---|
| (இ-ள்) அணங்குதன், திருவுள பிரசாதம் அது | தேவியினுடைய திருவுளப்படி உண்டான பிரசாதமாகும். |
| அடையவே நிறைய அயிலுவீர் | எல்லாவற்றையும் பூரணமாகவும், உண்பீர்களாக, |
| உணங்குகின்ற | — வாட்ட முற்றிருக்கின்ற, |
| உடல்ஆன பேய் களையும் உடைய நீர் அழையும் உண்ணவே | தேகத்தோடு கூடி, ஒன்றையொன்றுக, பேய் போன்று, மயக்கமுற்றிருக்கின்றவரான, நீங்கள் மற்றவர்களையும் அழையுங்கள் உணவுண்பதற்கு 3 |

[அ-கை] பிறப்பற்று வீடு விரும்பிவரும் முமுட்சுக்களாகிய பேய்களுக்கு பசியாற பரிமாறுங்களெனல்.

459 வெந்த வுடலம் விடும்பரிசு-
வீடு வினவி மிகப்பசித்து,
வந்த பேய்க்குப் பசிதீர-
வாரீர் மெத்த வாரீரே.

| | |
|---|---|
| (இ-ள்) வெந்த உடலம் விடும் பரிசு | முத்தாபாக்கினியால் வேகுந் தேகத்தை விட்டு நீங்கும் படிக்கு, |
| வீடு வினவி | — மோட்ச வீட்டை விசாரித்து, |
| மிகப் பசித்து | — மிகவும் மோட்சமாகிய பசியடைந்து |
| வந்த பேய்க்கு | — வருகின்ற முமுட்சுவிற்கு, |
| பசி தீர வாரீர் | — அப்பசீ தணியும் படியாக கூழ் வழங்குங்கள் |
| மெத்த வாரீர் | — வேண்டியதைப் பரிமாறுங்கள். 4 |

[அ-கை] காண்கின்ற தேக முதலிய உலகங்கள் அழிந்து போவதைக் கண்டு வைராக்ய முற்று அழியாத முத்தியை விரும்பிவரும் பேய்களுக்குக் கூழ் வழங்குமெனல்.

460 நசித்தே னிந்தக் கணத்துள்ளே-
நசியா வண்ண நல்குமிகப்-

பசித்தே னென்று பதைக்கின்ற-
பதைப்பைத் தணிக்க வாரீரே.

(இ-ள்) இந்தக் கணத் } இதே க்ஷண நேரத்திற்குள் அழிந்து
து உள்ளே நசித்தேன் } போவேன்.

நசியா வண்ணம் நல்கும்—அழியாதபடி அருள்புரியுங்கள்
மிகப் பசித்தேன் —மிகுந்த பசியுள்ளவனுனேன்
என்று பதைக்கின்ற —என்பதாகத் துடிக்கின்ற
பதைப்பை தணிக்க —துடிப்பை மாற்றுவதற்கு
வாரீர் —கூழ் வழங்குங்கள். 5

*[அ-கை] சமணர்களது மோட்சத்தைக் கூறல்.*

461 எட்டுக் கரும முட்டறச்செய்-
தெட்டுக் குணத்தோ டெழின் முத்தி,
வட்டத் திருக்கப் போமூத்தை-
வாய்ப்பேய் தனக்கும் வாரீரே.

(இ-ள்) எட்டு கருமம் —T எண்வித கர்மங்களின்,
முட்டு அற செய்து —தடையின்றி செய்து
எட்டு குணத்தோடு —X எண்வித குணங்களைப் பெற்று
எழில் முத்தி வட்டத்து — அழகிய மோட்சமாகிய
ஸ்தானத்தை
இருக்கப் போம் — அடையச் செல்கின்ற
ஊத்தைவாய் — அழுக்கு வாயுடைய
பேய்தனக்கும் வாரீர் — சமணப் பேய்க்கும் கூழளியுங்கள்

T ஞானவரணீயம், தரிஞவரணீயம், வேத நீயம், மோகநீயம்
ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம்.

X முடிவிலா வறிவு, முடிவிலாக்காட்சி, முடிவிலா வீரியம்
முடிவிலா வின்பம், நாமமின்மை கோத்திர மின்மை,
ஆயுளின்மை, அழிவிலா வியல்பு 6

*[அ-கை] பூர்வ மீமாஞ்சகரைக் கூறல்.*

462 ஒளிதங் கியமா மறையோதி-
யுள்ள பொருளை யுணராதே
பனிதஞ் சுமந்த கழுதையாம்-
பணவப் பேய்க்கும் வாரீரே.

(இ-ள்) ஒளி தங்கிய — ஞானத்தின் நிலைபெறுகிய
மாமறை ஓதி — சிறந்த வேதங்களைப் படித்து

உள்ள பொருளை — எதார்த்த வஸ்துவை
உணராதே — அறியாதவர்களாய்
பளிதம் சுமந்த கழுதை ஆம் } கருப்பூரத்தை சுமக்கின்ற கர்த்தபம் போன்றிருக்கின்ற
பணவப்பேய்க்கு } வேதியர்களாகிய பூர்வ மீமாஞ்சகரான பேய்களுக்குங் கூழ்
வாரீர் — வழங்குங்கள். 7

[அ-கை] *மாயாவாதியின் இலக்கணம் கூறல்.*

463 படித்து மறைகள் பொருள்படித்திப்-
பயனி னெட்டிப் பாராதே,
வடித்த கிளிபோல் வருமாயா-
வாதப் பேய்க்கும் வாரீரே.

(இ-ள்) மறைகள் படித்து } வேத வேதாந்தங்களைக் கற்றவர்களாயும்
பொருள் படித்து —அர்த்த மறிந்தவர்களாயிருந்தும்
பயனில் —அதன் பிரயோஜனத்தில்
எட்டிப் பாராதே —சிறிதும் அநுபவமில்லாமல்
வடித்த —மற்றவரை ரசிக்கச் செய்யும்
கிளிபோல் —கிளிப்பிள்ளையைப் போன்று
வரும்மாயாவாத பேய்க்கும் வாரீர் } வாராநின்ற மாயாவாதிகளாகிய பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள். 8

[அ-கை] *விஷிட்டாத்வைத சித்தாந்தத்தைக் கூறல்.*

464 வேதா கமங்கள் சொன்னபொருள்-
மெய்மை யறிவார் போலிருந்து,
பேதா பேதஞ் சாதிக்கும்-
பெரும்பேய் தனக்கும் வாரீரே.

(இ-ள்) வேத ஆகமங்கள் } வேத வேதாந்த ஆகம புராண இதிகாசங்களைத்தும்
சொன்ன பொருள் —எடுத்துக் கூறுகின்ற வஸ்துவின்
மெய்மை அறிவார் போல் இருந்து } உண்மையை தெரிந்தவர்கள் போன்றிருந்து கொண்டு
பேத அபேதம் சாதிக்கும் } விஷிட்டாத்வைத சித்தாந்தமாய் (சத்கியாதி பட்சத்தை) பேசிக் கொண்டிருக்கும்

| | |
|---|---|
| பெரும் பேய் தனக்கும் வாரீர் | பெரும் பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள். 9 |

[அ-கை] *சத்தமே பிரம்மமென்று கூறும் வாதிகளைக் கூறல்.*

**465 சுத்தப் பிரம்ம மது நிற்கக்-**
**தொள்ளை செவியி னுணவான,**
**சத்தப் பிரம்ம மென்றோதுஞ்-**
**சளப்பேய் தனக்கு வாரீரே.**

| | |
|---|---|
| (இ-ள்) சுத்த பிரம்மம் அது நிற்க | மாயை அதன் காரியங்களான சர்வத்திற்கும் உள்ள (அசுத்த மில்லாமல் அதற்கு வேறான) சுத்தப் பிரம்ம மிருக்கவும் |
| தொள்ளை செவியின் | —துளையோடு கூடிய காதிற்கு |
| உணவு ஆன | —விஷயமாயிருக்கின்ற |
| சத்த பிரம்மம் | —சத்தமே பிரம்ம சொருபம் |
| என்று ஓதும் | —என்பதாகக் கூறுகின்ற |
| சளப்பேய் தனக்கு | —பொய்ப் பேய்க்கும் |
| வாரீர் | —கூழ் வழங்குங்கள். 10 |

[அ-கை] *வெளியில் செய்யும் விக்ரக பூசையைக் கூறல்.*

**466 பணியப் படுவா ருள்ளிருக்கும்-**
**பரதே வதையைப் பாராதே,**
**மணியைத் துலக்கிக் கிணுகிணுனென-**
**வரும்பேய் தனக்கும் வாரீரே.**

| | |
|---|---|
| (இ-ள்) பணியப் படுவார் உள்ளிருக்கும் | மனோ வாக்குகாயங்களாய் வாழ்த்தி வணங்குபவர் இருதயத்திலங்கும் |
| பரதேவதையை | —மேலான தெய்வத்தை |
| பாராது | —ஆராய்ந்து அறிய மாட்டாமல் |
| மணியை துலக்கி | —பூசை மணியை விளக்கி |
| கிணு கிணு என | —கிண் கிண் ணென்று |
| வரும் பேய் தனக்கும் | —சத்தம் வரும்படி ஆட்டுகின்ற பேய்களுக்கு |
| வாரீர் | —கூழ் வழங்குங்கள். 11 |

பெரும் பேய் தனக்கும் வாரீர் } பெரும் பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள். 9

[அ-கை] *சத்தமே பிரம்மமென்று கூறும் வாதிகளைக் கூறல்.*

**465 சுத்தப் பிரம்ம மது நிற்கக்-**
**தொள்ளை செவியி னுணவான,**
**சத்தப் பிரம்ம மென்றேதுஞ்-**
**சளப்பேய் தனக்கும் வாரீரே.**

(இ-ள்) சுத்த பிரம்மம் அது நிற்க } மாயை அதன் காரியங்களான சர்வத்திற்கும் உள்ள அசுத்த மில்லாமல் அதற்கு வேறான சுத்தப் பிரம்மமிருக்கவும்,

தொள்ளை செவியின் —துளையோடு கூடிய காதிற்கு
உணவு ஆன —விஷயமாயிருக்கின்ற
சத்த பிரம்மம் —சத்தமே பிரம்ம சொருபம்
என்று ஓதும் —என்பதாகக் கூறுகின்ற
சளப்பேய் தனக்கும் —பொய்ப் பேய்க்கும்
வாரீர் —கூழ் வழங்குங்கள். 10

[அ-கை] *வெளியில் செய்யும் விக்ரக பூசையைக் கூறல்.*

466 **பணியப் படுவா ருள்ளிருக்கும்-**
**பரதே வதையைப் பாராதே,**
**மணியைத் துலக்கிக் கிணுகிணென-**
**வரும்பேய் தனக்கும் வாரீரே.**

(இ-ள்) பணியப் படுவார் உள்ளிருக்கும் } மனோ வாக்கு காயங்களால் வாழ்த்தி வணங்குபவர் இருதயத்திலங்கும்

பரதேவதையை —மேலான தெய்வத்தை
பாராது —ஆராய்ந்து அறியமாட்டாமல்
மணியை துலக்கி —பூசை மணியை விளக்கி
கிணு கிணு என —கிண் கிண்ணென்று
வரும்பேய் தனக்கும் —சத்தம் வரும்படி ஆட்டுகின்ற பேய்களுக்கும்
வாரீர் —கூழ் வழங்குங்கள். 11

*[அ-கை] சைவ சிந்தாந்த பட்சம் கூறல்.*

**467** **ஞானம் போலே பலசொல்லி**
**நாடற் கரிய முத்தியினும்,**
**தானும் சிவனும் பாசமுமென்-**
**சைவப் பேய்க்கும் வாரீரே.**

| | |
|---|---|
| (இ-ள்) ஞானம் போலே பல சொல்லி | தத்துவ ஞானிகளைப் போன்று, தத்துவங்கள் 36 எனவும், 96 எனவும் கூறுவோராய், |
| நாடற்கு அரிய முத்தியினும் | மனோ வாக்கால் அறிய அருமையாயிருக்கின்ற மோட்ச காலத்திலும், |
| தானும் சிவனும் பாசமும் என் | தேகாபி மானியான சீவனும் ஈசுவரனும் அஞ்ஞானமும் இருக்கும் என்றியம்பும் |
| சைவப் பேய்க்கும் வாரீர் | சைவ சமயர்களாகிய பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள். 12 |

*[அ-கை] நீர்க் குணோபாசகரைக் கூறல்.*

468 **துரியா தீதம் பதினுலிற்-**
**றேன்றி யெவர்க்குந் தோன்றுதோ**
**பெரியார் தம்மை நானென்னும்-**
**பிரமப் பேய்க்கு வாரீரே.**

| | |
|---|---|
| (இ-ள்) துரியா தீதம் பதினுலில் அஞ்ஞான பூமி 7 ஞானபூமி 7, ஆக 14-ல் கடைசி பூமியாகிய பதினுன் காவது துரியோ தீதமாம். | துரியா தீதமாகிய பதிநான்காவதான அவஸ்தானரூப நிர்விகற்ப சமாதியில் |
| தோன்றி | —அபரோட்சமாய் விளங்குவதாயும் |
| எவர்க்கும் | —அதற்கு வேறான பேத வாதிகளுக்கு |
| தோன்றுத | —கோடி சென்மங்களில் முயன்றுலும் வெளிப்படாத |
| பெரியார் தம்மை | —பெரிதுக்கெல்லாம் பெரிதாகிய பிரம்மத்தை |

நான் என்னும் —நானென்று அபிமானித்து தியானிக்கின்ற

பிரமப் பேய்க்கும் வாரீர் } நிர்க்குணப் பிரம்மோபாசகரான பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள். 13

X அஞ்ஞான பூமி 7, ஞான பூமி 7, ஆகப் 14-ல் கடைசி பூமியாகிய பதினான்காவது துரியா தீதமாம்.

[அ-கை] *புத்த மதத்தைக் கூறல்.*

469 வெறுவாய் கொண்டு மென்றுமன-
விகாரங் கொண்டு சிலபிதற்றிப்,
பெறுவா ரன்றி முத்திபெறும்-
பிடகப் பேய்க்கும் வாரீரே.

(இ-ள்) வெறுவாய் கொண்டு மென்று } வெற்றுவாயைக் கொண்டு மெல்லுகின்றதைப் போன்று

மன விகாரம் கொண்டு } விஞ்ஞானமய கோசத்தை மாத்திரம் ஆன்மாவெனக் கூறி

சில பிதற்றி —சிலவற்றை திரும்பத் திரும்பப்பேசி

பெறுவார் அன்றி —அடையக்கூடிய பொருளற்ற சூனியத்தை

முத்தி பெறும் —மோட்சமாயடைகின்ற

பிடகப் பேய்க்கும் வாரீர் } புத்தர்களான பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள். 14

[அ-கை] *லோகாயதன் பட்சம் கூறல்.*

470 உடலை விடுகை முத்தியென-
வுரைத்த வுண்மை யுணராதே,
முடலை யுடலை நானென்னும்-
முழுப்பேய் தனக்கும் வாரீரே.

(இ-ள்) உடலை விடுகை முத்தி என உரைத்த } தூல சூட்சும காரணமான மூன்று தேகங்களையும் விட்டு அதற்கு வேருயிருப்பது மோட்சம் என்பதாக எடுத்துக் கூறுகின்ற

உண்மை உணராதே —எதார்த்த வஸ்துவை அறியமாட்டாமல்

முடலை உடலை —முடை நாற்றமுள்ள தூல தேகத்தை

நான் என்னும் —ஆன்மாவென்று அபிமானிக்கின்ற

முழுப்பேய் தனக்கு வாரீர் } முழுவடிவமாயிருக்கும் லோகாயிதப் பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள் 15

*[அ-கை] வாம மார்க்க பட்சத்தைக் கூறல்.*

**471 தியக்கந் தீர்வார் நன்முத்தி-**
**சேர்வா ரென்னுந் திறங்கேட்டு,**
**மயக்கஞ் செய்யும் வாமப்பேய்-**
**வாய்க்கே நெருப்பை வாரீரே.**

(இ-ள்) தியக்கம் தீர்வார் } ஆத்ம அனுத் மாக்களிலுள்ள சுத்த சுத்தாதிகளை அறிந்து மயக்க மற்றவர்களே.
நன் முத்திசேர்வார் —பேரானந்தமாகிய மோட்சத்தைப் பெறுவார்கள்
என்னும் —என்று வேதாகமங்கள் முரசு அறைகின்ற
திறம் கேட்டும் —உறுதியை கேட்டிருந்தும்
மயக்கம் செய்யும் } சுத்தா சுத்தம் விளங்காமல் உலக செனங்களை மயங்கும்படி செய்து கொண்டிருக்கும்
வாமப்பேய் வாய்க்கே நெருப்பை வாரீர் } வாம மார்க்கப் பேய்களது வாய்களில் அக்கினியை அள்ளிக் கொட்டுங்கள். 16

*[அ-கை] இவ் வுலகில் கடவுள் எங்களுக்கு மட்டும் வந்து உண்மையை உபதேசித்தார் என்று கூறும் முஸ்லீம் போன்ற சில வாதிகள் உண்டென்று கூறல்.*

**472 அச்சந் ததிக ளெல்லாமா-**
**யல்லா திருக்கு மறிஞரையும்,**
**எச்சந் ததியுந் தமக்கேயென்-**
**றியம்பும் பேய்க்கும் வாரீரே.**

(இ-ள்) அச்சந்ததிகள் எல்லாம் ஆய் } அந்தப் பரமாத்மாவின் குரு பரம்பரை முறையாவு முடையவராகவும்,
அல்லாது இருக்கும் —அவற்றைக் கடந்தவராயுமுள்ள
அறிஞரையும் —தத்துவ ஞானிகளையும் (அவமதித்து)
எச்சந்ததியும் —எல்லா குருபரம்பரையும்

தமக்கே என்று — தங்களுக்கே உரிமையாய் உபதேசித்திருப்பதென்று

இயம்பும் பேய்க்கு வாரீர் } கூறுகின்ற ( வேத விலக்கான ) பேய்களுக்கும் கூழ் வழங்குங்கள் 17

## 31 தோத்திரமாகிய குணலே வாழ்த்து.

[அ-கை] *பரிசுத்தஞன சற்குருநாதன், தனையடைந்த அடியார்களுக்கு அருள்புரிய அவர்கள் வாழ்த்தினரெனல்*

**471** நின்ம லன்கருணே யாய டங்கிடவு-
நெஞ்சி றந்திடநி ளேந்தபின்,
பொன்ம லர்ந்தவிரு தாளி னல்லவருள்-
புகழு வாருமுள மகிழவே.

(இ-ள்) நின்மலன் கருணே ஆய் அடங்கிடவும் } விமல தேசிகர் கிருபையினுல் கருணு மூர்த்தியாய் வந்தடைந்த வரியாவரும் சுவானுபவம் பெறவும்

நெஞ்சு இறந்திட } மனமானது தூலத்தன்மை அழிந்ததை

நினைந்த பின் — அறிந்த அடியார்கள் அனைவரும்

பொன்மலர்ந்த இரு தாளின் } பொற்ருமரை மலர்வதொப்ப இரண்டு திருவடிகளில் உண்டான

நல்ல அருள் } நலமிகுந்த அருள் பிரசாதத்தை நினைந்து

உளம் மகிழவே புகழுவார் } மனத்தில் உண்டான சந்தோஷத்தால், தோத்திரம் செய்யலானுர். 1

[அ-கை] *சங்கற்ப விகற்ப மனத்தை மாற்றி ஆட்கொண்ட கிருபையை நினைந்து பாடுவோமென்று ஆரம்பித்து நூல் முடியும் வரை பாடி ஆடி வாழ்த்தின ரெனல்.*

**472** பாவிடை நூல்படு சிந்தையினிற்-
பதைப்பற வந்தப ராபரனுர்,

சேவடி தந்தமை பாடீரே-
செய்ய கருணையைப் பாடீரே.

(இ-ள்) பாவு இடை நூல் படு } பானின்நூல் மத்தியில் ஊடு நூலிருப்பது போல்
சிந்தையினில் பதைப்பு அற } மனத்திலுள் சங்கற்ப விகற்பமான பதறுதல் நீங்கும்படியாக
வந்த பராபரஞர் } எழுந்தருளி, பரமாயும் அபரமாயும் உள்ள குருபரர்
சேவடி தந்தமை பாடீர் } திருவடிகளை அபயமாகக் கொடுத்து இரட்சித்தமையை புகழ்ந்து பாடுவீர்களாக
செய்ய கருணையை பாடீர் } அழகிய பெருங் கிருபையைப் புகழ்ந்து பாடுங்கள் 2

473 மீட்ட விரகினைப் பாடீரே-
விளம்பிய தொன்றென்று பாடீரே,
நாட்ட வருளினைப் பாடீரே-
ஞான விநோதனைப் பாடீரே.

(இ-ள்) மீட்ட விரகினை பாடீர் } சமுசார பந்தத்திலிருந்து விலக்கிய சாமார்த்தியத்தைப் புகழ்ந்து பாடுங்கள்
விளம்பியது ஒன்று என்று பாடீர் } உபதேசித்தது ஒரு பொருளே (நாநாவென்பது இல்லை) என்றருளியது புகழ்ந்து பாடுங்கள்
நாட்ட அருளினை பாடீர் } கிருபா திரிஷ்டி வைத்த கருணையை புகழ்ந்து பாடுங்கள்
ஞானவிநோதனை பாடீர் } ஞானத்தையே சொல்லியும் நினைந்தும் காலங்களிப்பவரான குருநாதனைப் புகழ்ந்து பாடுங்கள் 3

474 என்னையொ ழித்தமை பாடீரே-
யென்னுயி ருண்டமை பாடீரே,
தன்னைய ளித்தமை பாடீரே-
தத்துவ நாதனை பாடீரே.

| | |
|---|---|
| (இ-ள்) என்னை ஒழித்தமை பாடீர் | தூலாதி தேகாபிமானத்தை நீக்கிய தன்மையை புகழ்ந்து பாடுங்கள் |
| என்னுயிர் உண்டமை பாடீர் | யான் சிவனென்கிற அபிமானத்தை நாசமாக்கிய பெருமையை புகழ்ந்து பாடீர் |
| தன்னை அழித்தமை பாடீர் | சச்சிதானந்தமாகிய தனது சொரூபத்தை நமக்களித்த பெருமையை புகழ்ந்து பாடுங்கள் |
| தத்துவ நாதனை பாடீர் | உண்மையை உபதேசித்த சற்குரு நாதனை புகழ்ந்து பாடுங்கள் |

475 துன்னிநி றைந்தொழி யாதுநின்ற-
சொருபா னந்தச் சுடர்வையந்
தன்னின டந்தமை பாடீரே-
தானென்னை யாண்டமை பாடீரே.

| | |
|---|---|
| (இ-ள்) துன்னி | நெருக்கமாகவும் பூரணமாகவும் |
| நிறைந்து ஒழியாது நின்ற | —நீங்காததும் நிலைபெற்றதுமான |
| சொருபானந்த சுடர் | ஆனந்த சுயம்பிரகாச சொருபமானது |
| வையம் தன்னில் நடந்தமை பாடீர் | பூலோகத்தின்கண் அவதரித்து அருள் செய்த தன்மையை புகழ்ந்து பாடுங்கள் |
| தான் எனை ஆண்டமை பாடீர் | சற் குருநாதன் என்னையும் ஆட்கொண்ட கருணையைப் புகழ்ந்து பாடுங்கள். 5 |

476 ஞானமு ஞேயமு நானுமென்று-
நாடிட வொன்றின்றி நிலைறதுநாம்
ஆனமு முநலம் பாடீரே-
யல்லதில் லாதமை பாடீரே.

| | |
|---|---|
| (இ-ள்) ஞானமும் ஞேயமும் | அறிவும் அறியப்படும் பொருளும் |

| | |
|---|---|
| நானும் என்று | அறிபவனும் என்கின்ற முப்பொருளும் |
| நாடிட ஒன்று இன்றி | —விசாரிக்கும்போது தோற்றமின்றி |
| நின்றது நாம் ஆன முழு நலம் பாடீர் | நிலைபெற்றிருந்த சொருபமே நாமாகிய பூரண நலத்தைப் புகழ்ந்து பாடுங்கள் |
| அல்லது இல்லாமை பாடீர் | தானல்லாது (எப்பொருளும்) வேறின்மையைப் புகழ்ந்து பாடுங்கள்; 9 |

477 மதியிலி யாவுழல் கின்றநம்மை
மாநுட னயவ னாளவந்த
அதிசய மேநினைந் தாடீரே
யார்த்தெழுந் தார்த்தெழுந் தாடீரே

| | |
|---|---|
| [இ-ள்] மதி இலியா | —ஆத்மானாத்ம ஞானமின்றி |
| உழல்கின்ற | —பிறப் பிறப்பிற் சுற்றுகின்ற |
| நம்மை | —நம்போன்ற விவேகமற்றவர்களையும் |
| மாநுடன் ஆய் | —மண்ணுலகில் மனித வடிவமாய் |
| அவன் | —அந்த பரம் பொருளே |
| ஆளவந்த | —ஆட்கொள்ள எழுந்தருளிய |
| அதிசயமே நினைந்து | இந்தாச்சரியத்தை எண்ணி எண்ணி |
| ஆடீர் | —விளையாடுவீர்களாக |
| ஆர்த்து எழுந்து | —கைகோர்த்தெழுந்து |
| ஆர்த்து எழுந்து | —கைகோர்த்தெழுந்து |
| ஆடீர் | —விளையாடுவீர்களாக. 7 |

478 என்றிவை யேமிகப் பாடிப்பாடி
யெழுந்துவி ழுந்தெழுந் தாடியாடி
நன்றித ருங்கண மானதெல்லா
நாநா விதம்பட நட்ட மிட்டே.

| | |
|---|---|
| [இ-ள்] என்று இவையே | எண்பதான இப்புகழையே |

| | |
|---|---|
| மிக பாடி பாடி | —மிகவும் மீண்டும் மீண்டும் பாடியும் |
| எழுந்து விழுந்து எழுந்தும் ஆடி ஆடி | எழுபவராயும் மீண்டு விழுந்தெழு பவராயும் விளையாடி விளையாடி |
| நன்றி தரும் கணம் | —நலமுண்டாக்கும் சற்சங்கம் |
| ஆனது எல்லாம் | —ஆகிய கூட்டமனைத்தும் |
| நாநா விதம்பட நட்டம் இட்டு | பலவிதமாயிருக்கின்ற நடனங்கள் ஆடினவராய், இது குளகம். 8 |

479 வரவுசெல வுறுபழைய வழியொழிய மொழியும்,
குரவனடி பரவியிடு குணலைபல பலவே.

| | |
|---|---|
| (இ-ள்) வரவு செலவு | கர்மத்தால் வந்து போகும் பிறப்பிறப்பாய் |
| உறு பழைய வழி | —பொருந்திய அநாதியான மார்க்கம் |
| ஒழிய மொழியும் | அழியும்படி தத்துவ ஞானோப தேசஞ் செய்த |
| குரவன் அடி | —சற்குருநாதன் திருவடிகளை |
| பரவி இடு குணலை பல பலவே | வணங்கி வாழ்த்திக் கைதட்டிப் பாடி யாடும் ஆடல்கள் பற்பல. 9 |

480 உரைகழிய வுளமழிய வுணர்வழிய வணையுங்,
குரைகழல்கள் பரவியிடு குணலைபல பலவே.

| | |
|---|---|
| (இ-ள்) உரைகழிய | —வாக்கு மோனமுறவும் |
| உளம் அழிய | —மனம் சங்கற்ப விகற்பமறவும் |
| உணர்வு அழிய | —நாம ரூபப் பிரபஞ்ச ஞானமறவும் |
| அணையும் குரை கழல்கள் | அடையப் படுவதான சிலம் பொலிக்கின்ற சற்குருநாதன் திருவடிகளை |
| பரவி இடு குணலை பல பலவே | வணங்கி வாழ்த்தி வீராவேசத் துடன் கர்ச்சித்தாடு மாடல் பற்பலவாம். 10 |

481 மதமதென விழிசொரிய மயிர்புளகம் வரவே,
குதுகுதென வுளமுருகு குணலைபல பலவே.

(இ-ள்) மதமதென —மதமதென்றீர் அடுக் கொலியுடன்
விழிசொரிய } இரு கண்களில் நீர் தாரை தாரை யாகப் பெருகவும்
மயிர்புளகம் வரவே —ரோமம் சிலிர்ப்பு உண்டாகவும்
குது குது என —குதுகுதென்றீர்அடுக்கொலியுடன்
உளம் உருகு } மனமிகுந்த விருப்புடன் கரைந்து உருகி
குணலே பல பலவே } கைதட்டிக் கூவுகின்ற கூற்று பற்பலவாம். 11

482 கொடியபவ முடிவுசெய்த குரைகழல்கள் பரவா,
முடியவிவ ரிடுகுணலே மொழியமுடி விலதே.

(இ-ள்) கொடிய பவம் } கொடும் பிறப்பை
முடிவு செய்த —நாசமாக்கிய
குரை கழல்கள் —சற்குருநாதன் திருவடிகளை
பரவா முடிய இவர் —போற்று நின்ற இவர்களெல்லாரும்
இடு குணலே —செய்கின்ற வீராவேசக் குரலானது
மொழிய முடிவு இலது—நம்மாற்கூற முடியாததாகும். 12

483 பிணக்குறு மாறுச மயங்கத்திப்-
பேரிருள் சேர்மனங் கொண்டுநின்று,
கணக்கிடு மாறுத விர்த்தபிரான்-
கழலிணை பாடிக்க ளித்தனரே.

(இ-ள்) பிணக்கு உறும் } பரஸ்பரம் வாதப்போர் செய்து கொண்டிருக்கும்
ஆறு சமயம் கத்தி } சைவம், வைணவம், சௌரம், கணபத்தியம், கௌமாரம், சாத் தேயம் என்னும் ஆறு மதங்களும் தர்க்கம் பேசி
பேர் இருள் சேர் மனம் கொண்டுநின்று } மிகுந்தறியாமையைச் சேர்ந்த மனத்தோடு கூடியிருப்பவர்களால் (குருடர் கண்ட யானை போல்)

| | |
|---|---|
| கணக்கு இடுஆறு | பரம்பொருளைப் பார்த்து அளவிடுந் தன்மையை |
| தவிர்த்த பிரான் | —விலக்கிய சற்குருநாதனது |
| கழல் இணை பாடி களித்தனர் | திருவடிகளை தோத்திரஞ் செய்து சந்தோஷமடைந்தனர். 13 |

**484** பாசமல வறவருளு பார்வையான் வாழியே-
பாடுமதை முடிவினட மாடுவான் வாழியே,
வாசமல ரெனமுழுது மேவினுன் வாழியே-
மாகரறி வரியவிரு தாளினுன் வாழியே,

| | |
|---|---|
| (இ-ள்) பாசமலர் அற அருளும் | அஞ்ஞானத்தோடு பாவத்தையும் நாசமாக்கிய |
| பார்வையான் வாழியே | கிருபா திருஷ்டியுடையவன் வாழட்டும் |
| பாடும் மறை முடிவில் நடனம் ஆடுவான் வாழியே | சந்தத்தோடு ஓதுகின்ற வேத வேதாந்தங்களின் சிரத்தில் நடனம் புரிகின்றவர் வாழட்டும் |
| வாசமலர் என முழுதும் மேவினுன் | மணமும் மலரும் சேர்ந்திருப்பது போல் சர்வத்திலும் நிறைந்திருப்பவன் வாழட்டும் |
| மாகர் அறிவு அரிய இரு தாளினுன் வாழியே | தேவர்களாலும் அறிதற்கரிய இரண்டு திருவடிகளை உடையவன் நீடூழி வாழட்டும். 14 |

**485** கோசமொடு முழுதுமற நூறினுன் வாழியே-
கூறவிர கரியமொழி யோதினுன் வாழியே,
நாசமறு மறிவுருவ மாயினுன் வாழியே-
நாடிலது கழலநிகழ் மேனியான் வாழியே.

| | |
|---|---|
| (இ-ள்) கோசமொடு முழுவதும் அற நூறினுன் வாழியே | பஞ்ச கோசங்களோடு மாயை மாயா காரியங்கள் அனைத்தும் இன்றி நாசமாக்கினுன் வாழட்டும் |
| கூற விரகு அறிய மொழி ஓதினுன் வாழியே | உபதேசிக்கும் உபாயம் இன்றிய மகா வாக்கியத்தை உபதேசித்த வள்ளல் வாழட்டும் |

| | |
|---|---|
| நாசம் அறும் அறிவு உருவம் ஆயினன் வாழியே | என்றும் அழிவற்ற ஞானவடிவமாக நிலை பெற்றவன் வாழட்டும் |
| நாடில் அது கழல நிகழ் மேனியான் வாழியே | ஆரா்யும்போது யாவும் நிவர்த்தி யாக சச்சிதானந்த சொருபனக விளங்கும் சற் குருநாதன் வாழட்டும். 15 |

486 நினையு மாற தின்றி நின்றி லங்கு சோதி வாழியே-
நேச மோடு மீச னென்ன நெஞ்சி லாத வஞ்சனும்,
எனையு நீதி யன்ப ரோடு வந்த நாதன் வாழியே-
யென்னை யாள வந்த கோல மென்றும் வாழி
வாழியே.

| | |
|---|---|
| (இ-ள்) நினையும் ஆறது இன்றி நின்று இலங்கும் சோதி வாழியே | மனத்தால் நினைக்கும் தன்மை இல்லாது நிலை பெற்று விளங்கா நின்ற சுயம் பிரகாச சொருப சற்குரு நாதன் வாழட்டும். |
| ஈசன் என்ன நெஞ்சு இலாத வஞ்சனும் எனையும் | பரமேஸ்வரன் என்றென்னும் மனம் இல்லாத கபடனுகிய என்னையும் |
| நீதி அன்பரொடு உவந்த நாதன் வாழியே | நெறியோடுள்ள மெய்யடியார் களோடு சேர்த்து மகிழ்ந்த தலைவன் வாழட்டும் |
| என்னை ஆளவந்த கோலம் என்றும் வாழி வாழியே | எனையாட்கொள்ளும் பொருட்டெ ழுந்தருளிய திருமேனியானது நீடூழி காலம் வாழட்டும் வாழட்டும். 16 |

487 பந்த பாசம் வேரொ டும்ப றித்து வீழ வென்முடி,
தந்த பாதம் வாழி யேச மைந்த பார்வை வாழியே.

| | |
|---|---|
| (இ-ள்) பந்த பாசம் | அஞ்ஞானமும் அதன் கட்டுகளும் |
| வேரொடும் பறித்து வீழ | அடியோடும் பறித்தழியவும் |

| | |
|---|---|
| என் முடி தந்த பாதம் வாழியே | எனது சிரமீது சூட்டிய திருவடிகள் வாழட்டும் |
| சமைந்த பார்வை வாழியே | பரிபக்குவம் அடையும்படி, திருக் கண் வைத்த கிருபா திருஷ்டி வாழட்டும். 17 |

488 வைத்த வைத்தகண ழித்தவடி வாழியே-
வைப்பி லாதகண ளித்தவடி வாழியே,
எத்தி முத்தியரு ளீசனடி வாழியே-
யென்னை யாளுடைய வெந்தையடி வாழியே.

| | |
|---|---|
| (இ-ள்) வைத்த வைத்த கண் அழித்த அடி வாழியே | காணப்பட்ட திருசியக் காட்சிகள் அனைத்தையும் பொய்யொழித்த சற்குருநாதன் திருவடிகள் வாழட்டும் |
| வைப்பு இலாத கண் அளித்த அடி வாழியே | திருசிய நோக்கில்லாத ஞானக்கண் கொடுத்தருளிய சற்குருநாதன் திருவடிகள் வாழட்டும் |
| எத்தி முத்தி அருள் ஈசன் அடி வாழியே | அஞ்ஞானவரணங்களை அடியோ டழித்து மோட்சமளித்த பரமேஸ் வரன் திருவடிகள் வாழட்டும் |
| என்னை ஆளுடைய எந்தை அடி வாழியே | எளியேனையும் ஆட்கொண்ட சற் குருநாதன் திருவடிகள் வாழட்டும். 18 |

489 சுத்தம றைதொடர்ந்த தாளினன் வாழியே-
துற்றுவரும் பெரும்பவ நாசனீ வாழியே,
தத்துவ நெறிதிறந்த சேவகன் வாழியே-
தற்கச மயசண்ட மாருதன் வாழியே.

| | |
|---|---|
| (இ-ள்) சுத்த மறை தொடர்ந்த தாளி னன் வாழியே | வேதாந்த மகா வாக்கியங்களினல் விட்டு விடாத லட்சணையால் விளங் கிய திருவடிகளுடைய சற் குருநாதன் வாழட்டும் |

| | |
|---|---|
| துற்றுவரும் பெரும் பவநாசன் நீ வாழியே | நெருக்கமாய் வாரா நின்ற பெரிய (ஏழ்வகை) ப் பிறவியை நாசம் செய்த தேவரீர் வாழவேண்டும் |
| தத்துவ நெறி திறந்த சேவகன் வாழியே | உண்மையான மார்க்கத்தைத் திறந்து வைத்த வீராதி வீரனே வாழுங்கள் |
| தற்க சமய சண்ட மாருதன் வாழியே | நியாய சாஸ்திர கண்டனத்தில் புயல் போன்ற சற் குருநாதனே தாங்கள் வாழவேண்டும். 20 |

490 வாழிதங் குருபரன் மெய்ப்பத்த ரானவர்
வாழிமறை துணிபொருள் சித்தித்து வாழ்பவர்,
வாழிபர மானந்தங் தித்திக்க வாழ்பவர்-
வாழிசொரு பானந்தன் தத்வப்ர காசனே.

| | |
|---|---|
| (இ-ள்) தம் குருபரன் வாழி | தங்கள் குருநாதன் வாழட்டும் |
| மெய்ப்பத்தர் ஆனவர் வாழி | மெய்யடியார்கள் வாழட்டும் |
| மறை துணி பொருள் | வேத வேதாந்தங்களின் மெய்ப் பொருள் |
| சித்தித்து வாழ்பவர் வாழி | கைவரப் பெற்றவர்கள் வாழட்டும். |
| பரமானந்தம் தித் திக்க வாழ்பவர் வாழி | சீவன் முத்தி சுகமான விலட்சணநந் தம் இரமித்தநுபவிப்பவர்கள் வாழட்டும் |
| சொருபானந்தன் வாழி | எனது சற்குருநாதன் வாழட்டும் |
| தத்துவப் பிரகாசன் வாழி | எனது பரமகுருநாதன் வாழட்டும். 21 |

---

அஞ்ஞவதைப் பரணி மூலமும், உரையும் - சம்பூரணம்
ஆகப்பிரிவு 31க்கு செய்யுள் 494. சற் குருநாதன் துணை.

---

விடுபட்ட பாட்டுகள் 2 இங்கே போடப்பட்டுள்ளன.

## 16. அஞ்ஞுன் சரிதை

ஓதலும் உணர்தலும் உணவு சுட்டியே
சாதலும் பிறத்தலும் தவிர்க்க வல்லவே. 17

## 19 ஞான விநோதன் படைச் செருக்கு

வைதாரை வாழ்த்தினர்போன் மதித்தென்று மறக்
கொடுமை,
செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல். 29

## வெண்பா

தரணிபுகழ் தத்துவனர் தாமுரைத்த ஞானப்
பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்த்தால், - கரணமுடன்
சேர்ந்துமண வாத சிவமணமே பூரித்த
சாந்தமண நாறுமே தான்.

## குருஸ்துதி

பாச மனைத்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி
நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்
பேசு மேழ்வகைப் பிறப்புனக் கில்லையெனப் பேசி
தூசு நீக்கிய சுயஞ்சிதா காசனைத் தொழுவாம்.

உ

ஸ்ரீ ராமஜெயம்

# அஞ்ஞவதைப் பரணி கவி-494

## முதற் குறிப் பகராதி

அஞ்ஞவதைப் பரணி முதற்குறிப்பு முற்றுப்பெற்றது.

# அஞ்ஞவதைப் பரணி மூலமும், உரையும்.

| பக்கம். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 148 | 8 | திக்களும் | திக்குகளும் |
| 150 | 14 | யாருப | யாரும் |
| 31 | 19 | கூறு | கூறும் |
| 34 | 23 | கேட்டிருப்பின | கேட்டிருப்பன |
| 36 | | மீண்டும் பார்க்கில் | நன்றாய் அறியென்றால் |
| 37 | 20 | அறிந்தர் | அறிந்தவர் |
| 39 | 4 | உள்ள்வன | உள்ளன |
| 40 | 20 | கட்டாததும் | எட்டாததும் |
| 54 | 20 | கூறுவார் எனல் | கூறுவார் யாவரெனல் |
| 55 | 3 | அதடத்துள்ள | அதனிடத்துள்ள |
| 63 | 15 | உருதேனே | உறாதேனே |
| 64 | 22 | யாதாலும் | யாதானும் |
| 69 | 1 | ஆறு | ஆளு |
| 71 | 30 | ரிடபத்திலிம் | நிடபத்திலும் |
| 72 | 15 | அஞ்ச | அஞ்சா |
| 76 | 27 | தேவின் | தேவியின் |
| 77 | 13 | கோள | கேமளா |
| 79 | 11 | பற்றவர் | பற்றற்றவர் |
| 92 | 30 | திருவடிகளா | திருவடிக்காளா |
| 107 | 25 | அகம் | அகழ் |
| 110 | 2 | உருமிக்கா | உவமிக்க |
| 111 | 23 | இற்ற | அற்ற |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 117 | 21 | அருநான | அருநான் |
| | 24 | பிறவு | பிறவி |
| 128 | 14 | மடையார் | அடையார் |
| 144 | 12 | நீக்கிவன | நீக்குவன |
| 154 | 3 | பிதற்றிவர் | பிதற்றுவர் |
| | 22 | அறுத்தெரியுமாம | அறுத்தெரியும் |
| 156 | 4 | செயலும் | செயலாவதாம் |
| 158 | 17 | அபவிப்பேன் | அநுபவிப்பேன் |
| 162 | 6 | தளராது | தவிராது |
| 172 | 27 | கொடுவீர் | கெடுவீர் |
| 187 | 1 | அரன் | அறன் |
| 190 | 11 | திழமை | இளமை |
| 198 | 2 | சுடர்ட்டு | சுடர் விட்டு |
| | 22 | உதயமா | உதயமான |
| 199 | 4 | அவாச்சியம் | வாச்சியம் |
| 201 | 21 | அறிமல் | அறியாமல் |
| 204 | 30 | இப்பது | இருப்பது |
| 210 | 11 | ருக்கின்ற | இருக்கின்ற |
| 216 | 23 | முய்வதற்காவும் | முய்வதற்காகவும் |
| 223 | 17 | விட்டி | விட்டு |
| 234 | 10 | மனமருகி | மனமுருகி |
| 247 | 5 | அழித்தனை | அளித்தனை |

குமாரபாளையம்

ஆனந்தாஸ்ரமத்தின்

ஸ்தாபகர்



கோவிலூர் மரபு

# ஸ்ரீலஸ்ரீ இராமசாமி சுவாமிகள்

அவதாரம் : துன்முகி ஞு வைகாசி மீ 8-ம் தேதி 1896

மஹாசமாதி : ஜெய ஞு வைகாசி மீ 7-ம் தேதி 1954